நாடெலாம் விளைவி னீட்ட நகரெலாம் பொருளின் கூட்டங்
காடெலா மலர்ப்பூஞ் சோலை களனெலாம் பிறங்கு நெற்போர்
மாடெலாந் தரும சாலை மறுகெலா மணிக்கு வால்கள்
பாடெலா நாடும் போற்றிப் பணிதிருச் சோழ நாடு. (௧௬)

கற்பகப் பொங்க ரெங்குங் கற்பக வல்லி யெங்குங்
கற்பகல் லூரி யெங்குங் கற்பக மாத ரெங்கு
மற்பக மாந்த ரெங்கு மற்பக மறங்க ளெங்கும்
பொற்பக மாட மெங்கும் பொற்பகன் மணிக ளெங்கும். (௧௭)

காத்திர நீழ லெங்குங் காத்திர வளங்க ளெங்குங்
காத்திர சுகங்க ளெங்குங் காத்திர வாமை யெங்குங்
கோத்திர குலங்க ளெங்குங் கோத்திர நலங்க ளெங்குங்
கோத்திர மேன்மை யெங்குங் கோத்திரன் பொழியா லெங்கும். (௧௮)

பார்ப்பவர் கண்கட் கென்றும் பசுமையே தோன்றும் யாண்டும்
பார்ப்பயிற் பயிர்முன் றேவ பவனொடே பல்கும் யாண்டும்
பார்ப்பணி யாதி தாமும் பல்றுறை நுகர்வ யாண்டும்
பார்ப்பனச் சாதி யாதி பகர்நெறி தவறா யாண்டும். (௧௯)

திராவிட வேதம் போற்று திருத்தகு மூர்த்தி பீட்டந்
திராவிட வேதம் போற்று திருத்தாங்க டிருத்த லங்கள்
பரவிட மிடங்க டோறும் பல்குவ சோறுட் டென்று
பாவிடல் யாரு நேரே பார்க்கலா மின்று மென்றும். (௨0)

பரவுறு சரியை யாதி பக்குவர்க் கருண்மெய் ஞான
குரவர்தம் மினங்கள் வாய்மைச் சங்கம குலங்க ளாதி
வயங்குங் கூட்டங் கூட்ட மாத்தொகு வகையிற் கன்றிப்
பரவுமெந் நாட்டு மின்றுற் பார்க்கலா மின்று மென்றும். (௨௧)

இன்னநாட் டியற்கை யாரே யிசைக்குநர் தொகுத்தி யாவு
மென்னநாட் டிதுவே முட்டி னிதுவே யின்ப நல்கிப்
பொன்னிநாட் டிடங்க டோறும் பொய்யறு முனிவர் வாக்கின்
மன்றுவார் வளமுன் னேர்ந்த வகையொரு சிறிது ரைப்பாம். (௨௨)

மழைவளம்.

உருவநா லருவ நாலென் றோதிய வுபய காய
வொருமையும் பொதுமை யாகி விளங்கெழிற் சதாசி வன்றன்
பெருகொளிப் பளிங்கின் றோற்றம் பிறங்கிவின் றோக் கீசானத்
திருமுகப் பிரதி விம்ப மென்னவான் சேணிற் சென்ற. (௨௩)

நமதன்ப னுசை மித்த நாலைபவ் வானை நீக்துக்
கமையம்பு கொண்டு பின்னுங் களிப்பது காண்டு மென்று
வுமையன்ப னீற்றுக் கோலத் துற்றெழுறித் திடனேர் சொன்றுங்
கிமையம்பு தஞ்சே ணின்று மெறிதிரைக் கடல்புக் கன்றே. (௪௪)

கருங்கட றரங்கக் கையாற் காமரு தாளமாதி
யிருங்கழ லிறைஞ்சித் தாவி யிரத்தலி னரற்றல் கேளா
வொருங்குணு திரங்கி யெம்மா னுெழிந்தென வெழுந்து வானின்
வருங்கனம் வேண்டுங் காறு மாந்திமே லெழுந்த மாதோ. (௪௫)

வாரிதி குழியப் புக்கு வாரிவாய் மடுத்த வானந்
தேரிய விறைய கோரத் திருமுக காந்தி போந்தெங்
காரிய வுருவாய் வாமக் கதிர்முகச் செம்மை வாய்ந்தாங்
கேரியல் சம்பை யீட்ட மெங்கணும் பாப்பிற் றன்றே. (௪௬)

மதிநதி யிதழி வேணி வானவன் காத்தெஞ் ஞான்றும்
பொதுமையி னிருமை யாய புற்கல வர்க்க மெல்லா
மதிர்தரு தமரு கத்தி னழைத்தரு ளொலியே யென்னக்
கதிர்விசும் பெமுசீ மூதங் கனையொலி பெருக்கிற் றன்றே. (௪௭)

கறைமிடற் றிறைவன் மத்த கயத்துரி யெடுத்துப் போர்க்கு
முறையென விமிருஞ் சைய முதுவரை யெங்கு மூழ.
நிறையொளி நீல்வி தான நித்திலத் தொடைநி ரைத்தாங்
குறைமலி தாரை யாண்டு மொய்யெனப் பெய்யா நின்ற. (௪௮)

இறையமர்ந் தினிது வாழ்வெற் பிருஞ்சிற காரிந்தோ பிந்த
மிறையொழிந் துய்து மென்று விண்ணிறை மணிக்குடத்தி
னறைகடற் கூவத் தானை யாங்கயி றமைத்தெ டுத்துக்
குறைதப வாட்ட லேப்பக் கொண்டனீர் விண்ட மாதோ. (௪௯)

போற்றிய சதாசி வன்றற் புருடவா சியம்போற் பொன்னின்
றேற்றமிக் கிலங்கு சாபந் துலக்குவான் பெய்யநீ ரன்றேனுன்
பாற்றிகழ் சத்தி யோசா தம்முக நிறப்ப ரப்பின்
வீற்றுவீற் றருவி சைய வெற்பிட மெங்குங் காட்டும். (௫௰)

விண்ணுயர் சைய நாம வெற்பிருஞ் சிங்கொ டுத்துத்
தண்ணிய சாரல் காறுஞ் சதமக னிதம தாகக்
கண்ணறுந் தளவு மல்லி கைத்தொடை சாத்தி யேத்தும்
பண்ணிசை யென்னச் சூழ்ந்த பாவுநீ ரருவி யோதை. (௫௧)

தணையுறு வலியில் சீவர் தமையுமாற் சார மென்ன
வினிதெடுத் தமுக்க கற்றி யின்பரு ளாசான் போலக்
கனைகுயி லுவவொா ழித்துக் கான்றநீ குலை மெல்லா
நனியுணு மமுத மாகி நாளிலைத் தொழுகிற் றன்றே. (கஉ)

நிலையிலா வுடலங் கையி னேர்ந்தவக் கணமே மீக்கோர்
நிலையிலா வுடலங் கையி னெறியிலுய்த் துய்த்து மென்னு
நிலையிலார்க் களித்தல் போல நீள்பயோ தரநீர் * பெற்றந்
நிலையிலாங் கெஞ்சா நீத்த நீத்தமா வளித்த மன்றே. (கங)

கணைக்தொடு மாறி மாறிக் கருதாமுன் னரத்தின் † மாலை
‡ புணர்ந்திரு விதிசெல் வப்பே குற்றதை யுதவுவோனை
மணைந்தரு சீர்த்தி போர்த்தன் மானநீர் முழுதும் வானந்
தணைந்துற வளித்துமேனி தவளம்போர்த் தாங்கு கின்ற. (கச)

பொருள்படைத் தருளா ரெய்தும் புன்மையு மனித்தார் தூய்மை
மருவலுங் காட்டி யாங்கு வாரியுண் டேருங் காரு
யிருளுறீஇச் சைய மால்வெற் பெய்திநீர் பெய்த மாரி
தெருள்பெறு தூய்மைத் தாகித் திகழ்ந்துவான் சென்ற வன்றே. (கரு)

உடல்பெறுங் கணத்த றத்தி லுதவுறா னொறியென் றியாமில்
விடைபெயி னியாச் செல்வர்க் கிந்தா யறனுயின் ருயக்
கடல்புரு முரை மெல்லாங் களிக்கநீ ரளிக்கும் வெற்பென்
றடையாளன் கொடைசெய் கொண்மூ வமலையா யகல்வான் சென்ற. ( )

உருவுடைச் சீவர் யார்க்கு முதவிய வுருக்கொண் டு§ டெய்தும்
பரமன்யா மனைனி லன்றேர் பயன்பெற வுருவு கொண்டு
வருவதே முறையென் றெம்மான் மலியருள் பிரவ கித்தாங்
கொருவுறச் சைய வெற்பி னொழுகுமா லருவி நீத்தம். (கஎ)

மான்மாட் டினித மர்ந்தே யிலையினீன் மலைய வெற்பின்
வாசமுறு கமண்ட லத்தின் மந்திர நீர தாகித்
தேசமார் கவேரை னீன்ற செல்வெனத் திருவு ளங்கொண்
டாசில்பூ முதல்வ னர்ப்பா னளித்ததித் தெளித்த நீத்தம். (கஅ)

---

* பெற்றமென்றும் பெயரெச்சத்தகரந்தொக்கது.
† மாலை - தன்மையுமாம்.
‡ உணர்தல் இரண்டிடத்தும் பொருடந்துநின்றது.
§ எய்தும்வினைமுற்று.

இந்நதி சைய வெற்பி னிடையமர்ந் தருவி யாக
மன்னியே குறுமா லீது மந்திர தோய * மாஞற்
பன்னுமைந் தொழிலுந் தானே பண்ணுமென் றியம்ப லென்றும்
பொன்னிகா விரிமுன் ஞமம் புகல்பவிப் பொருவி லீர்க்கு. (உகூ)

நதியெலாந் துதிசெய் கங்கா நதியுறீஇ நதிசெய் பொன்னி
நதியினோர் கூற்றுக் கொப்பா நவில்வதும் பழுதா மென்னே
நதியிவை யிரண்டும் பூவி னடக்குங்கா ரணத்தை நோக்கி
நதிவரன் றலையன் னோர்மெய்ந் நாவெடுத் தியம்பு முண்மை. (ஙய)

பிறந்திறந் துழலுந் தேவர் பேறுமூ ரமர்ந்த கங்கை
விறந்துபா ரகசு வேண்ட மென்சடை யுறிக்குட் டெந்தி
பிறந்தொரு முனிவன் மிச்சி லாகிப்பின் காதிற் போந்தே
யிறந்தவர் சாம்ப லென்பி னெய்திய நிலைத்த கங்கை. (ஙக)

பொன்னிமா நதியிப் பாரிற் போந்தருள் புனித மேன்மை
முன்னொரு வாறி சைத்தா முமவொனுறிக் தோர்ந்திப் பொன்னி
தன்னிலை யுணர்க வானீர் தானுமோர் சிறிதொல் வாவிக்
நன்னதி மேன்மை யோரா நாயினே னவில்வ தெங்ஙன். (ஙஉ)

வானிடைத் தாரை யாகி மலையிடை யருவி யாகி
மானிலத் திடையே யாறு வாவியாழ் கூவ லோடை
கானிலைத் தடமுன் ஞமங் கடற்புன லொன்றே யொன்ற
தானிடைப் பரமன் சீவர்க் கருட்பெறும் பேர் போல. (ஙங)

கருமுகி லாய மத்த கயமிவர்ந் தப்பு மாரி
பெருகவில் வாங்கி மின்வாள் பிறக்குநா லெனும்பொன் மேனி
யாசுறக் கண்ட வேனி லாங்குறும் படங்கித் தேய்ந்து
சுரநிலத் தோர்காற் சென்னி தூக்கிநீர் நோக்கி மாயும். (ஙச)

பெரியவர் முனியி னும்பின் பேறினி தடைத ரின்னைத்
தெரியுறப் பொன்னி யீர்த்துச் செல்லினை பிரிந்த தம்மே
னரிணநேர் புகுந்தோர் பாங்கின் படைந்ததால் வாத வுமெய்ம்
புரவல ரொழுத்தா லொன்றும் போதுமென் றருளிற் றேர்ந்தாம். ( )

கணிமலர் காசா கொன்றை கவின்பலா சலர்பூ முல்லை
யணியணி பரவப் போர்த்தாங் கைவருந் தாறு மைந்து
பணிகளுந் தானே செய்யும் பான்மைநேர் காட்டி. யோரு
மணிகொழித் திலகும் பொன்னி மந்திரக் காக தீர்த்தம். (ஙசா)

*ஆறல் என்பது ஈண்டுதேற்றப் பொருட்டது.

ஆக்கமு மறையு முண்டா மானரு ளொன்றிற் சூழ்ந்தோர்
நீக்கொணு நிலையர்க் கென்றன் மெய்ம்மையே தருப்பை யாதி
தாக்குநீர்ப் பொன்னி முன்னந் தாழ்ந்தது விருத்தி யாய
மேக்குற நிமிர்த ருக்கள் விளைந்தன வேர்கீண் டம்ம. (௪௭)

கடிகமழ் மாதர் மேனி காட்டெழின் மலர்ச்சு ராவி
னொடிவின்மஞ் ஞரிகள் புன்னை யொண்டுண ருடன்கொண் டேகும்
படியினீள் பொன்னி காட்டும் பசும்பொன்முத் தாதி பூண்டு
நெடியதண் புனற்ச ரிக்கு நீரா மகளிர் தோற்றம். (௪௮)

வேறு.

மூவரு முறையே யொருதொழி லியண்டு முத்தொழிற் குரியராய்த் தூரிய
தேவினி லொடுங்கல்காட்டிடுங் குறிஞ்சித் திணையிலவ்வொருவரைப்பொருளோ
டாவகத் தியன்று பலையின்முப் பொருளோ வருபு காட்டியீர்த் தேகி
யோவற வலைமுற் றுதரியிற் புகுமா றுய்த்தறும் பைந்தநீர்ப் பொன்னி.

வேறு. குறிஞ்சி.

ஐந்திணையின் முதற்றிணையி னசலமான் மடிணைபேரின் பமைதி தேற்று
மைந்தரிணை விழைந்திலைற நலத்திணையென் றுறைவின்முன் னுறுதென் றறிச்
செந்தழலாய்ச் சக்கமல திந்திடையா னந்தமயத் திரட்சி யாய
சந்தரியை யமர்ந்தருளே சாந்தவிக்கப் பெறுங்குறிஞ்சித் தாயவைப்பு. (௫௦)

வேறு.

பூந்துணர்ப் பொதுளுஞ் சோலைப் புடைசுலா மெழுமிழி யீட்டஞ்
சார்ந்திற லார்கு நூமஞ் சாயிதா விலைறஞ்சல் காட்டு
மேந்திண வொழுக்கு செங்கே னின்னரு ளொழுக்க மேய்க்கு
மாந்தமா முகக்க வாடன் மற்றவர் வெறியாட் டேய்க்கும். (௫௧)

சொரிவேயக் குருமே லோர்பைஞ் சிலிமுற லன்மடி சைப்ப
வயல்வளை வெடிப்ப வீழ்முத் தாங்குச்சென் றுதைக்குந் தோற்ற
மியலிதன் மேலை மேல வெனக்குரல் கவர்புள் ளோடக்
கயல்விழிக் குறமான் முன்றோட் கவணொழிக் கமர்ந்த காட்டும். (௫௨)

அருகமர் பாரலா வேல்லை யடியுரு வொடுக்கிச் சியங்
கரியுறல் கண்டு வல்லே கசந்துறை பான்மை செவ்வே
ளிரவோர மகன்முன் போந்தாங் கிரந்திற லார்கோ னம்பி
வரமொழிதுக் கனிமொன் குல மறைத்தொளிர் வாய்மை தேற்றும்.

காமுறு பிணையொன் றேர்பாற் கதுவிய வொருபால் வேழ
நாமுற மருப்பு நீட்ட நாப்பணின் றவர சோக
மோமுதல் வேழ முன்ன ருன்றல்கண் டெயினர் கல்லை
யேமுற வலித ணைப்ப விங்கெச் சேவை யோயும்.

புதுமலர் கணியிற் றேன்றப் புளிந்தர்கூர்ங் குயத்தி னோனா
கதுமென நிலத்திற் சாய்வ கடம்பணி கடம்பு யர்த்தோ
னெதிர்பொரத் தொடர்கி ராதர் யாவருஞ் சேவ றேன்ற
விதிர்விதிர்த் தாவிசோர்ந்து மேதினி வீழ்ந்த தேய்ப்ப.

அரிகுர லருவி யாவு மாங்கெயிற் றியரி னேர்பு
குருமலர் வேங்கை நீழற் குவாலுற வீழ்வ வள்ளி
யருளினு ருயிர்பெற் றன்றே ரறுமுகன் றிருவ டித்தா
மரைநிழ லுறமுன் வீழ்ந்து வணங்கிய வாய்மை காட்டும்.

கறிக்கொடி யிணர்த்துச் சூழ கருத்தரு விளர்த்த செம்மல்
வெறித்தசெங் காந்தண் மீது வீழ்த்திலின் றெருளிருந் தோற்ற
மறித்தகண் ணெறித்த வோதி வள்ளியோ டள்ளி யெம்மான்
பொறித்தழ லிடையி லாசம் போகட்டு மணந்த தேய்க்கும்.

தோற்றட மருப்பு கொங்கைத் துணைக்குடைந் தருவி வார்த்து
தோற்றவை யனைத்து மாங்குத் தணித்திட னமைத்து மீது
தோற்றமன் கொடிச்சி மார்கைத் தொடிச்சிமார் வீற்றிருப்ப
தோற்றவர் வென்று ளாரைச் சுமப்பது மாமே யென்ன.

மருங்குலைக் கொம்ப ரென்பர் வளர்பசுங் கொடியே யென்பர்
பெருங்கவி வாண ராகு பேரவை யேனை மாதர்க்
கிருங்கழ லெயினர் மாதர்க் கியற்பெய ரேகொ லென்னாத்
தருங்குளிர் தழைதொ டுத்துத் தாமரைக் குடுத்து வாரால்.

துயர்தரு கணைவேட் கீந்து சோகஞ்செய் தினைக்க சோகப்
பெயர்கொலென் றெய்தின மாதர் பெரிதுளங் கழுத்து மைதப்ப
மயர்வுறச் சிவந்து மேன்மேல் வாளிதாய் வருத்துந் தெம்மோ
செயலைசெய் செயலை யோதுஞ் செயலைவன் செயலை யேயே.

அழலெரி மடுப்பித் தாங்க ணகருமுன் னகழ்ந்தெ றிந்து
பழகுமை வனமுன் வித்திப் பயனனி பல்க வாழ்வார்
தொழின்முய லெயினர் யாவுஞ் சுடுநெருப் பிருந்த காடு
தழையுமென் றேதுந் தன்மைத் தனிமொழி யமிர்த மாமே.

பிரிந்து செல்லுநர் தனிமைதீர்ந் தின்பமுட் பெருகப்
பரிந்து மல்குபூம் பாவையர் பஃறொகை காட்டும்
புரிந்த நாயகி சேடியர் குழாமெனப் புருடர்
தெரிந்து மாதரார் தம்மின மெனத்திகழ் குரவம். (எ0)

சுரர்கி லத்தமு தரிதுபல் காவலுட் டுறுமிச்
சுரகி லஞ்சுதைத் திரளைபல் கோடிமேற் றொருத்தச்
சுரரு முண்டெளி தென்பபோற் றுத்திரி துருமஞ்
சுரர்ம ருத்தினுஞ் சுவைப்பலப் பலம்பல சொரிவ. (எக)

பொன்னி னுட்டினைந் தருமலர் பொன்னெனு மொன்றே
யன்ன தென்பெறு மலர்மல ராடக மரும்பு
பன்னு மாண்கிளிச் சிறைப்பொனுஞ் சுகந்தமும் பாப்புங்
கன்னி காரங்கொப் பணியிள முலையெழில் காட்டும். (எஉ)

மதுர வொண்கனி தாத்திரி யீந்துமுன் வலிய
வதிர நல்கவும் பாலுண வருந்துவ கபோத
மதமு டற்குறு மெவ்வுறு வழங்கிலு மறுத்து
சிதமென் றுங்கட காதியுண் மாதவர் சிவண. (எங)

வேறு. முல்லை.

முன்னம் பதினு றுயிரமேன் முல்லை யலைத்துந் துவரையினி
லென்னும் புவனப் பழிசுமப்ப தெற்றுக் கினித்தாச் சோழமுதற்
பன்னுந் தேத்து முல்லையெலாம் பல்கப் புரந்தப் பழிதுரந்தங்
குன்னும் பயன்மிக் குறுதுமென வுவண கேதோம் புறுமுல்லை. (எச)

இர வீரை பிரிவாற்றுக் கிளர்பே ரன்பி னுடையானைச்
சார வடுத்தாங் கானிரைக டாமே பொழிபால் குடத்தியர்கை
யார நிறைபல் குடத்தியா யடுத்து மடுத்தெங் கணும்பாம்பி
யோ வளர்க்கு முல்லைமுத விறையுட் குழிப்போர்ந் தொழுகுநர்போல்.

கடியோர் சிறிதில் பொற்பூக்கள் கருல்கற் பகமுந் தலைவணங்கும்
படியோங் கார விதசகித பஞ்சாக் காங்காட் டிதழியெனும்
வடிவோங் கியகற் பகங்கள்பல மல்குந் துத்தோ தகியிதற்கங்
கெடியோ னுழி கிகர்கொலென நிறைபால் வெள்ளம் பாங்தொழுகும்.()

ஆயர் மதிக்கு மண்டர்பல ரங்க லாரிந் திரைபல்லோர்
பாய விதழி செருந்திபல்கற் பகமான் றேனு மத்தொவிகண்
மேய பூவைக் குலமரிகள் வெண்ணெய்க் குடம்பால் வெள்ளமடுத்
தேயும் புறவைப் பாற்கடலொன் றென்னு மிதுவோ விதன்பெருமை.

வேலி கடவாப் பிறர்தொட்ட விளைப்பூங் குளத்து நீருண்ணாச்
சீல முடன யாசகமாச் செறிபுல் லுண்டு குறுமுயலுஞ்
சால விரத நெறியுறுமேற் சாற்றும் புறவந் தனிபுரக்கு
ஞால மகிண னருளினல நவிற்ற லெவனு மினிப்பிறநாம். (௭௮)

வழிபா றருமான் கன்றினமு மான்கன் றினமு முடன்விளையாட்
டொழியா துகைப்ப மகாரினுமிக் குறமார் பணைத்து மடியிருத்திக்
கழியா வுவகைக் கடறிளைப்பர் கனிவாய்ச் சியரல் வாய்ச்சியர்க
ளிழியா நீத்தோர் களும்வாஞ்சித் திடுப வெனிற்பி னிசைப்பானேன்.

எவனு மின்சொ னிகராவ தென்றுட் கறுத்தாய்ச் சியரான்பா
லுவரா ரழலிற் காய்ச்சியுமேற் றோயா மத்திட் டதுதிரளு
நவநீ தங்கண் டிச்சார நலத்தா லன்றே நினைப்பு கழ்த
லிவணோர் குதமப் பெருமையுமென் றெரியிட் டுருக்கி யின்புறுவார்.

அடரு மிடரார் புரிந்தாலு மாகூழ் வலத்தார்க் கபிவிருத்தித்
தொடர்பே யாமென் றிடலோர்ந்தாந் தொறுவி மார்காய்ச்சான்கீர [யா
முடனே ததியாய்நனிசுவையுற்றுடைமத்தினில்வெண் ணெய்ச்சுவை
யிடர வுருக்க நெய்ச்சுவையா யின்றி யமையாச் சிறப்பமைந்த.

அர்க்க னுதவிக் கிதுகைம்மா றென்ன றண்ட ரவண்விளைக்கு
மூர்க்க மாட மாடகமுன் முதிர்பச் சைகணீ லம்பொன்முதல்
வர்க்க மிரவி யிளைப்பாற வதிபல் விரவி யெனக்குவிப்பார்
சொர்க்க மிணையோ பொன்னென்றே சொப்பே திகட்சேயிட மரமால்.

உலகம் புரப்போன் றனைப்பொதுநீத் தொருதன் றனக்கே சிறப்பாக
நிலவ வகித்துக் கொண்டொளிருநிலனென் றுவைந்திணைத் துறையுட்
குலவு மிருத்த லகப்பொருணூல் கூறிற் றிதனுக் கென்றுபெரும்
புலவ ரிசைக்கும் பெருஞ்சிறப்பிற் பொலிவ தனைய பூம்புறவம். (௮௩)

மலரும் புறவத் தண்டர்கடம் மாயி லுதிப்ப வானைய
மலகின் றரிய தவம்புரிந்தோ ரனைய புறவின் றவமெளிதோ
குலவும் பெருஞ்சீ ராளுயர் குழவி ளைசை கேட்டருளி
நிலவொண் சடையோன் விடையிவர்ந்து நேரோ வரும்பேற் றினதம்ம.

வேறு. மருதம்.

பொன்னுலகைக் கருச்சுதன்மை புரியமர ரமகளிர் போற்றுஞ் சீர்த்தி
மன்னமுலைச் சசிசிந்தாமணிமுதற்பன்னிதிபோக வகையில்வாழ்க்கை
துன்னினுமிக் கார்வமுறத் தடமலர்க்கண் குளிர்காட்சி தாவா தென்று
மன்னுவளத் தெனச்சுரர்கோ வதிதேவாய் வழாநிலைத்தும் மருதமாதோ.

ஊடுதல்கா மக்கின்ப மெனுஞ்சுருதி யிலக்கணமீ தண்மைமேயென்
றீடுபெற நிதரிசன விலக்கியத்தாற் றேற்றுதலி னிதுவே யூட
னீடுதிணை யாய்வளஞ்செய் நிலையினுல கயினிருத்தி நியமாய் நின்று
கூடுதிணையிம்மருதக்குளிர்திணையே யிதன்பெருமை கூறற்பாற்றே.

பொன்னிநதி யெனும்பெருஞ்சீர்ப் பூங்கொடியொன் றரிசொனதி முதலா
ப்போதும், பன்னதிய பெருங்கிளைகள் பற்பலவாற் சிறுகிளைகள் பலம்ப
நீட்டித், தன்னிகர்பல் வயறழைத்துத் தருபைங்கூழ் நிரைபூத்துத் தாவரி
யாதி, மன்னியபற் பலவகைய வளம்பழுத்தே யெஞ்ஞான்று மல்காநிற்கும்.

இன்னமுதம் பருக்கிவளர்த் தெடுத்தினிது பாராட்டி யினிய வூட்டித்
தென்னருணற் றுயெனவே சென்னிறைகாவிரிமுலைத்தாய் செவிலிகைத்
தாய், மன்னியபாராட்டுறுதாயூட்டுறுதா யைவருந்தாய் வழிச்சென்மாபோற்
றன்னிடையை யாறுகடாந்தனித்தனியேகிளைத்தொழுகத்தாவாதோங்கும்.

வேறு.

உலகெலா மளித்திடற் குரிய பேரரு
ணிலவுமா வெள்ளமே நிகர்செல் காவிரி
வலனிமிர் தருபிர வாகந் தாயினை
யிலகநேர் கண்டசே யெனக்கண் டார்ப்பரால். (அக)

கண்டிடு முழவரக் கவேரன் மாமக
ளொண்டொடி நிறைபய முணர்ச்செல் வேயென
மண்டொலிக் கிணையெழ மருவிச் சூழ்ந்துசென்
றெண்டரு கால்களி னினிதி யக்குவார். (அஉ)

அருள்புக நெகிழ்மெ யன்ப ருள்ளெனத்
தருபுனன் மடுத்தது மள்ளர் தண்வயல்
வருகமர் விரணந்நீர் மருந்தொ ழுக்கது
மொருவியாங் கொழிந்துசா லுறக்கு ழைந்தன. (அங)

பாவனை யுறைப்பவுட் பயிலு மைந்தெழுத்
தாவபன் முறையெழு தன்பர் போன்மெனக்
காவுபல் பகடல நுகத்தின் காற்பினைத்
தோவறு களமராங் குழுவர் பன்முறை. (அச)

ஐந்தெழுத் திடையரு தமையும் ஆமனத்
துந்தொளி யெழுதலி லுழுத சால்வழி
வந்தெழு மணிகளும் வயம்பின் மாழை
மிந்துறழ் வளைகளு மிமைக்கு மெங்கணும். (அரு)

கமமொழித் திதம்புரி காலு மேலலத்
தமாகி தத்தினு மபேத நெஞ்செனக்
கமையென வோர்தரக் காட்டி மாண்பிணைப்
புமைசெயன் முறையெனப் பரம்பு கைப்பரால். (௯௪)

இளகியைந் தெழுத்தமைந் திலங்கு நெஞ்சினிற்
பளகிலன் பசைவற நிறுவும் பான்மையின்
வளநிறை பற்பல சாலி வாலிய
முளையெழ விதைத்தனர் மூசு மள்ளர்கள். (௯௫)

அன்பினில் வேறலா தவிரு மொண்சிவ
மின்புற வெழுதலி னெழுந்த வெண்முளை
பின்புருத் திரன்முனோர் பிறக்க மேவலின்
முன்பித மொன்றிரண் டாக மொய்த்தன. (௯௬)

பருவமுற் றன்பெடுத் தமல பாதம்வைத்
தருமையின் வளர்த்தலி னனைய நாற்றினை
வருபுனற் கழனியின் மள்ளர் மாதர்கள்
பெருகிய வாழ்த்தொலி பிறங்க வூன்றுவார். (௯௭)

அருட்புன லிடைவள ரன்பின் றேற்றம்போற்
றெருட்புன லிடைவளர் திகழ்பைங் கூழினை
யிருட்பழ வாதனை யெய்ப்பச் சூழ்ந்தன
பொருட்படா திரிதரப் புணரும் பல்களை. (௯௮)

அருண்முறை நவிலுமைந் தெழுத்தென் வாளினா
லிருண்மல வாதனை யிரித்தல் போன்மென
மருண்மது நுகர்தரு மள்ளர் மாதராத்
தெருண்மலர் வயற்களை சிதைத்த லாற்றுவார். (௯௯)

ஈசனா ரருள்வசத் தியைந்திட் டேபழ
வாசனா மலந்தெறு வாரின் மாந்திய
நேசநா றியமது வசத்தி னின்றெழு
தேசநாண் மலர்க்களை சிதைப்பர் யாங்கணும். (௧௦௦)

பளகொருங் கொழிதலும் பரவு மொண்சிவ
விளையனு பவமுளே விரவி நிற்றல்போல்
வளர்பசுஞ் சாலிகண் மள்ள ரோம்புறக்
கிளரும்வெண் கருவகங் கிடைத்தெ ழுந்தன. (௧௦௧)

கருமுதிர்ந் தெழுந்தநெற் கதிர்கள் வெண்மைமுன்
மருவியொண் பசுமைபின் செம்மை வாய்ந்தெழு
தருமொளிர் சத்துவந் தமசு ராசதந்
தரனரி யயன்முறை யவிருந் தோற்றம்போல்.

தனிநுக ரனுபவந் தாவில் யாவர்க்கு
மினிதுற விரிந்தரு ளியல்பி னுட்கரு
நனியெழீஇ நெற்கதிர் நலக்க முற்றிய
பினரரிந் தரிக்குவால் பிறங்கு போர்செய்வார்.

அரிதனைக் கரியெனு மசலஞ் சாய்த்திட்டூர்
கருமுகிற் படைசூர்புக் குழக்குங் காட்சிபோல்
விரவுநெற் போர்கள்பார் வீழ்த்த மள்ளர்சூழ்
நிரைசெறிந் துழக்குவ மேதி நீள்குலம்.

அழுக்கினை யழுக்கினு லகற்றல் போன்மல
வழுக்கினை மாயையா லகற்றல் காட்டுவ
வொழுக்கிய மேதிக ளுழக்கி போய்ந்தபின்
குழுக்கொளும் பலாலமுற் கோது நீக்குதல்.

தொழில்பல கருவிக ளோடு தோய்ந்திலாத்
தொழிபிலைப் பாரியா ருயிர்க ளூற்றெனக்
கழிபலா லம்முதற் கடிந்த கற்றிய
வழியொளிர் நெற்குவால் வயங்கும் யாங்கணும்.

ஈடிலா ருடனுழி னிரியுந் தம்பெரும்
பீடெனச் சிற்றினம் பிரிந்து நல்லினங்
கூடுநர் போற்பதர் நீத்துக் கோடொரீஇ
நீடுநெற் குவால்கள்பன் னிலையிற் சார்வன.

ஆறிலொன் றரசர்நன் னீதி யான்மழை
யாறிலொன் றறனிறைந் தனைத்து மோம்புதல்
வாறிலொன் றியநன்றி யயர்ந்தி டாமன்மு
றாறிலொன் றரசருக் களப்ப ராங்குளார்.

ஐம்பெரும் பாகநெல் லனைத்துங் கொண்டுமுன்
றைம்பெரும் பாகமா யவைமுற் றுய்ப்பாற்
றம்பொருள் பாத்துணத் தருமெ னூற்பொரு
டம்பொரு ளாகவே தலைக்கொள் வாழ்வினோர்.

துறைக டோறும்பன் மரக்கலத் தொகையினுட் டுதையு
நிறைபொ ருட்குவால் கொணர்ந்துகைத் தோணிக ணிகழ
வறைக டற்கரை யளிப்பமா ணவர்குலக் காழ்ந்த
பொறைக விப்பொரு ளெடுத்தரு ளாரியர் போல. (௧௧௮)

உருவ நிட்களத் திற்கய லன்றென வுணர்த்துங்
கிருத காடினி யத்துட னெண்ணிய கிளையாய்
மருவு கென்றுகொ ளுமணிராங் குவரிநீர் வாக்கிப்
பெருக வாற்றுமுப் போங்கலைப் பாங்கரும் பிறங்கும். (௧௧௯)

என்ன தேத்தரும் பொருளொரீ யியலும்பல் கலைத்தாற்
றுன்ன நன்கரைக் குவித்தெலா நிலங்களுந் துதைந்து
முன்னி யேற்பநா டொறுங்குறை வறத்தரு முதன்மைத்
தின்னி லத்தியல் பென்னிலா ரிதற்கிணை யிசைப்பார். (௧௨௰)

எம்மை யாளரு ணம்பிபோற் றிபத்த ரொனுஞ்சீர்ச்
செம்மை மாமணி யுலகெலா மொளியுறத் திகழ்ந்து
தம்மி யற்குலத் தவதரித் திட்டமா தவஞ்சார்
நன்மை யாளரிந் நிலத்தவர் பெருமையார் நவில்வார். (௧௨௧)

திணைமயக்கம்.

குன்றி ளந்தினைக் கதிர்நுகர் குரங்கங்கொற் றவைதன்
மன்ற லிக்கலை யூர்தியை யினமெனமருவுந்
துன்று தின்பர லுண்புற வமையினஞ் சொரியா
நின்ற வெண்மணி பரலெனச் சென்றுணு நிற்கும். (௧௨௨)

வரையி ளஞ்சிறு மறியுகைத் தான்முலை மடுக்கும்
வரையு ழைப்பொலி முலையுணும் வனநிரை மழவு
வரைமி சைந்துசென் றும்பல்கண் டுயில்வன மருதம்
வரைய கின்னிழ லுறங்குமிக் குணுவரு மும்பல். (௧௨௩)

அமைவெ டித்தெறி மணிவிரைந் துணாங்குமீ னுருங்
கமைகொ டிக்குலத் துதைப்பவின் பறந்தலுங் கழைமே
லிமிர்பொற் கோங்கிடைச் சியர்க்கொளிர் காதணி யீவ
நிமிர்பொற் கொன்றையம் பணைத்தியர்ச்சினைத்தொழிலிகழ்த்தும்.

உழும்ப கட்டினை யோட்டுவ நெல்லியொண் கனிகள்
வழங்கும் பூகதந் துவர்க்கனி மறவருண் மகிழ
வொழுங்கு மீந்திருங் கனிதரும் பாத்திய குவப்ப
முழங்கு வாரிமீ னெறிவன மறத்தியர் முகப்ப. (௧௨௫)

முல்லை யான்பொழி பால்புகு முளரியந் தடத்து
ளொல்லை வாளைதாய்ச் செருந்திவீ யுகுப்பவவ் வுழுபால்
வல்லை யத்தட மிரப்பிவா ரிதிப்புலான் மாற்ற
வில்லை மாலெனக் காசைமே லைலவளை வீசும். (கஉ-கூ)

தாழை யின்கனி தகர்ப்பவீழ் மாங்கனிச் சாறு
வாழை யின்கனிச் சாறுமுன் னுழுற வளர்முட்
டாழை தாறுகுத் தாங்குநோக் குநலொலாந் தவள
வாழை யாதியென் றோதிய விம்பிதம் வழங்கும். (கஉ-எ)

வேறு.

எண்ணுறாப் பொன்கொடுத்தா ளிசைபழிச்சப் பெரும்புலவ ரியம்பு வாக்கிற்
றண்ணளிரும் காவிரியே தார்வேந்த னுஞ்சோழன் றனே யென்று, மண்ணுலவு
முஞ்சோழ மண்டலமே யென்றுமுறை வருமே லெந்த, விண்ணுறுமிப் பாவு
மிந்த மேனாட்டின் பெருமையெம்மால் விளம்ப லாமோ. (கஉ-அ)

திருநாட்டுச் சிறப்பு முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் (கஉஅ.)

# திருநகரச்சிறப்பு.

வேத மூன்றிடை விளங்கெயர் வேதமூ வேந்தர்
சோதி நாட்டினுட் சோழநா டதனிடைத் துலங்கும்
நூத காளை மதனிடைக் காண்டமே துனைய
மோது ருத்திரஞ் சிவாலய மைம்பெருந் துமைகோன். (௧)

அலைக ளிறைந் தொளிர்முனி வாரொலா பொருங்கே
நலையின னாமெனி தருள்வதிந் நகரென நணுகி
மில்லை யானை வாதசா குவமுனி மிவாசத்
தலமெனுமுமும் பெறத்தகுந் திருவுசாத் தானம். (உ.)

அகில லோகத்து மவிர்சிவ தீர்த்தங்க ளனைத்து
மகில மாமுனி வரும்புகுந் தழைப்பவத் தாங்கே
சகல போகமோக் கங்களுந் தந்துவாழ் தவிறுற்
சகல தீர்த்தவா சியபிக் திருவுசாத் தானம். (௩.)

வேறு.

வார்கொண் டருமை காட்டியவா வளர்க்குஞ் சுபயோ தரக்குடைந்து
வார்கொண் டிடாமுப் புடையிளநீர் மல்கப் பொறையாற் றிலாங்கலிகள்
வார்கொண் டோடி நெடுவானின் மலிநா ணச்ச முடனடங்க
வார்கொண்டளிக்கும்பயோதரநீள்வார்கொண்டெனச்சூழ்ந்துடனுதவும்

மண்ணின் மடவார் முலைக்கொவ்வா மரபினெனைத் தாழ்த்துநரெவரோ
பெண்ணின் மடவார் தமுட்டோடை வியல்பிற் பெருமை யெழின்மாதர்
விண்ணின்மடவார்முலையொத்தேய்விழுப்பமுடையேமெனக்களித்தா
குண்ணின் மடவா ரிளநீர்த்தெங் குவனை முழுதுஞ் செறிந்தாமும். [ங்

தேவ வழிபா டாதியபல் செயல்கட் கெமையின் றமையாமை
மேவு மெமக்கோர் சிறிதொவ்வா விண்கற் பகங்க ளமக்குமே
லாவ தறிது மெனமேற்சென் றதனைத் தாழ்த்தி மடல்சிறிதாங்
கோவு பாளை நிரையினகு முவணை மேலு மிலாங்கலிகள். (௧௪)

மும்மைப் பயனுந் தருநிசமிம் மூதூர் செறியு மிலாங்கலிக
ளம்மைப் பயன்வீ டறத்தளிக்கு மதனுற் றெருட்டு நூலளவை
யும்மைப் பயனி னளப்பிலவாய்த் தோம்பு வார்க்குப் பெரும்பொருடந்
திம்மைப் பயன்கூட் டுதெறருட்டு மென்னுங் காட்சி யளவையரோ.

இனத்தா லேன்றன் றுரைக்குமள வெய்றும் வான்கற் பகமென்னுங்
கனத்தா லுரிஞ் யதிமதுரக் கனிநீர்ச் சூல்பெற் றிலமென்று
மனத்தா லச்சுற் றறல்பெயர்செய் வளஞ்சால் புவிக்கற் பகமாயின்
வனத்தா ளவோ தரிதெனுமா மல்கிப் பொலியு மிலாங்கலிகள். (௧௬)

ஆற்று நீரை யும்முவராக் கரழி நீருண் டதைமாற்றிப்
போற்று நீராக் கெம்மின்மிகும் புனிதச் சுவைத்தாக் கிலாங்கலியெல்
றேற்று நீர் * மை யப்பொழிக்குழுந் திலங்கு மெவர்நீ யினைமுவர்த்தாற்
றேற்று நீர்மை நல்வினத்தைச் சேர்ந்து வயங்குந் திறம்புரியார். (௧௭)

அறன்மிக் களிப்போ னெமக்குவனை யாச னவனு னுதவிபெரு
கிறைபொற் றருக்க ளவற்கோவா நீழல் பரப்ப லானாநாந்
துறையுற் றெழுனன் றலைவன்குத் தாழை நிரைகண் மேலோடிப்
பொறையுற் றலர்பூந் தருமேலும் பொலியப் பரப்பு நறுநீழல். (௧அ)

ஆய அணைந்தாங் கலர்பூக மாம்மை கரும்பு முதலாவ
பாய விழியா யிரத்தவன்வான் பதியாம் பகங்கட் கிதஞ்செய்வ
வாய பரிய தன்னியவே மற்றவ் வுடையேம் யாமென்ன
மேயங் கழற்றிழ் வெளிபெல்லா மிடைந்து நிரைந்தாங் கனிசெய்வ. (௧௯)

* மை-மேகம்.

மருதத் தலைவி தனைப்புரக்கும் வானிற் றலைவற் குண்கலத்தி
னருமைத் தவள நறுஞ்சாலி யன்னம் படைத்தாங் ககல்வானின்
விரவிப் பொலிபைங் கதலியின விரிமெல் லிளமெட் டிலையினிடை
யுருமுற்றியவெண் முழுத்திங்க ளொளிகான் றமர்ந்து திகழ்தருமால்.

அனைய மதிமேற் செந்தாதிட் டலராம் பிரங்கே னுருத்தமுதிர்
கனியும் வருகைச் சுளைகதலிக் கனியோ டுருப்பத் திகழ்காட்சி
பினையத் தலைவி பருப்பொடுநெய் பேணுஞ் சுவைய முக்கனிக
ளினிதத் தலைவற் கன்னமுட னிலங்கப் படைத்தா லெனப்பொலியும்.

குளிர்பூ கதமேற் றிரையனலுங் கொடிகள் படர்ந்து தாவன்றியினந்
தளிர்க ளடுக்கி யெனத்துதையத் தாவிற் பழுக்காய்க் குலையடுப்ப
மிளிர்பூ முகையோர் மெல்லிலையின் மீது பொருந்து நிலைநோக்கி
னொளிர்தாம் பூலம்வெண் சுண்ணத்துடனுங் குதவிற் றெனவொளிரும்.

வேறு.

சுரர்முழு தாண்புக் கீண்டுத் துதைதலால் வெறிதா மன்றோர்
புரமுழு தவற்றை யெல்லாம் புரப்பதெங் கடனென் றேகொன்
றுரமுழு தருளிக் கோயி லூர்முழு தடுத்து மேற்சென்
மரமுழு தீண்டு சோலை வான்முழு தரணிற் சூழும். (௨௫)

சந்திர காந்த மாடந் தருசுவை யமுத ரூப
மந்திர நாத னீற்று வயங்கொளி மேனி மானு
மிந்திர நீல மாட மிடையின்மா ணிக்க மாடந்
தந்திர மயமா தேவி சாமிமா மேனி மானும். (௨௬)

பொன்மணி மாடம் வானிற் பொலிபவம் புகுந்திழிச் சார்த
லன்மணி நிறத்தன் றன்மாட் டயனெழு தோற்றங் காட்டும்
பின்மணி முகின்மே லாகப் பிறங்குமம் மாட மன்ன
மன்மணி மலரோன் றன்பான் மாலெழு தோற்றங் காட்டும். (௨௭)

நாகமீப் பொலிவி லோத னங்களாஞ் செங்கை நீட்டி
மாகமீப் பொலிவா ரேனை வருகென வழைப்ப வன்றோர்
தாகமீப் பொலிய வேள்விச் சாலைபுக் கீண்டி நாளும்
யாகமீப் பொலியு ணாக்கொண் டின்பமீப் பொலிவர் யாண்டும். (௨௮)

அரிவைய ரல்கு னாக மரைக்குடப் பதும்பொன் னாகந்
தெரிவையர் மருங்கு னாகந் திதலைமென் முலையு நாகம்
வரிவிழி கருமைநாக மறைந்துறை கடலி னாகம்
புரிகுழன் மிசைப்புன் னாகம் போதுமென் னடைபெண் ணாகம். (௨௯)

கதிர்கிரி மைந்தர் வாகங் கரிபரி முதல வாகங்
கதிர்மிகு மணிய வாகங் காமனுஞ் சமழ்ப்ப வாக
மதில்கண்மே * லெழுவ வேக மறைமுழு துணர்வி வேக
மதிமனத் தொளிரு மேக மாளிகை யிவரு மேகம். (௨.௮)

மாடமும் வாவி தாமும் வயங்கர விந்த நேரு
மாடவிர் முகங்கா ரோதி வயங்கர விந்த நேரு
மாடவர் கற்பாய் மார்ப மணிநறுஞ் சாந்த நேரு
மாடவர் கற்பாய் † மார்ப மணிநறுஞ் சாந்த நேரும். (௨.௯)

மாதர்வா னரம்பை யென்ப வண்கவா னரம்பை யென்ப
மாதர்கூ ரியலுந் தோகை மனங்களி ளியலுந் தோகை
மாதர்செய் விழியுந் தேனே வளங்கனி மொழியுந் தேனே
மாதாம் பொருவ கொங்கை மலர்க்குழ றருவ கொங்கை. (௩.௦)

கிளைதழூஉங் குடியெ லங்கைக் கிளைவழூஉம் யாண்டு மாதர்க்
கிளைதழூஉங் காம்பு யங்கள் கிளைதழூஉம் ‡ வாம்பு யங்கள்
வளைதழூஉ மடவார் கண்டம் வளைதழூஉஞ் செவிக ளொண்கான்
முளைதழூஉ மனையெ லாஞ்செந் முளையெழூஉங் கழனி யெல்லாம்.

கள்ளளிப் பனவாங் கென்றுங் கடிமல ரினங்க ளேயக்
கள்ளக றைப்பெ ருக்கிக் களிமயக் குழல வண்டே
§ கள்ளகம் பயில்வ பின்றோர் கண்களே யனைக ளாற்றுங்
கள்ளகப் பலவ வன்றோர் காளையர் மனங்க ளேயாம். (௩.௨)

நிறைமலர்ப் பொழில்க ளேகண் ணீர்பொழி நிலையவென்றுஞ்
சிறையளி யியங்க ளாதி திறங்களே யிரங்கு நீர
நறைமலர்த் தருக்கண் மாட மிசைகளே கொடிய நன்றும்
பொறையின்வாய்த் தலைக ருற்றிப் பொலிவுறு முதல்க ளேயாம். (௩.௩)

வெறியன மலர்க ளேயாம் விளியிய லுருபி னென்றே
யறிவிலா ருடங்க ளோயா மமர்த்தலா டவர்க டாமே
முறிதாங் கிருக்க மாதி மூடருஞ்சோ திடநூற் கூற்றே
பிறிவறு வினைக்கு றாமே பிணிமுக மஞ்ஞை யேயாம். (௩.௪)

* எழுவவே கம் எனப்பிரிக்க.
† மார்பம்—ஆகுபெயர். ஆள் தவர் கற்பு ஆய் மார்பம் எனப்பிரிக்குக.
‡ வாம்புயம்—வடமொழிச் சந்தி போல்வதொன்று. முருகேசனென் பதுபோல.
§ கள்—முதனிலைத்தொழிற்பெயர்.

செல்வமிக் குடையார் மாடச் சிறப்பெலா நோக்கி யென்று
மொல்வது புரிது மென்பா ருருத்துவெரன் மனியா டங்கள்
செல்வமே யுலகே ழுப்பாற் சென்றவோ நின்ற வோமற்
றுசெல்வதெங் கெம்மா லம்மா வுரைப்பதென் பொருட்பெ ருக்கம்

இன்னன வலகி லாத வியல்வளந் தாவன்று மிக்க
நன்னகர்ப் பொதுமை யாய நலன்முழு திசைப்பர் யாரே
மன்னகத் திடைப்பு றத்த வலைகத்திறப் பாம்ப ளத்துட்
கொன்னுமென் னறிவோ விஸ்விக் குட * மெனிற் கூற லென்றும்.

வேறு. புறநகர்.

விண்ணி யங்கிருஞ் சிறையிரு ளரிந்தனன் வேந்த
னெண்ணி யங்கவை † மோற்றெறனுங் காள்கள்பெற் றிவிராம்
மண்ணி யங்குது மெனக்குல மலைமொரு மொருங்கே
யண்ணி யங்குறல் போன்றன வவிர்மணி யிபங்கள். (௩௭)

உலகை மெட்டினீற் றும்பல்க ளும்பர்மெ லும்பன்
மலைமு றைவனே தாங்குமா நிலத்தைமென் மலர்த்தார்
மலைய வோர்புயத் தாற்றுமன் னவனாமேல் வகித்தாங்
குலவி யெப்பகை யுந்தெறு மும்பர்வா ‡ மும்பர். (௩௮)

கண்ணி னேர்குவ நிகந்தமே முடிவிடங் காணு
விண்ணி னேக்கினு மன்னதே யென்னிலார் விரிப்பா
ரெண்ணி னேக்கியங் கீட்சியு முயர்ச்சியு மென்ப
மண்ணி னேக்குகா லெனத்தகு மிபக்கன மாண்பு. (௩௯)

முத்தி றத்திப நிலைக்களம் பிசைக்கொண்மின் முகிலோ
டத்த வெற்புத யாசலத் திருகட மவிர்கான்
மத்தி ரிற்றல்சங் காழிகை மருமமொண் டிருவை
வைத்த மால்கரிக் கருளமுன் வந்தமை யயக்கும். (௪௦)

உவமை யாகுபே ரென்பரிக் கரதக லொழுகுற்
றவிர்ம ருப்புவிற் பிறையின் னதிர்முழக் கசனி
திவள்க டாமழை யாதிய வியனுறு திறத்தா
லெவனே தாகுமண் ணியங்குகா லனுங்கிற விபங்கள். (௪௧)

* எனில் என்பது தேற்றப்பொருட்டு:ஆலவாய் சிவனுலாரு லென்ற
திற்போல.
† அவை அரிந்தனனென்றியையும்.
‡ உம்பரீறு போலி.

இருமருப்பிரு பால்வளைந் திடைக்கர மூலங்
லொரியி பங்கறை மதிமிசைத் திகழ்முகி லெனப்பார்
மருவு காரினைப் பிடியெனப் பிடித்தனர் வாய்விட்
டொருவி லுட்பயந் தோடுமுட் பயமெலா முருப்ப. (௬௨)

வளைந்தி யைந்தவெண் மருப்பினைக் கீழுற மண்மேற்
றுளைந்த கண்டனேர் கண்டவர் செய்மையிற் றூய்மை
டளைந்த சிருப ராகரா வின்றென்ப வயிர்ப்பார்
விளைந்த வங்கமைந் துணர்த்திலை தென்னென வியப்பார். (௬௩)

கண்ட மேனியிர் தாகியிர் மதமழை சொரியுங்
கொண்டல் பற்பல வம்மத வெள்ளத்தாற் குறுமுற்
றெண்ட ராதுநீண் டகன்றன வியப்பிலைக் கரங்கள்
மண்டு பற்பல சிறைகளை வாரிதி மானும். (௬௪)

வேறு.

அரங்கமல் கரிவலி யடர்க்கு மாற்றல
*துரங்கம முளைசிறு மிதப்பிற் கொண்டன
தரங்கமன் னிரையெனச் சாற்று சால்பின
துரங்கமத் துறைதிரை துலைதல பற்பல. (௬௫)

குலமகண் முகமெனக் கவிழ்ந்த கொள்கைய
நிலையுற வகன்றெழு நிமிர்ந்த நெற்றிய
வலைவிளைப் படைப்பல னமைந்த வச்சென
விலகுறு காசிய வெண்ணில் கந்துகம். (௬௬)

பளிங்கினிற் கருமணி பதித்த னைத்தென
விளங்கிரு விழிகரு செய்தகல் வீழ்வன
வளங்கனி யாம்பைய மவரி வின்பமட
வளங்கனி செவியின வளப்பில் கோடகம். (௬௭)

மாந்தளிர் நாவின மார்பகங் கண்டமும்
பாந்தளொண் படமெனப் பகரும் பண்பின
போங்கெதிர் பகையுறுங் குருதி போகப்பாய்ந்
தேங்கெழுநிற் குரத்தின வெண்ணில் பாடலம். (௬௮)

வீதிமண் டலமுதல் விரிய மீரொன்பா
னோதரு சாரிமுற் றியைந்த வைங்கதி
யாதிய கதிகள்பற் பலவு மார்க்கன
கோதறு குணத்தன வெண்ணில் குந்தமே. (௬௯)

* துரங்கு முதனிலைத் தொழிற் பெயர்.

எட்டிடம் வெளுத்துமுற் றிலக்க ணம்பெறு
மட்டமங் கலமிட னமந்தில் வெண்மைவாய்ந்
திட்டௌ பஞ்சகல் யாண மென்பன
கட்டழ கமைந்தன கந்து கம்பல. (௫௰)

வெரிகிமிர் பல்லண மிதலை யும்விழி
யிருகடை மறையத ளனுஞ்சிற் றுளைமயும்
புனையில்வால் வயால்களும் புரோத னெண்டுமப்
பரிகினா தரங்கமென் பான்மை தேற்றுமால். (௫௧)

தெய்வத மணிமுத லாகச் செப்பினண்
டைவிதச் சுழிகளு மவ்வவ் வெல்லையுற்
றெவ்வகை நலங்களு மினித வெய்பன
வவ்வகைப் பரித்திற னறைவ தென்னினி. (௫௨)

ஒருருட் டேரினை யோட்டி யும்பரி
னேனொனும் பிறர்செலவி னிறுத்தி மேருவை
யோரியற் புலமையோ ரொப்பின் றென்னுமா
சீரிய தேரினஞ் சிவணு மெண்ணில. (௫௩)

மிசையுலா வமரரும் வேறு ளார்களு
நசையுலாந் தம்பதி யதங்க ளேயெனத்
திசையெலாம் பரந்துமேற் கடந்து சேணளா
மிசையெலாம் விரிந்ததே ரெல்லை யில்லன. (௫௪)

ஒத்தன மெனக்களித் துலாய வெற்பெலாங்
கொத்துறு சிறையரிஇ வீழ்த்த கோனகர்க்
கொத்தெழுந் தணிசெய்வ நன்றி யோர்ந்தபோற்
கொத்துறு மணிநிரை குலாய தேரெலாம். (௫௫)

ஓய்வற மறுகெலா முருளிற் செம்பொனே
தோய்வுறப் புரிந்திம்பர்ச் சுவர்க்க மாக்குமான்
மீயெழு தூளிபொன் னுலக மேவுவித்
தாயதை வையமே யாக்கும் வையமே. (௫௬)

இங்கரி ரதநோக் கினர்மற் றேனைய
வென்னவு மருவருந் திதயத் தோர்பொரு
ளென்னமுன் வையமென் றிசைப்ப வப்பெய
ரன்னவைக் காகிப்பின் பொதுமை யாய்த்தென்ப. (௫௭)

விதிரத மரிரத மாதி வெட்குறு
மதிரத மாரத வகைக ளோயவண்
வதிரதஞ் சமரத மருத்த மன்பெயர்
பொதிரத மாங்கணைப் புறத்து மின்றரோ. (௫௮)

வளையுறு நேமியங் கையின் வாய்ப்பத்த
னுளையொரு நிறத்தின்மா வுவந்து மேற்கொளக்
கிளர்தரு வானமீக் கெழுறு தேரினை
மளவிலர் நொடியவ ரென்ன வாங்குறும். (௫௯)

பொன்னினு மணியினும் புனைந்த தேரினை
மின்னினுங் கதிரினு மமைத்த மெய்யினை
வென்னினு மியைவதன் றென்ம ருவெனின்
முன்னினு மொழியினு முற்று நீரவே. (௬௰)

வீரமே யுருவினர் மேற்கொள் போர்க்களி
றூரமே புயத்தின ரசைவற் றென்றும்வாழ்
தீரமே யுளத்தர்செவ் வினைத்தை வீட்டுகெம்
பீரமே யுணர்வினர் பெருக்க மேயவே. (௬௧)

எத்திசை வீரரோ வெனினும் போர்க்குறி
னத்திசை தமதிசை யாக்கி யன்னவ
ரித்திசை யெமதிசை யெனத்தெ ருளுறா
கத்திசை யுறுத்திசை காண்ப ரங்குளார். (௬௨)

தைத்திட விடுகணை தவறிற் றம்முடி
தத்திமண் வீழ்கெனத் தரிப்பின் மானத்த
ருய்த்திடு கணைகளே முகைக மூடுரு
வத்தகெஞ் சன்றுமுன் கடக்கு மற்றவை. (௬௩)

விடுத்திடு மனுவுமக் கணைகண் மீண்டகை
படுத்திடு மனுவுமுன் றும்பல் பேதமுந்
தொடுத்திடு மொவ்வொரு தொடைப்பல் கோடிக
ளெடுத்திடு விகற்பமு மெளிதி னோர்ந்துளார். (௬௪)

முன்னருப் பனவிரு பான்மு வேக்குவ
பின்னருப் பனமனு வேறும் பெற்றிலா
ரென்னருப் பனமுத லென்று ணர்ந்துளா
ரென்னருப் பனவுமே ரின்றெவன் சீர்த்தியார். (௬௫)

வாளமர் வில்லமர் மருவு மல்லமர்
தோளமர் வலியினிற் ெறாடங்கும் பற்பல
கோளமர் வகையெலாங் குறிக்கு மாணியென்
றுளமர் வீரர்முற் றடுக்கு மாற்றலார். (௬௬)

இயற்கையே யிமைத்திடா ருயர்ச்சி யென்னவா
முயற்கருஞ் சமரிலவ் வும்ப ரும்புகழ்
செயற்கையி னிமைத்திடாத் தீர மேபுரிந்
தயற்கரி தாயதென் றதைவி ளக்குவார். (௬௭)

தெவ்வுரத் துருவுகோல் செலுத்தல் போலைட்
பொவ்வுரச் சந்தனத் தாங்கு ணர்த்துசொல்
கைவிலிற் கோல்விடுத் தெழுதிக் காட்டிமீண்
டவ்வுரை கொடுவர விஞ்சை யாற்றுவார். (௬௮)

மறுவிழுப் புண்படா வைக ருமெலாம்
வெறுவிய வென்னவே தூணியு மேன்மையாற்
றெறுபகை யின்மையிற் றம்முட் டெல்லினின்
றுறுசமர் விகற்பமுற் றுவப்பி றுற்றுவார். (௬௯)

வடவையா ரழலுமா மறலி யாற்றலுங்
கடல்வயி றழலமுன் கதித்த நஞ்சமு
முடனிவை யிடியுமோ ருருக்கொண் டென்னவோ
மிடலுறப் பொலிவராங் கோடிரார் வீரரும். (௭௰)

மழுப்படை யுடம்பிடி நேமி வச்சிரங்
கழுப்படை குந்தம்வில் வாளி கப்பண
மெழுப்படை தோமர மேதி யாதிய
விழுப்படை நிறைபல சாலை வீறுவ. (௭௧)

விற்றொழி லிரதமா வேழ மூர்தொழின்
மற்றொழில் வாட்டொழி லாதி வான்றொழி
னிற்றலுங் கற்குநர்க் கியைந்த நீள்வெளி
நற்றலம் பற்பல நயப்ப மல்குமால். (௭௨)

கசைகுசை கல்லணை கச்ச மாதிபு
ரசையில கடிக ளங்க ளங்குச
நசைதரு கிம்புரி முதன விற்றியாங்
கிசைமிகு கைவலா ரிடங்கள் பற்பல. (௭௩)

அச்சுருள் பார்நுகங் கால்க ளாங்குய
ருச்சிமேற் கோப்பொடு மொளிர்வி தானங்கள்
குச்சமேற் போர்வைபல் கொடிக ளாதிசெய்
தச்சர்முற் றொழில்வலார் தகைதயி டம்பல. (௭௪)

மெய்ச்செறி தருபல விதருப் பாயம்வில்
கைச்செறி யாதிய கணைக ளாதிய
தைச்செறி படைக்கிடு தடாறு மூற்பா
விச்செறி தரப்புரி வியலி டம்பல. (௭௫)

இன்னன பற்பல வெல்லை யில்லன
வென்னரிலிப் புறநக ரிசைக்கற் பாலதோ
பன்னரு மிடைநகர்ப் பரப்பின் பல்வளந்
தன்னினுஞ் சிறிதொரா மரபிற் சாற்றுதும். (௭௬)

வேறு. இடை நகர்.

பன்மணிச் செய்குன்றம் பாசிள மரத்தண்கா
நன்மணித் திரைவாவி நறுவிரை மலரோடை
மின்மணித் திகழ்மேடை வியன்மணி நீண்மாட
மென்மணிக் கரங்கூம்ப வெல்லையில் லனமல்கும். (௭௭)

பளிங்கினிற் புரிகுன்றம் பைஞ்சிறை மயிலும்பர்
விளங்கிய வமர்தோற்றம் விரிநில முழுமதியங்
களங்கற வருள்கொண்டுக் கண்ணுத றனையுன்னி
யுளங்களி வுறநோற்றுங் குற்றென வொளிர்தருமால். (௭௮)

அன்னநன் புடைவாவி யலையெறி தரளநிரை
மன்றுநம் பிறைபாங்கர் மருவுடு நிரைமானுந்
துன்றுவெண் மணற்குன்றிற் றுதைமல ரிதழிவிடை
யின்னவற் கருளவுமு தேசனுற் றெனத்தோன்றும். (௭௯)

மேனிலை யமர்மின்னார் விரிகுழல் புலர்த்துமகிற்
றூநறும் புகையவர்நாஞ் சுவணவண் பொடியோடும்
வானெழு தருதோற்றம் வார்குழற் குளநாணி
மானிமிர் மினலோடு வல்விரைந் தோடுதல்போன்ம். (௮0)

மடவிய ராடவர்தா மாறுற வெதிர்வீசுஞ்
சுடர்கெழு பலவண்ணச் சுண்ணமங் கவாடிக்கீழ்ப்
புடவியின் வளைந்துறலைப் புருவவிற் குடைவானத்
தடநெடுஞ் சிலையன்னார் தாள்பணிந் துறல்போலும். (௮௧)

நாற்புற மலர்ந்தொளிர்செந் நளினங்க ளிடையடையின்
மேற்படர் வளையொன்று மிளிர்வதம் மடநல்லா
ரேற்புறு முகத்தெழில்லெய் தியமதி கனனுப்பட்
பாற்படு கமடம்மேற் பயிறவத் தியல்காட்டும். (அஉ)

மீயுயர் மாடமிசை மெல்லியர் மிகவூடி
நாயகர் பணிதோறும் நளினங்க ணணிசிவந்தார்
காயமுன் வருபணிக்கோள் காண்டலும் கடிதோடி
யாயவர் புயத்திறுக வணைத்தகை நெகிழார்பின். (அங)

பவனவா ளரியைவெரீஇப் படர்பிடி யனையார்தம்
மெவனவா ளரிமார்பத் திணைமருப் பால்வடுப்பப்
புவனமுற் றொருங்கீன்ற புனிதநா யகிகாஞ்சித்
தவனமார் பெமக்கருள்கே சரிநனி வாழ்கென்பார். (அச)

சிறிதுநம் முலையொவ்வாச் சிறியகின் றலையெடுப்பீன்
டறிதுமென் றடிப்பவெழுந் தம்முலை மிசைமோத
மறுவலு மடித்தடித்தே மடைந்தையர் பந்தாட
றெறுசம ரிளையாம லிருவர்செய் திறம்போலும். (அரு)

கைம்மண மலரொன்றுக் கடுகுபன் னிறவண்ட
ரம்மல ரெறியவுமே லலமரு செயனும்பா
லெம்மவர் செயல்போன்மென் றிளையவர் சொலமடவார்
தம்முக நகையாடத் தாங்கழங் காடுவரால். (அசு)

எம்மன வூசனும தெழில்வளர் கயிறூர்ந்திட்
டம்மவொர் கணநீங்கா தாடல்கண் கூடாக
வெம்மவர் தெரிதற்கோ விதுசெய லெனக்கொண்கர்
தம்முடி கனியாட வாடுவர் தடங்கண்ணார். (அஎ)

இளமாத் தண்காவுக் கீர்ம்புன றரும்விளைநூர்
விளைபுனல் பாய்ச்சிலயில் வீரமென் னெனவியப்ப
வளமதிச் சிலையால வாலங்கண் மதியெதிர்கால்
பளகறு புனல்பெருகிப் பாய்வன நாடோறும். (அஅ)

இனவளிக் குணநல்கா விவறன்மை நனிநோக்கிச்
சினமிக நம்பொழிலைச் செறலிவண் வருகின்ற
தெனமக பதிதானு மொழிலியை யுய்த்திடவக்
கனமிசை தடுத்தாங்குக் கவிவன பொழிலெங்கும். (அகூ)

மலர்செறி வாவியினின் வாவிவிண் ணெழுவானை
பலமுறை மோதமிசைப் படிந்தவம் புதங்கள்வெரீஇ
விலகலு மப்பொழிலைவ் வியனலக் கெதிர்செய்தாங்
கலர்மது கனியாதி யட்டவை பட்டவெலாம். (௯0)

தம்முரு விறங்கவருந் தபனியந் தனைவெருண்டாங்
கிம்மெனத் தகர்ப்பார்போன் றிடித்திடு பொற்சுண்ணத்
தாட்மலி பொன்றுகளா யவர்குழற் புகைசூழ்வான்
விம்மித முறவிருள்சூழ் வியலிட மெனத்தோன்றும். (௯௧)

வேறு

ஒண்டொடி மகளிர் மைந்த ரோடிரா காலை
மண்டுபல் சேல்வ ராக்க மடங்குளிர் தடங்கம் பாதி
கண்டிரிந் தொளிப்ப வம்மா கதிர்த்தெழு பகைமே யாற்றல்
விண்டிடு மெளியர் செய்யும் விதமிதன் மேல்வே றென்றே(௯௨)

பங்கயம் வலயம் *வீசி பாசிலைப் குவளை யாம்பல்
செங்கிடை வளைய னைகஞ் செறிதல்கண் டிளையா ளொன்னோ
பொங்கலிற் சிலைமீன் றேற்ற மென்னலிர் செறிவின் றுமொன்
சங்கைகொண் மனத்தர் தத்தந் தலைவரோ டுடிநிற்பார். (௯௩)

அங்கிளை வாவேற் குங்கா றறிநேர்செய் செயலே போலப்
பங்கய முகம லர்ந்து பனிலலின் முறுவல் காட்டித்
தங்கடை மாக தத்தா சனமலித் துடற்பொ டிப்பிற்
பொங்குபுற் புதஞ்செ றிந்து பொலிவன குடைத டங்கள். (௯௪)

உயிரனைர் கொங்கை கேசிங் குழுநிர்கொ ளென்ன மைந்த
ரயன்மிகுர் கொங்கை யம்பு யத்தரும் பென்று பற்றிக்
காயிலரு மையின்மே லீர்ப்பக் கனன்றிரு வோருஞ் சீறச்
செயறைக் கவன்று நாணித் திருத்துவ ரிருவர் தம்மை. (௯௫)

நிலைக்குதன்ன மெலிலிற் சேருன்ற வுறப்பெலா நாணி மீண்டெட்
கலைக்கெழு திறைத்து சென்று நிலைத்தைக் கலைத்திட் டத்தோ
வலைக்கது மலைகொண் டோடா மடவியர் வாடா மைந்தர்
புலைத்தகொண் டுடுத்தின் பாரப் புயத்தழீஇக் கரையிற் செல்வார்.

* வீசி—திறை.

தளரிடை வளர்மென் கொங்கைத் தையலார் தங்கட் கெல்லாம்
பளகறு தெய்வந் தத்தம் பதிகளே யென்ப தோர்ந்தே
யுளமுறப் பூசித் தாங்கவ் வரியர்மேன் மடவார் தங்கை
யளகமொண் டிறைத்துப் பல்பூப் பறித்தெறிந் தாடுவார்கள். ()

வாவியின் மைந்த ரோடு மாதர்தோய்ந் ததன்மை மாற்றத்
தூவிரை கமழ்சந் தாதி தொக்கன மளித்து மீண்டு
மேவிய வுடைபூண் வேறு வேறணிந் தலர்கொய் வான்பூங்
காவினி லுருவர் மாரன் கவின்படை யினஞ்சேர்ந் தென்ன (௯௮)

புரிசன மிடையி லூர்தம் பூம்படை மொதுங்கத் தோன்றும்
கரிசனக் கொங்கை காணுங் காளையர் பாவை யாகத்
தெரிசனப் பெரும்பி ணிப்புட் கெல்குவா ரொன்று மன்றோ
பரிசன முற்றுஞ் செய்யும் பரிசெனே யம்ம வம்ம. (௯௯)

கொம்பரொன் பெயரொப் பாவிக் கொம்பர்பாய்ந் திண்டப் பாற்றன்
றெம்புயத் தமர்ந்து கொய்யவி னென்றுகொண் டங்கு வார்கா
லம்புயங் கண்டன் னேவெம் மகவெனப் புதைத்து மைத்தே
செம்பத மாய்த்தென் றங்கை யீண்டியுட் குழைப்பார் சிலமாதர்.

மைந்தரா லுட்கு ழைந்த மங்கையர் செங்கை நீட்டி
யந்தினீர் வளர்கு ழைத்தாங் கலர்பல ரிலைகொய் போது
சிந்துபோ துடனக் கொம்பர் தெவ்வமேல் விடுவி னென்று
தந்திடு பாத காணிக் கையெனத் தாங்கு மொங்கும். (௧௦௧)

தளவநம் முர னோடத் தருங்கொடெல்லன் றெறிர்க கையைப்ப
வளவறத் தழைத்த ரும்பி யவர்ந்தெதிர் நகைத்தல் கண்டு
தளவெழீஇப் படா சோகந் தனைவெருண் டுதைப்ப வன்னா
தளவில மதன்கோ லந்த வாயிழை யார்மேற் றூவும். (௧௦௨)

மலர்செறி குராநேர் நோக்கு மகளிர்தம் மினமென் றுள்ள
மலர்தர வணைப்ப வன்னா தலினவ மகளிர் பூத்து
நலமிகு மடவா ருள்ள நயப்புற வணைக்குங் கூட்டத்
தலகில்சந் ததிவி ருத்தி யாமெனக் கண்கூ டாக்கும். (௧௦௩)

நர்சியை நேர்த ருக்கு நாயினிக் காண்டு மென்று
மூசினர் கொய்யச் செல்லு மொய்யிழை யவர்க ளீழன்
மீசிவ ணுறலு மிக்கு வீபல மிடையப் பூத்துக்
காய்சினந் தணியச் சண்ப கம்மல ரடியிற் றூவும். (௧௦௪)

புலிதரு பிரம னாரிற் பொலிபுற நகரின் மேலு
மலிர்தரு முகுந்த னாரோ யாமெனு மிடைந கர்ச்சீர்
நவிலுதற் கெளிதோ விந்த நகரொரு விதங்க டந்தாஞ்
சிவநக ரதுவே யாமுண் ணகரினிச் செப்பு கின்றாம். (௧௦௫)

அகநகர். வேறு.

அண்டமெலாம் படைத்திடற்காங் கயனைமுனம் படைத்தருளு மமுதநாத
னண்டமதி லதுசூழ்பே ராழியைநீ யிவ்வளவிற் றாக நாளுங்
கண்டனைசெய் கென்றமைத்துக் காட்டிவைத்த மாதிரிகைக் கருவியென்றே
கண்டவர்சொல் வாரொளினிக் கவினகர்மா மதிலகழ்நாங் கழறற் பாற்றோ.()

உயர்வகலந் திண்மையெவ ருக்குமுறற் கருமைமுத லுடைய தாமிச்
செயலரிய தனிமதிறற் றிசைவாயி றொறுங்களிறு திண்டே ராதி
யியலுதல்போன் மேனிலைவா யில்களின்வெண் கரிபரிவா னிரவிதேர்முன்
வியன்மறுகிற் செலுமனைய மிளிர்மணிக்கோ புரச்சீர்த்தி விளம்பற் பாற்றோ.

வகைவகையா விரிந்துவளர் வளமெனுநித் தியவாயு வானோர் நம்பி
யகனிலவிந் நகர்நங்கை யாம்வதுவை மணம்புணர்ந்த வாதி நாளின்
முகிலெனநீல் விதானமிசை முதுவான மணப்பந்தர் முழுதுந் தாங்குந்
தகையபல் கால்களெனத் தகைதுங்க ளம்மதிலிற் றயங்கா நிற்கும்.(௧௦௮)

எவராலு மெஞ்ஞான்று மெவ்வழியு மேற்றுறலின் றெனினு மிந்தச்
சிவராச தானியெனுந் திருநகர மயற்கிறைமா திரிகை யாச்செய்
புலிராச நகராகப் பொலிதலினம் மதின்மிசைப்பல் பொறிக்கு ழாங்க
டவிராது நிறைதருமித் தகைமுழுதும் பகர்வரிதெத் தரத்தி னோர்க்கும். ()

முடியிடைவெண் டிங்களும்வான் முதுநதியுங் கோளரவு முயங்கா நிற்ப
வடியினகழ்ப் புனலுமொரா தமைதலின்மா துமைகோனம் மானைக்காவெண்
பொடியணிதா னுவைப்போலும் பொன்மதிலின் றன்மையெவர் புகல்வ
ரம்மா, வடிவுசெயல் சொலினிளைஞர் * வபுபொனுயிர் கவர்மடவார் வளமை
சொல்வாம். (௧௧௦)

பரத்தையர் வீதி. வேறு

ஐயவென் சோறும் யாது மையமின் றுள்ளந் தேர்ந்த
மெய்யரு மோர்கா ணோக்கின் மெய்மறந் தவச மாகிச்
செய்யகால் விழவுள் ளாற்றுங் கலவியின் றிறங்க ளட்டும்
பொய்யசித் திரம்பு றத்தே பொய்ச்சொலார் போற்செ றிப்பார்.

---

* வபு—சரீரம்.

புருடராங் கரும்பின் மல்கும் பொருளுடற் சாறு முற்றும்
வருமள வுழுஞ்சிக் கோது மறுகவாய் மறுக யாரும்
பரிகசித் திடவே வீசும் பரத்தையர்க் கன்ன கன்ன
விரதம்வே றுக்க லொன்றே யியற்றுமெங் கிரந்தா னுறுப்போ.

தம்பொரு டம்பா லாகத் தருணர்க்கு விலைசெய் தன்றோர்
தம்பொருண் முற்றும் வேண்டித் தாப்பெறு விலையின் றோர்க்குத்
தம்பொருள் கொடுத்து முன்னீ டவிலையின் விலைபோ யீட்டுந்
தம்பொரு ளோகொள் வாணி கரையுமேர் சாற்றற் பாற்றே.

அருத்திகூ ரிவர்ப ரத்தை யளிப்பவெண் பருதி ரிக்கு
பரத்தைய மென்று நாமம் பரித்தவ ளொருவீட் டின்பிற்
குறைத்திடு மடுத்துக் காட்டிங் குவர்ப்புண ரின்ப மென்றுந்
தெரித்தநூல் வாய்மை யென்று சொல்லிய நெறிப்பர் மைந்தர்.

வஞ்சகஞ் சூது பொய்மை மதுநுகர் வாதி யாவு
மெஞ்சலில் லனநா டோறு மினிதுகொள் கலுறு மின்றேறார்
விஞ்சுகா ரிகைக்கு டைந்தோ வேறேன்றே கப்ப மேபோற்
கஞ்சமின் றிருவெ லாமிக் கணிகைய ருழைக்கு விக்கும். (கக௫)

சாதனம் வரைந்த ளித்துந் தருபொரு ளுறும் பெற்றும்
வேதனை மாந்த ரேவற் கிடையிடு மிகவுண் டந்தோ
சாதன மிலாது மைந்தர் பொருளெலாங் கரித்துற் றேகல்
வேதனை யின்றி யாற்றி னிவர்செயல் விளம்பற் பாற்றே. (கக௬)

ஆவணவீதி.

இன்னது கொடுமின் கொண்மி னென்னுரை யோவா தில்லா
வின்ன*துண் டெனுங்க டாவு மெதிர்தரு விடையு மென்றுந்
தன்னகத் தியாண்டு மில்லாத் தகையவா வணவீ தம்மா
தன்னமோ வுரைப்ப வெம்மாற் றிற்சில சாற்று கிற்பாம். (கக௭)

விலைநனி விரிக்குஞ் சொன்ன விலைபகர் வோர்கள் சொன்ன
விலைநிலை யேகொள் வார்முன் மேவிநேர் செய்த ராசிற்
கலையொரு தட்டிட் டாட கம்மொரு தட்டிட் டவார்
கலைதெளி ஞான மிக்கோர் சமரசங் காட்டு வார்போல். (கக௮)

* உண்டோ வென்பது வினாவிடைச்சொலீறு தொக்கது.

செம்மணிப் பதக்கஞ் சங்கந் திகழ்கவுத் துவம்பொன் வாச
மம்மபல் கோடி கோடி யமரிட மண்ட கோடிக்
கெம்பிறை யேவுங் கோடி யிந்திரை கேள்வர்க் கீவான்
சொம்மணி யாழி யாதி தொகுத்தபண் டாரம் போலும். (௧௧௯)

மணிக்கொளான் பானுஞ் சொன்ன மாபினோர் வைத்து வைகும்
வணிகர்முன் றூல வாயெம் வள்ளன்முன் வழுதி காத
லணியது போலு மென்ன வாயிளங் குமரர் செல்வக்
குணிவிலை பகரா நன்னிக் கொடுத்தினி துவப்பர் வாழ்த்தி (௧௨௰)

பலவகைத் துகில்வித் போரிற் படர்ந்துளா சொன்று காட்டிக்
குலவுமீ தளித்தி வென்னக் கோடியென் றளிப்ப வம்மா
விலையிதொன் றளித்துக் கோடி யென்றசெட் டழுகி தென்ன
வலைபிது பெயர்க்கு மேவன் முற்றுமா மமைக வென்பார். (௧௨௧)

மென்மலை கொள்ளத் தாம நிலையினின் றுழுவோ ராங்குப்
பன்மலை செறிகு றிஞ்சிப் பாப்பென மீள சேர்ந்தோர்
சொன்மலைக் குலமென் றேதச் சொன்மலை வுறநேர் கிட்டி
நன்மலை யிலைநாம் வேட்ட சாலியென் றுளை யப்பார். (௧௨௨)

அறுவெரி தூாகம் வைய மந்திர சந்தி ரங்கண்
மிடைவிலை லிலையா மல்க விற்குநர் கொள்வோர் பல்கத்
தொடர்களம் பாடி வீட்டிற் றென்றுழகா மனைத்தாற் போலும்
படர்பனை யவ்வூர் மேற்செல் பயன்றுணிந் துரைமை யம்ம. (௧௨௩)

கைக்குடக் கொடுசென் றின்றுார் கடைமது குறச்சென் றிந்தப்
பொற்குடம் விலையா தென்னப் பூங்கொடி தளாக் கொண்டவர்
முக்குட மேனுங் கொள்ளின் முறிகுட மென்றீ சொன்ன
நக்குடன் சென்று மன்னா நகைக்குடன் முகிழ்த்தார் மைந்தர். ()

பூவிலை பகர்வார் முன்போய்ப் பூவையர் பொருளை நீட்டி
மாவினைஞ் செறிந்து தாங்கு மல்லிகைத் தார்நேர் காட்டி
யீவிரிக் கிதைத் தாளை யென்னவும் கிடைத் தாளை
யேவினும் புண்ணிற் கோங்கொத் திடின்முழு தளித்துமென்பார்.

கலையுலாம் வாரி வெற்பு கானகா டென்று நான்கு
விலையுலாம் பொருள்க ளெல்லா விறையக்கொண் டளிக்கு மீசா
னுலகெலா நுகர்பல் போக வொண்பொரு டன்பா னல்கும்
வலனுலா மாயை போலு மாவணம் வழுத்தற் பாற்றே. (௧௨௬)

வேளாளர் வீதி. வேறு.

தருமுகிலான் மணிமுதலா தாவிலெழு வோர்முதலோ
ரருள்கொடைமை தவாதமர்ந்து மடைவரிய தனிநாம
மொருதமக்கே யிவருரியா யுறப்பெறுவே ளாளர்குல
மருவிவளர் பெருமாட மணிமறுகி னணிபகர்வாம். (௫௭)

எத்தொழில்செய் வார்க்குமுறு வினிதளித்து நிலைநிறுத்தி
யத்தொழில்கட் காருயிரா மருந்தொழிறந் தொழிலாக்கொண்
டெத்தொழில்க ளினுமுழவே தலையெனுநூ லிசைவாய்மை
கைத்தலநெல் லியிற்றேற்றுங் காராள ரிவரம்மா. (௫௮)

நிலமலைநீள் கடல்வினவு நேரியர்க்கிங் கமைச்சாகி
யுலகமுதல் கொடுபெருநூ லுலகமெலா முயவளித்த
மலர்புகழ்சேர் சேக்கிழார் மாமணியிம் முதலியார்
குலமணியே யெனிலினிநாங் கூறுதிறன் வேறெவனே. (௫௯)

இன்னதிரு மணிவாயி னிடைச்சேக்க நடராசன்
றன்னருளால் விரிந்தெழுந்த தனிமணிக ளோவொன்பா
னன்னவற்று ளொருபதின்மூன் றருமணிக ளாவதிப்ப
முன்னமருந் தவம்புரிந்த முதகுசீர்க் குலமிதுவே. (௬௰)

என்னினிநா முரைத்துநனி யிம்மட்டோ வீரண்டிற்
பொன்னகர்நாண் வெண்ணெயமர் பொல்லார்பே ரருட்கடலுண்
டங்கரில் சித்தாந்த வழுதுபொழி மெய்கண்ட
நன்னர்முகி லவதரித்த நற்குலமு மிதுவன்றே. (௬௧)

உழுதொழிலே தலையெனக்கொண் டறமனைத்து மொருபதினா
டழுவியமெய் யன்புறுபூ சனைத்தொழிலும் வழித்தொண்டர்
விழுமியபூ சனைத்தொழிலும் விருந்துபுறந் தான்முதலாஞ்
செழுதொழிலு மருதுபுரீஇக் கிளர்கிழமேல் வளர்தருவார். ()

முத்தொழிலி னடுத்தொழிலா முழுதுகைக் களித்தருளு
மத்தொழிலோ னமிசத்த ராமமரர்க் காதினிலான்
றுய்த்தவர்கோல் கோடாமை யுலகளித்தற் குயிர்த்துணையா
யித்தகையோர் பெருஞ்சீர்த்தி யிசைப்பரிதே யெவராலும். ()

வணிகர் வீதி.

குலத்தாலு நலத்தாலுங் கொடையாலு நடையாலும்
புலத்தாலுஞ் சிவநியமப் பொறையாலு நிறைகல்வி
வலத்தாலும் வளர்செல்வ மாண்பாலுஞ் சிரேட்டிகளென்
றலத்தாலு முற்றுளைபே ரணிவணிகர் மறுகுரைப்பாம். (௬௪)

வேறு.

உலகெலா மரசர் குலமெலா மேற்கொண் டோர்ந்துசெய் நீதிநூ லுரைத்த
குலமனு வேந்து திருமுறை கண்ட கோவொரு சேய்மிசைத் தேரூர்ந்
*தலநில்சீ ரரசு பொதுவெழு தனிச்சொ லருந்திறை யிவர்குலத் தவரான்
மலருழு வேந்தர் தமிலுயர் சோழர் மகிமைநாம் வழுத்துதற் கெளிதோ.

அந்தணர் வீதி.

முற்றுல கொருங்கு படைத்திடு பிரமன் முகோற்பன முனிவர்சந் ததியோர்
முற்றுல கொருங்கு வாழ்வுற வேள்வி முதுமறை முறைபுரீஇ முகில்கண்
முற்றுல கொருங்கு நிறைபயி ரோங்க மும்மழை பெய்ம்முறை முயல்வார்
முற்றுல கொருங்கு வாழ்த்துவே தியர்வாழ் முழுமணி மறுகிவை மொழிவாம்.

ஒருவரு மிருமை மும்மையு மின்பே யுறப்பெறு நிலையர்நா லொழுக்க
மருவுதற் குரிய ளாம்பெரு வேள்வி வயக்குநா றுதொழி லாளர்
பெருகுசீ ருலகே ழெட்டுறு மேனும் பின்னரு நவமுறப் புரிவார்
திருநிறை தருவார் ஞானசம் பத்தே தேடருஞ் செல்வமா வளர்ப்பார்.

ஒருபது புராண முழுவது மோர்ந்தோ ரொன்பதா யெண்குண முடைத்தா
யருமையேழ் பவந்தீர்த் தருள்பெரும் பொருளோ யாறங்கத் தைந்தெழுத்
துண்மைப், பொருளென நான்கு மறையினுட் டெளிந்து பூசனை முப்பொ
ழுதுஞற்றி, யிருபதத் தொன்று மன்பினு லின்பே யெய்துவார் திறனெவ
ரிசைப்பார். (கசசா)

திருவளர் வாத வூரர்சம் பந்தர் சிறுத்தொண்டர் நீலகக் கடிகள்
முருகர்சோ மாசி கலயரப் பூதி நமிநந்தி மொழிகண நாதர்
தெருள்பசு பதிசண் டேசர்வண் பூசல் சிறப்புலி தில்லையந் தணர்கள்
குருமறை ஞான சம்பந்தர் கொற்றங் குடியடி களுமிவர் குலத்தோர். (கசஎ)

ஆதிசைவர் வீதி.

உலகெலா முய்யு முபாயமே செய்யு மொருபெருந் தொழிற்சதா சிவன்றற்
புலனுற முப்போ துந்திரு மேனி தீண்டிமா பரார்த்தபூ சனைதா
னிலகுதன் சாதி வேதிய ரோசெய் திடன்மா பெனவிதித் தைந்து
மலர்முகத் துதிப்பித் திட்டவைந் திருடி மரபினர் மணிமறு குரைப்பாம். ()

நிலவரு வுருவ சதாசிவ சிருட்டி நிமலவே தியர்களா மிவரை
யலர்வரு பிரம சிருட்டிவே தியரே யாதிநாற் சாதிய ரெவர்க்கு
மலர்சிவ தீக்கை முதற்சமக் கார வகையெலாம் புரியுதி கார
நலனிறு லன்றோ குருக்களென் றுலக நயந்திடு குறியென நவில்ப. (கசகூ)

* ஊர்ந்த வென்னும் பெயரெச்சத்தகரந்தொக்கது.

செறிபொழி லணிசெய் திருவுசாத் தானந் தெண்டிரைக் கழனிசூழ் தான
மிறைதிட மெனவே யுறைவிடஞ் சேணி னெழுந்தலா மாளிகைத் தான
நிறைமதி யந்தோய் மதிலணி தான மென்பன வாதியா நிகழ்தென்
மறையருண் மொழியா லணியசேய் வழுத்து மாண்பதித் திருவுசாத் தானம்.

ஆயவிந் நகரத் தரும்பெருஞ் சிறப்பிவ் வறிவிலா வேழையே னுரைக்கு
னாயதோ வம்மா வத்தணக் காழி யருமணி குருமணி யயில்வேற்
சேய்மணி யமுத வாய்மணி கமலச் சேவடி சென்னிசேர்த் தெளியேன்
வாயில்வந் தனசிற் சில்பொறுத் தருள்வீர் மாசறத் தெளிந்தமாண் புலவீர்.

திருநகரச்சிறப்பு முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩௩௩.

## புராணவரலாறு.

சித்தி யெட்டினின் றேவல் செயும்வனம்
பத்தி வேலி யருட்புனல் பாய்வன
முத்தி வான்பயி ரோங்கு முதல்வன
நத்தி மாதவர் வாழ்நை மிசவனம். (௧)

வேறு.

இன்ன விப்பரு வத்தது மெனும்வரம் பின்றிப்
பன்னு மூவிரு பருவத்தும் பனிமல ராதி
யென்ன பற்பல பொருள்களுங் குறைவுறா தென்று
மன்னி மல்குபு விளைவது நைமிச வனமே. (௨)

காட்ட மாவன மேதருப் பாதிய கலப்பை
* யீட்ட மாவன மேதமி னியமங்கட் கிசையக்
கூட்ட மாவன மேதரு மெனமுனிக் குழாங்கள்
வேட்ட மாவன மேதரு நைமிச விபினம். (௩)

நேய மாதவ நேத்திர னியாசலை நிமிர்வேற்
சேய மாதவழ் கடக்களிற் றுனனன் றிருத்தாட்
சேய † மாதவப் பொறிநெறி தொலைத்துமின் றிறைஞ்சுந்
தூய மாதவர் வாழ்வது நைமிசத் தடவை. (௪)

* ஈட்டம் ஆவ நம் ஏதம் இல் நியமங்கட்கு எனப்பிரிக்குக.
† மாதவ = ஆணவமலவிருள்கெட.

எங்கள் வாழுவை யென்பெறுந் துன்பமே யேற்கு
மிங்கு ளார்கள்பே ரின்பமே வேறறி யாவொன்
றங்கு மான்முதற் சுரரொரா மலியமு தாசை
பொங்க மேவலி னுலகமுண் டாரமப் பொங்கர். (௫)

சரியை யாதிநாற் பாதமுஞ் சாற்றுநூ லைரம்
பரம னாயிரு கோடிமைம் முகனையோர் முகப்பண்
பொருவி லாதுணர் வாரொன்று முழுவரங் குழுவர்
வரனு கோபுரம் போலுமவ் வில்லையார் வல்லை. (௬)

வன்னி வேதியின் வயக்குவ வன்னிமுன் னுவ
வன்னி யோதுநான் மறைமுழு தோதுவ வன்னி
யன்ன தாயைத் தீர்த்துய மயன்விடு மன்ன
மன்ன மாதியெண் டிருநிறை யங்கு மடவி. (எ)

அங்கி மூன்றவை யைந்தனை யோம்புவா ரவர்த
மங்கை மாரவற் றேடுதம் வாயகற் பாய
துங்க வங்கியு மேற்கொடு நான்கெனத் துலங்கத்
தங்க ளுறவளர்த் தொழுகுறத் திகழ்வதத் தலமே. (அ)

இன்ன பல்வளஞ் சொல்வளத் தியம்பொணு தென்று
மன்னு மப்பெருந் தகைபூ வாசமு னிசர்
பன்னு மாசனு னகமுனி முதமெனப் படைத்தாங்
குன்னு மோர்வடி வமைந்தென வொன்றிவாழ் மனத்தோர் (௯)

இத்த வப்பெரும் பண்ணவ ரித்தவத் தென்று
முத்த மப்பர ஞானநிட் காமியத் துடனுய்
முத்த முற்பல வேள்விக டொடங்குபு முடிப்பார்
சுத்த மங்குன மாயுறு குணமுமா தாத்தால். (௧௰)

இளைய மாதவ ரியாரவ மாதம ரிடத்தான்
விளைக முற்றியற் கலைகளுற் றிகழ்மனம் விழையும்
புனித தத்தம நித்திய நியமங்கள் போற்றி
யினிய சத்திர யாகமங் கியற்றின ரிருந்தார் (௧௧)

அன்ன காலையிற் சூதமா முனிவர்கோ ளுங்கே
துன்னி னுனைது காண்டலுந் துண்ணெனை வெழுதார்க்
சென்னி கூப்பிரு காத்தினர் வாத்தெதிர் சென்றார்
முன்னி நிறைஞ்சினை ரின்னுவை முகமன்முன் மொழிந்தார். (௧௨)

அழைத்து வந்தன ராதனத் திருத்தின ரன்பாற்
றழைத்த தூமலர் பாத்தியா சமனமர்க் கியமுன்
விழுத்த கக்கொடு வழுத்துபு சனைமுறை விளைத்தார்
முழுத்த வன்பினு மின்புற முன்பிவை மொழிவார். (௧௩)

ஐய மெய்ச்சிவ புராணநூற் போதமுற் றளித்தே
யுய்ய வெம்மனோர்க் கருளிய மேனிகொண் டுற்ற
மெய்ய வேழையேங் குடிசைநீ விழைந்துபோந் தருளிச்
செய்ய முற்றவ நற்றவம் பெற்றவென் சிறியேம். (௧௪)

கருணை மாநிதே முற்றுணர் கற்றவ ரேறே
பொருணை யந்தநின் வாக்கட னுக்கடை புராணத்
தெருணை யந்தவா ரவியுனு வுண்டெண்டுந் தெவிட்டா
தருணை யந்திலார்வமீக் கூர்வதா லண்ணல். (௧௫)

முன்ன ரொண்சிவ கேத்திர விசிட்டமுற் றியற்சீர்
சொன்ன லம்பெற விரித்தனை சுருக்கினை சொலுங்கா
னன்ன ராம்பிர வனமது நாதநற் றலமொன்
றென்ன மாதலத் தினும்பெருஞ் சிறப்பின திதன்கண். (௧௬)

இனிது வீற்றிருந் தருளுமா தேவனெம் மீசன்
புனித மான்மிய மளப்பரி தெனப்புகன் றுரைத்தா
யனைய மான்மிய முணர்விழை வதிவிரி வென்று
வினைய வாய்மையின் வேட்டனர் கேட்டனர் மேலோர். (௧௭)

அன்ன வாய்மையின் வாய்மைகேட் டருணிறை சூத
னென்னு மாதவ னென்னுமா தவன்மறை யாவும்
பன்னு மந்திரேச் சுரன்பத பங்கயம் பரிவாற்
சென்னி வைத்தரு ணிலத்துலாய் நின்றிது செப்பும். (௧௮)

முனிவர் கேண்மினும் வினவுல கினுவொழி முதலா
மென்து நெஞ்சக முஞ்சக முஞ்சக மிரித்து
வனிதை பாகனு ரருள்பெறற் காகநார் மலிந்த
தினித ளிக்குமிச் சிரவணம் பாவண மெவர்க்கும். (௧௯)

நீவி ரிங்குரை தாவிரி மாவிரி கிழற்காத்
தேவி ளங்குமான் மியமபக் குவர்க்குரை செய்யாத்
தாவி ளங்கதி குய்யமித் துய்யமான் மியத்தை
நாவி ளங்குசீர் நந்திதே முந்திசை நவின்றான். (௨௰)

போதனே தரு புத்திர சிகாமணி பொருவின்
மாத போதனர் வழுத்துசிந் தாமணி வரந்த
வாத சீர்ச்சனற் குமரமா மணிமுனிக் கவ்வா
றோது வாரிணி துணர்பினென் னுழுவர்கோ னுரைக்கும். (உக)

கண்ணை கன்புவ னங்களாங் காங்குயர் கருமங்
கண்ணை கன்புறச் செய்பயன் கைபெறீஇக் களித்தே
கண்ணை கன்புரிந் தமர்களை கண்ணுறுதற் கண்ணாங்
கண்*ணை கன்புடைத் தருடிருக் கைலையஞ் சைலம். (உஉ)

காள கண்டனை மொழியிமா சலையிடங் கவின்செய்
காள கண்டனை மண்டனை விண்டனைக் கலந்த
தாள கண்டனை யண்டருந் தொண்டருந் தழுவத்
† தாள கண்டனை யருள்வது கைலையஞ் சைலம். (உங)

சுருதி யானைப் பரி ‡ செனும் பாமனிற் றுயோர்
வருதி யானத்தி னுற்பது கோடியோ சனைமான
கருதி யானதிற் பாதிய கலமெனப் பாவித்
தருதி யானமை வெனப்பெறுங் கைலைமா தரமே. (உச)

விண்டு வாதியா விபுதர்வாழ் பதமெலாம் விளிகாற்
கண்டு மேனரும் காட்சியிற் கவின்செய்வெண் கதிர்கா
னண்ட மெய்க்கனு மகண்டருந் தன்னகத் தான்போற்
றண்டு ருதொளி பயில்வது கைலையஞ் சைலம். (உ௫)

அற்றல் சாலை யாதியர்க் கருசமா வாதி
சாற்று வானவர் சாருமா தாரமா தாரம்
போற்று மொண்கன கங்களைப் புவனத்துள் ளனவுந்
தேற்று மாண்புயர் திருக்கயி லையகின் சிலம்பு. (உசு)

பன்னறு மூலை சுத்துள பறம்பெலா முகாந்தத்
தின்னதீர் தயச் சமண்புரு மிளியகோ வெண்ப
சொன்ன மேருவு மேருவுந் தின்னும்பல் லுதிகள்
சொன்னன் மாண்மியத் திருக்கயி லையகின் சுரும்பு. (உஎ)

---

* அகன் - பாவம்.
† தாளகண் - திருவடிஞானம்.
‡ எனும் - இடைக்குறை.

வேறு.

இன்னன பலவே ருய வியல்வளத் தொகுதி யார்க்கு
முன்னரும் பெருஞ்சி றப்பி னுளிர்திருக் கயிலா யத்திற்
பன்னருட் சோதி லிங்க பரமன்சீ கண்ட நாமத்
தென்னையா ளிறைவன் யாவு மீன்றரு ளன்னை யோடும். (௨அ)

வியனுல கெல்லா முய்வான் மேதகு குடிலை யாதி
வயநிறை தத்து வத்திண் மணியரித் தவி சின் மன்னிப்
பயனுற வமர்பொற் கோயிற் பான்றிருச் சந்நி தானத்
தியல்ருள் வெள்ள மாமீ தென்றுல கெல்லா மேத்த. (௨௯)

உடலிடர்க் கடலோ யாரு முட்கொள நீண்டல் காண்ட
லிடனுறின் மடனெ லாமு மிரித்துயி ரிடர்முற் றோட்டித்
திடனரு ளமுத தோயந் திகழ்சிவ நீர்த்த மொன்றெத்
தடமுமன் புடன்சென் றேத்துந் தனியர சாக மன்னும். (௩0)

பேசுமித் தடாகஞ் செம்பொற் பித்திகை நாப்பட் டேனுந்
தேசுறு பரிசத் தன்றிச் சென்றுநேர் நின்றுங் காணார்
மாசறச் சென்றோர் சில்லோர் மதிலலான் மற்றொன் றில்லா
வாசறு தளியொன் றுண்டோ வண்ணறன் கைலைக் கென்பார். (௩௧)

வயிரத்தொண் சோபா னஞ்செம் மாணிக்க மிழைத்த சந்து
பயிலத்திண் பளிக்க கஞ்செய் பரவுமவ் வாவி நீரத்
துயர்பத்து நூறு பைம்பொ னுண்மணித் தம்பத் தும்பர்
நயனுற்ற விந்து காந்த நருமணிப் பரப்பு வாய்ந்த. (௩௨)

மண்டப மொன்றி லங்கும் வித்தியா மயமீ தென்றே
யெண்டரு முனிவ ராதி யிறைசிவ ஞான வேட்கை
கொண்டெழு மன்பர் கூட்டங் குறைவற நிறைவ தாங்கே
பண்டரு மறைநான் காதி பலகலைத் துழனி மல்கும். (௩௩)

வழுத்துமம் மண்ட பத்தின் மத்தியிற் புண்ட ரீக
முழுச்சுரு மாத னத்தின் முற்றுல கெல்லாம் வந்து
தொழத்தகு மம்பு சாதத் துணையடி சிவப்பப் போந்து
விழுத்தக வீற்றி ருந்தான் விழைதிரு நந்தி தேவன். (௩௪)

வேறு.

சிவமுணர்பன் முனிவர்குழாந் திவியர்பிர மதகணங்கள் செறிந்து சூழச்
சிவதரும மகாத்தியட்சன் சிவனந்தப் புரபாலன் சிவமெய்ஞ் ஞான
சிவகுரவ னருளபர சிவனுகும் பிரபுதிரு நந்தி தேவன்
சிவமுதவுந் திருவுளமே திகழ்தரவீற் றிருந்தருளுந் திருமுன் னுங்கே.()

சனியருள்கூர்ந் தினிதருளு நங்குமர பாக்கியமே ஞான நேசா
மனியசிவ முகாம்புயநூன் மகரந்த பானமது கரமாய் வாய்ந்த
தனியயில்வேற் கரதார காரியருட் சண்முகன்மா தாம டிக்க
ணினிதமர்பு தாதையனைக் கியம்புதல்கேட் டெனக்கிசைத்தாங் கிசைத்து
[மென்றே. (௬௩)

அய்யனையு மன்னையையு மாதிருமா மலர்வதனத் தாதி மண்டு
கையனையு மொருகோட்டுக் களிற்றினையு முளத்திருத்திக் கனிவா யோதும்
பையணிவெம் பணியணிகள் படர்ந்திவெண் சுடர்மதியம் பரவு சீர்த்திச்
செய்யமதி யிதழிமுடிச் சிவபாதாம் புயார்ச்சகமெய்ச் சீல கேண்மோ. (௬௪)

பரவியல்வ வியாசகிரு பாகரமா தேவனருள் பவன மெல்லாம்
வரமுறநல் கியவென்று மன்னுபுவீற் றிருந்தருளம் மாமன் கானப்
பரமதல மத்தியந்த பாவனமா யாமினிய பாரா வாரத்
திரமுறுமால் புரிராம சேதுவினீ சானதிசை திகழ மன்னும். (௬௫)

இப்பரம சிவதலமே யிப்புவிக்கா ரருட்டுணையா யிலங்கு முத்தி
கைப்பொருளாக் கிடுஞ்சகல காமியமுந் தரும்பாவங் கழிக்கு மிந்தத்
திப்பியமா தலப்பெருமை செப்பரிதெவ் வெவர்க்கெனினுஞ் சிறிது நீகொ
ளப்பெரிய நசைமறுக்க லாற்றாது சொலத்துணிந்தா மருமை மைந்த. (௬௬)

இன்னதிருத் தலந்தீர்த்த மிலக்குமுத சுயம்பிலிங்க மூர்த்தி யென்று [று
மன்னருளித் தலஞ்சூத வனமெனும்பேர் பெறுகிறுஞ்சொல் வாய்மை யென்
பின்னகிசோன் பாற்கடலிற் பிறங்குபதே சம்மால்பாற் பெறுசீ ரென்று
பன்னனைய சூரவனிடைச் சிவலிங்கம் பணிபதிகொள் பாண்மை யென்று.

வானிறையவ் வகியரசம் மாவனத்திற் பாவனத்தின் வருசீ ரென்று
பரவுதிருப் பணியாங்கப் பணிவேந்த னணியாய்ந்து பயிற்ற லென்று
காவில்சிவ பூசனையக் கட்செவிவேந் தாங்கியற்று காட்சி யென்று
நாலையர சுறுசாப மடலையொழித் தாருளே நண்ணிற் றென்று. (௬௮)

தூயறன்மார்க் கண்டமுனி தோய்ந்துடன்மா சிரித்தருள்சார் தூய்மை யென்று, சேயரெகு குலபதிமந் திரப்பேற்றிற் பகைதொலைத்தின் புறுசீ ரென்று, மேயவமு தங்கொணர்ந்து விண்டுசிவ நிவேதனஞ்செய் மேன்மை யென்று, வாயதிரு விழாச்சிறப்பு வானவர்கோன் புரிந்தருள்சார் வாய்மை யென்று. (௬௯)

இவ்வகையோர் மூன்றுதலை யிட்டபதி னோர்காதை யியல்பு முற்று
மவ்வகையே மைந்தநினக் கறிந்தவகை விரித்துரைத்து மறையக் கேளென்
றுய்வகைசெய் நந்தீச னுரைத்தனனென் றுடன்சூத வுறுவர் கோமான்
செய்வகைமா தவர்க்கனைய திருநந்தி மொழிப்படியே தேற்று கின்றான். ()

புராணவரலாறு முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௩௮௧.

# தலவிசேடச்சருக்கம்.

மலைமகள் மைந்த கேளின் மனம்விழை கின்ற வாறு
நிருமல மந்தி ரேச னிலவுத லங்கொண் மேன்மை
யுமையில டங்கி டாத தொருசிறி தன்பு நீட
வருளுது மென்று வாய்மை யறைதரு நந்தி நாதன். (௧)

வேறு.

மலரவன் றனையருள் வயங்கு மாதவர்
திலகனென் றுலகுரை செம்மல் கேண்மியா
நிலவுல கலைவற நிறுவு சந்திர
வலநிலை *யிரவியி னவாசி வம்பலில். (௨)

திருநிறை நாவலந் தீவின் மேவிய
பரவிய வரனுறு பரத கண்டத்திற்
பொருவறு திரவிட பூமி மங்கைதன்
திருமுக மெனப்பொலி சென்னி நாட்டினில். (௩)

கண்ணெனத் திகழ்தரு சூத கானனம்
புண்ணிய மாநிதிப் பொன்னி மாநதிக்
கண்ணிய தெனுதுமூன் றுய யோசனை
பண்ணிறை மறைவனக் குடாது பாங்கரின். (௪)

ஓரிரு யோசனை யோங்கு தென்கடற்
சேரியல் வடாதுமா திரங்கு ரோசமைந்
தேரிய வெல்லையி னிலங்கு மிவ்வனத்
தோரிய கைலமுக் குரோச மோதுப. (௫)

தெவ்வனத் தஞ்செய்மால் சென்று சாவலாற்
செவ்வன சத்திரு வாதி சேர்தலா
லெவ்வன நித்திய வின்ப மீதரு
மிவ்வனந் திருவுசாத் தான மென்பவே. (௬)

புத்திகள் வேண்டினும் பொருவி னலிரு
சித்திகள் வேண்டினுஞ் சித்த சுத்திமா
முத்திமுன் வேண்டினு முற்றும் பெற்றுளா
ரித்திருத் தலம்புகி னெண்ணி யாங்கரோ. (௭)

* இரவி—மலை.

இத்தல மெத்தலத் திருந்து மெத்தகு
சுத்தமா முனிவருஞ் சூழ்ந்து போந்துமை
யத்தனை வழிபடூஉ வமரும் பூதல
தத்துவ மெனத்தகுஞ் சனற்கு மாரனே. (௮)

ஆதரத் தடைந்தம ரகில சீவர்தம்
பாதகக் குழுத்துகட் பருப்ப தங்களைப்
பேதுறக் களைத்துயர் பேரின் பேதரு
சீதத் துவமெனச் சிறக்கு மித்தலம். (௯)

எத்துணை மூடரு மெய்தி னீண்டவர்
கத்திசெய் சூதவ னக்க ணக்கிலாக்
கொத்தெலாந் தகித்தருள் கூட்டு மாரழற்
றத்துவஞ் சூதவ னத்தண் மாதலம். (௧௦)

சேகதி மனத்தவ ரெனினுஞ் சென்றவ
ணேகதி யெனப்புகி னிகரில் பாவநீண்
மாகதி ரட்குல மலைகள் சாடுஞ்சு
தாகதி தத்துவஞ் சாற்று மித்தலம். (௧௧)

அம்பர வான்புவி யாதி போற்றுசோ
லம்பர சிவனிரண் டற்ற வன்பருக்
கம்பர வின்பளித் தமருஞ் சிற்சன
வம்பர தத்துவ மாகு மித்தலம். (௧௨)

கண்டவ ரித்தல மாயங் கண்டிடார்
தொண்டெவ ராற்றுந ரனையர் சூழ்ந்துவா
னண்டர்தொண் டாற்றிய வமர்ந்து போயரு
ளெண்டகு புவனம்வீற் றிருப்பர் வேந்தராய். (௧௩)

இத்தலத் துற்றவ ரினித்த லத்திலுற்
பத்தியற் றருட்சிவ பத்தி யுற்றுயர்
முத்திபெற் றுய்வரான் முனிசி காமணி
சத்தியஞ் சத்தியஞ் சத்தி யம்மிதே. (௧௪)

மன்றலெண் டிசைகம ழமிர்த மாவன
மென்றொரு முறைதிரு நாம பேவர்வாய்
நின்றெழ லுறினுமந் நிமல நாமமே
யன்றவர் தம்மையு மமிர்த மாக்குமே. (௧௫)

# தீர்த்தவிசேடச் சருக்கம்.

ஈர்த்த மாவனை யின்புற வோதினுஞ்
சீர்த்த மாதவ சிந்தைய கேண்மியா
தீர்த்த மான்மிய சிந்தெனை வோதுமா
றோர்த்த மாவன நந்திபி ரானரோ. (க)

வேறு.

இத்தல மூன்று குரோசவெல் லையினுளெண்ணிலாப் புவனங்க ளிடை யின்
னுத்தம தீர்த்த முற்றும்வந் திலகு முறைப்பதெங் கினையொரு முவற்றி
னத்தகு நாம நிகரமே யளவின் றுதலா லாருயிர்க் கருண்மா
துத்தமே யனைய சிற்சில தீர்த்தஞ் சொலுமாற் றேறுமா றோன்றும். (உ)

ஆருயிர்க் கருளு மந்திர நாத னுலையத் தங்கியம் பரத்திற்
சாருமோர் சரசு நிருமல மளிக்குந் தன்மையி னிருபல தடமென் [பெயர்தாங்
பேருமெம் பெருமான் பிறைமுடிப் பிறங்கும் பெருப்புனற் பெருமையிற்
சீருடை மையினுன் மணிகரு ணிகையென் றிருப்பெய ரும்பெறீஇத் திக
[மும். (ங)

அத்தனை நாமத் தால்வள ரேல்லை யாமுரு வாயினு மடைந்து
பத்தியிற் படியும் பண்புடை யவர்தம் பவப்பொருந் தவப்பெரும் பாவைத்
துய்த்திர ளாகத் துய்த்திடுங் தாமந் தோயுருத் தீயெனத் துலங்கு
மித்திற மிதுசேர் மாதிரத்தா னு மிலக்குமா லெனைவர்க்கு மின்றும். (ச)

இம்மணி கன்னி கைப்புன றினந்தோய்ந் திடக்கிடைப் பரிசுருந் தவங்க
ளும்மையாற் றினர்க்கே வாய்ப்பதா மெனினு முதண்மதி மதிநிறைபருவத்
தம்மணி நீரி லாண்டொரு தினம்வந் தன்பினுன் மாபினி னாடுந்
செம்மையோர் முந்நூற் றறுபத்தைந் தினமுஞ் சென்றுதோய் பயன்பெற
[றின்னணம். (ரு)

இறைதிருத் தளிநேர் வெளியினிற் கீழ்பா லிலங்குமோ ரலைந்தடங்கிதன்பே
ரறைகுப வனும குண்டமென் றவன்மு னதிற்படிந் தெண்ணியாங்கடைந்தா
னிறையுமவ் வுறையிற் பௌமவா ரந்தா னிகழ்திரு வாதிரை வினண்டின்
முறைபுரி நான முக்கிய மென்ப மூதுணர் மேதகு முனிவ. (சா)

சொன்னவா ரத்தின் வாரத்தின் மூழ்குந் தாயர்பன் னோயெலாந்தொலேத்து
வின்னிகழ் திடகாத் திரதயி ரியமா வீரிய மாதிவெய் விசைவு
முன்னியாங் கொருங்கே யுறுவரொந் நலமு முதவுயிர் வுதகத்தின் கீழ்பாற்,
பன்னருஞ் சிறப்பெண் டிசையினுந் தகையாப் பயிலுமோ ரியலெழிற்பல
[கர். (எ)

இவ்வாறு மனைய வளக மாதி சேடன்மா தீர்த்தமென் றுமைத்
தவிருமல்வாழி யாழிய சூழி யன்புமிக் கின்புற வடுத்து
நவிலுறு மாக மதியிலந் நாளி னைநூன் முறைமையின் மூழ்குந்
திவியரெண் போக மாதிபல் போகச் செறிவெலாம் பிறிவறச் சேர்வார்.(அ)

நிலைபெறு மீச தீர்த்தமென் பெயரே நிச்சய மென்றதை நிறுத்து
மலகிலாப் போக நுகர்ச்சியீ தொன்றே வருமறை யாகம மாதி
கலையெலா முள்ள படியுணர் தெளிவுங் கைவர வுண்மைஞா னத்தாற்
செலவருமின்பங் கூடிய சேட தீர்த்தமாண் பெயரிது தேற்றும். (கூ)

வளர்திருக் கோயிற் புறம்பிர தீசி வம்பலி னும்பரும் வழுத்து
நளினியொன் றுளது மார்க்கண்ட தீர்த்த நாமமவ் விலஞ்சியை நவில்ப
பளகெலாம் பாற்றும் பவமெலாம் படுக்கும் பாவனம் பவித்திரம் பரமம்
புளகமிக் கருளிவ் வளகம்பல் கோடி புவனமும் போற்றுமா புவனம். (க0)

சாதமெய்ப் பாற்றிச் சீதள காண்டஞ் ஞாயமதி தருகுரு பூசத்
தேதகு விதியின் மூழ்குநர் பேற்றை யார்கொலோ விசைப்பரிப் பெரிய
மேதகையாளர் விழிசெறு *முலகின் மேவிய வாவியும் வெருவுங்
கோதற வுதை மெவற்றினு மாவிக் குவால்கவர் தவாத்திறற் கூற்றும். (கக)

இன்னினி யிதன்சீ ரிசைப்பதை யெற்றுக் கிவ்வொரு திறத்தினாலேனை
நன்னலத் தகைய மென்னவு மின்ன நாமமே தோமே னவிற்று
முன்னிய வளிக்கும் வகையவிந் நீர முதலிடாப் பலன்களொன் றில்லை
யென்னலாம் பொதுவாற் சிறப்புற வகுத்தல் யாவர்க்கு மரிதரிதம்ம. (கஉ)

யாரிய கருபத் திலங்குமோ ரனந்தை யிதன்பெயர் கௌதம தீர்த்த
மாமிதிற் சேரணி பவாம்புதி கடத்து மரும்பெறற் சேரணியா மனைய
தேயிரு பாணி தினைப்பெரு மளிக்குந் திறத்தினிற் பாணியா முதமாந்
தோயிலிக் கமல நிமலையிக் கருணைந் தோயமாந் தோயவந் தவர்க்கே.

இன்னன வென்ன வின்னமா வனத்தி லெண்ணிலா வெண்ணிலா வேல்வை
மன்னுமத் தொகையே பகர்வரி தெனிலவ் வாழிய சூழிகள் வழங்கு
நன்னலன் முழுது மாயிரத் திரட்டி நாவுளா னேவுளா னவிற்றற்
கென்னிலா ருரைப்பர் தாவிபு லாகத் திருமொழியொருவகை யிலக்கும்.( )

---

*. உலகு-திசை.

அறந்தரு மருத்த மாதிய திருத்த மருத்துமித் திருத்தங்க ளருத்தி
சிறந்துழூழ் கியமுன் னுரைத்தநா ளலைதத் தினமுழு குறினுமச் செல்வர்
நிறைந்துள விட்ட காமிய சித்தி நிகரகோ டிகளொ டினைவின்
விறந்தொளிர் தரப்பெற் றிம்பர்வாழ்ந் திற்றின் வீடுபே றடைகுவர் மெய்ம்
[மை. (௧௬)

என்றுமை யன்பிக்கு நந்திவாய் மலர்ந்த வின்னுரை தன்னுளத் திருத்தி,
முன்னெழு தெந்தாய் நின்றனி வாக்க முதற்கெவிட் டெவிலை யொன்று முன்
னின்றுபே ரன்பு மிமிர்சனற் குமா நிறைதவற் கறைந்தரு மிமல
நன்றிசெய் நந்தி நாதன்மே லென்று நற்றவச் சூதன்பி னவிற்றும். (௧௭)

வேறு.

தீர்த்த மான்மிய மீதுரை சேரிறே
ரார்த்தி தீரவி னுவின ராதியோர்
கார்த்த மாமலை வாதனை காறுநீஇ
யேர்த்த பேருள் வாழ்வினி லேயுவார். (௧௮)

தீர்த்த விசேடச் சருக்க முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௬௨..அ.

---

# மூர்த்தி விசேடச் சருக்கம்.

மலர்தலை யுலகருண் மறைமக னுதவிய மைந்த தீர்த்தமேல்
விலகரு மகிமையி னொளிர்சில வுணர நின்று மேற்சொல்லா
மலகிரி வாணிறை மனுவிறை யருள்குறி யந்தண் மூர்த்தியின்
நலனிடை யொருசிறி துளமுற வினவொன நந்தி சாற்றுமால். (௧)

வேறு.

நிருமலமாய் நிர்க்குணமாய் நிராலம்ப நிர்த்தொந்த நேய மாகி
நிருவிகற்ப நிராதார நிர்த்தோட நிட்களங்க நிருவி கார
யருண்மயமா யகண்டைதிக சுயம்பிரகா சப்பொருளா யனேக மாகி
யருவுருவா யருவுருவுக் கதீதமா யத்துவிதா னந்தமாகி. (௨)

நித்தியமாய் நிறைவதுவாய் நிராமயமாய் நிரஞ்சனமாய் நீள மாகிச்
சத்தியமாய்த் தத்துவமாய்த் தத்துவா தீதமாய்ச் சாந்த மாகிப்
பத்தியமா யத்தமுமாய்ப் பராபரமாய்ப் பாவனமாய்ப் பரம மாகித்
துத்தியமாய்ச் சோபனமாய்ச் சுமங்கலமாய்ச் சுக்குமமாய்த் தூலமாகி. (௩)

சேதனமாய்ச் சிற்பரமாய்ச் சிற்சுகமாய்த் திவ்வியமாய்த் திருத்த மாகிச்
சாதனமாய்ச் சாத்தியமாய்த் தாயகமாய்ச் சமயமுமாய்ச் சமயா தீத
மாதனமாய் வளாமுதாய் மலிசுவையாய் வருமணுவாய் மகத்து வாகி
நூதனமாய்ப் புராதனமாய் நுந்தாத வொண்சுடராய் நொது மலாகி. (௪)

சமரசமாய்த் தனிமுதலாய்ச் சராசரமாய்த் தருமமுமாய்த் தருமி யாகித்
தமரசமாய்த் தமாமுமாய்ச் சதாகதியாய்த் தருபரிசந் தானாய் ரூப
விமிரனலா யிரதமுமாய் நீராகிக் கந்தமதாய் நிலனு மாகித்
திமிரமொழித் திடுமபரஞ் சிவம்பெருக்கும் பரஞானத் தெளிவு மாகி. (௫)

சகலமதாய்க் கேவலமாய்ச் சுத்தமுமா யவத்தைய தீ தந்தா னாகி
யகலமதாய் விகலமுமா யாதிநடு வந்தமுமா யனாதி யாகி
யிகலரிதாய்ப் புகலரிதா யெண்ணரிதாய் நண்ணரிதா யெவ்வாற் றானும்
பகலரிதாய்ப் பின்முன்சூழ் பக்கமேல் கீழ்நாசோற் பவமின் றாகி. (௬)

எல்லாமா யல்லதுமா யெவ்வுயிர்க்கு முள்ளுயிரா யெவைக்கும் வித்தாய்ச்
சொல்லாரும் வித்தின்றித் தோன்றுவதாய்ச் சமீபமாய்த் தூரமாகி
வில்லாரு மணிமார்பன் விரிஞ்சனரி முதலாய விபுத ராதிப்
பல்லாரும் பல்புவனம் பல்கோடி யகிலாண்டப் பகுதியாவும். (௭)

அவரிமுனஞ் சலசமெனத் தன்முனஞ்சேட் டிக்கவம ரசல மாகிக்
குலமறைக டனித்தனியே கோடிகுழாங் கோடியெனக் கூறிக் கூறிப் [துச்
பலமுறையும் பலநெறியிற் படர்ந்துபடர்ந் தெட்டியெட்டிப் பார்த்துப் பார்த்
செலமுடியா திளைத்திளைத்துத் தியங்குறநீண் டொளித்தெங்குந் திகழ்வ
[தாகி. (௮)

ஒன்றாகிப் பலவாகி யொப்பிலதா யெப்பொழுது மோரே யடித்தாய்
நன்றாகி யெவராலு மெவ்விதமு மெவ்விடையு நவிற்றொ ணாதாய்
நின்றாரும் பிரமமென நிகழ்த்துபர சிவஞ்சீவ நிகாம் யாவுந்
தன்றாவி லருளொளிதிற் சார்ந்துய்வான் றிருவுளத்திற் றதும்பி யோங்கி. ()

பெருகுதிரு வருளாலிப் பிறங்கமுத சூதவனப் பிரமதேசத்
தருண்மயமா யொளிப்பிழம்பா யமுதசுயம் பிலிங்கவடி வாகி வான்றோய்
தெருண்மலியாம் பிரவிருக்கத் திருவடியின் மூலத்தெழுந்து திகழ்ந்தெஞ்
[ஞான்று
மருமலிகூ விளமிதழி மாலதிமுன் புடையலர்தூய் வழிப்ப மன்னும். (௧௰)

தன்னருளாற் சுவேச்சையினாற் றனிமுதலா யெவ்வுலகுந் தழைப்பப்போந்த
தொன்னிலைய வன்னவருட் சுயம்பிலிங்க மூர்த்திபதஞ் சூழ்ந்துபோற்றி
யின்னருள்பெற் றவர்புயங்க விறைவருணன் மார்க்கண்ட னிந்திரேசன்
முன்னரிவர் தொகைதானு மொழிவரிதா லிவ்விலிங்க மூர்த்திநாமம். (கக)

வானிறைமார்க் கண்டேசன் வருணேச னனந்தேசன் மந்திரேசன்
மருமலர முதகுத வனநாத னுசாத்தான மாதலேசன்
முருகுமல ரமுதலிங்க மூர்த்தியிவை முதலனந்த மொழியு மிந்தத்
திருவருணு மங்கனிதேன் றெள்ளமுதா தியவெனத்தித் திப்பமாதோ. (கஉ)

இன்னவரு ணுமங்க ளெழுகோடி மகாமனுக்க ளெவற்று மேலாம் [றை
பன்னுமுறை பண்பினுரைப் பவர்முறையே பகிர்மதிவெண் பல்வாய்க் கூற்
வென்னலமே பலரோக வெப்பொழிந்து தட்பநிறை விழுத்தவின்ப
மன்னலமே சகலகலா வல்லபமா வித்தைநலம் வாழி மாதோ. (கங)

பூதமகா வேதாளம் பொல்லாத பேய்முதல புரியப் கோடி
யேதமெலாந் தெறுநலமே யின்னருளாங் குளிர்நிழலா டிருந்து வாழு
மோதநலந் தனிப்பரம முத்திமுதற் றிருக்களொ முன்று சாலி
யாதரமீ தருநலமே யதிர்தல முதல்யாவு மடைந்து வாழ்வார். (கச)

இத்தகுமந் திரநாதற் கின்னுமள வின்றும மிசைப்ப விந்தச்
சத்தியவா னமுதலிங்கத் தனிமுதலித் தலமொன் றிற் சமட்டி யாரும்
வித்துருவா யுலகமெலாம் விரிந்துமுளைத் தாங்காங்கு வியட்டி யாரு
முத்தமமா வருட்குறியா முதுபுலிகொண் டேகினுமே யொளிரு மின்றும். ()

திருவமுத லிங்கமெனுந் திறனடைந்தார்க் கருள்செயலாற் றேற்ற மென்றி
யுருவமும்வெண் ணிறனேயா யொருவாமலெஞ் ஞான்று முலகர் யாருந்
தெருளியதேற் றுறுமிந்தச் சிவலிங்க மூர்த்தியைப்போற் சிறந்த மூர்த்தி
யிருநிலத்துந் தருநிலத்து மெந்நிலத்து மில்லையென வெளிகை போற்பாம். ()

நவிலருமிச் சூதவன நாதனடிப் போதிதய நளினப் போதி
லவிர்தரமெய் யன்பொடுமவ் வாயைநற் காலையினி லடைந்து சூழ்ந்து
பவியமுறத் திருமுன்பு பணிந்தேத்தும் பண்பினர்பாற் பதினான் முற்றுந்
திவளறம்பல் கோடிகளுஞ் செறிந்துளகுற் றேவலெலாஞ் செய்து சூழும். ()

பனகமணி மனுவிறைவன் பதப்போது பகற்போது பாவிப் போது
மெனவருமெய் யன்பொடுசென் றேத்துநரொத் தேத்துமல கேழுஞ் சூழும்
வனதிதிசொன் னவதிதிபொன் மணிநிதிமுற் பொருள்சுருணை வாரீ யாயுள்
புனைபொருள்கண் முதலாய பொருள்களெலாந் தமைச்சூழ்ந்து போற்ற வா
[ழ்வார்.

ி மலருமுடி மனுவிறைபொன் மலாடிகண் மாலைக் காலை
் துதிப்பணிமெய் யன்பர்பல வின்பவகை யனைத்துஞ் சூழப்
ி சாகிறைபல் *போத்திருவா குவாருத்த யாமப் போதில்
றபோற் றுநாமல மெய்வீட்டிற் பேரின்ப மேவி வாழ்வார். ()

குருபூச மதிநிறைநாள் வாலுணர்ந்தம் மந்தி ரேசன்
பதமுறையிற் பணிந்தேத்தும் பண்பினரெப் பாவ தாவ
போய் நிகரரிய நின்மலராய் நினைத்தவெலா நீங்கா தோங்கச்
பமெனத் தேசமெலாஞ் சீர்பரவச் சிறந்து வாழ்வார். (உ௦)

வேறு.

மந்தி ரேச னிம்பரோ டும்பர்க் கின்பந்
ந் தருள்வி ழாக்கொள் சைத்திரோற் சவநாண் முற்றும்
திறைஞ்சு மன்பர் மண்மகார் செல்வ மாதி
விழாமுற் றெய்திச் சிவகதிச் செல்வ ராவார். (உக)

். சூத கானஞ் சென்றுநா மந்தி ரேசன்
ரம்பு சாத மலாடி பணிது மென்று
நெறிச்சென் றுரும் வந்தினி திறைஞ்சி னாய்க்
பௌவ நீந்திக் கதிக்கரை சேர்வர் திண்ணம். (உஉ

ாலக்கண் யாதுங் கண்டிலர் பணிந்தார் தம்மை
க ளெல்லாம் போற்ற வமர்வரா னினைந்து ளாரிம்
ி லின்று மோர்கால் வருநினை வடையார் வாய்மை
சூத கான மந்திர நாதன் பாதம். (உ௩)

ர்க் கெந்தை யீபு யின்னரு ளின்ன வென்னின்
னமுத சூத முளரிவாழ் மந்தி ரேசன்
யம்பு சாதந் தளிபுகுந் தளிமீ தார
ர் னியதி வாய்ப்ப வழிபடூஉ வழுத்துஞ் சிலர். (உச)

ர் மெழுகல் பூக்கொய் தலகிடா வலங்க லொற்ற
ற காலந் தோறு நல்குத னல்கு வித்தன்
் தூப தீபம் வயக்கலப் பாச னம்பொற்
கலயின் றேசைக் கண்டைமுன் னுதவல் செய்வோர். (உரு)

---

திரு—போகநுகர் கர்த்தா.

மறைமுத லிறைசி வாக மம்முறை வழாமி பந்தங்
குறையற வளித்து நாளுங் குலவிய நடாத்து மேலோர்
நிறைமணிப் பொற்றே ரூர்ந்து நிமலனெவ் வுலகு முய்வான்
முறைபுரி திருவி ழாவம் முறைபுரி திறமை யாளர். (௨.௬)

மந்திர நாத னென்று மகிழ்ந்துவீற் றிருந்து வாழு
மந்திரத் திடைக்கி லங்கண் மருவினுங் குடஞர் வஞ்சு
மந்திரங் குளம்ப தைப்ப மணிபொனு திகளி றுமே
மந்திர மாக மூல மந்திர மெனவ யங்க. (௨.௭)

புதுக்கியெவ் வுலகும் போற்றப் பொருவில்லே ரறத்தி னீண்டு
நிதிக்குவை மனைம கார்மு னிறையத்தா மொன்றை வேண்டா
மதிக்குளிர் நிட்கா மத்தான் மலர்திருப் பணிமெய் யன்பான்
முதுக்குறைந் தருணா லாற்றின் முதமிகப் புரிமே தக்கோர். (௨.௮)

அணிமணிச் சாத கும்பத் தணிகள்பற் பலவு ளிப்போர்
தணிவிலா னிரைவ ளர்த்துத் தக்கபா றருவோர் நந்த
மணிவனம் பெருக வைத்து வளர்ப்பவ ரினைமுன் றும்பல்
பணிபுரி பவர்தம் பேறு பகரவோ ரளவிற் றுமோ. (௨.௯)

முரிவிலா வளியோ டேனை மூர்த்திகண் முன்னா ராற்றுவுஞ்
சரியையே கிரியை யாதி சாற்றுபல் றிருத்தொண் டெல்லா
முரிமையிற் றருபல் பேறு மொப்பிலா வமுத லிங்க
தெரிசன மொன்றே நல்குஞ் செப்பிய துண்மை மன்றே. (௩.௰)

மந்திர மெவையு நூலின் வருமுறை பகர்பே றெல்லா
மந்திர வேள்வி யாவு மரபினிற் புரிபே றெல்லா
மந்திர னிரைக ளேவன் மலியுமெண் சித்தி யெல்லா
மந்திர நாதன் பாத வணக்கமே யருளு மாதோ. (௩.௧)

இம்பர்வாழ் வனைத்தும் வானத் திந்திர னயன்மா லேனை
யும்பர்வாழ் வனைத்து மேலை யுருத்திரா தியர் புரக்கு
மம்பர்வாழ் வனைத்து மப்பா லமைவாழ் வனைத்து மெல்லா
நம்பர்வாழ் மந்தி ரேசர் நியமபூ சனையே நல்கும். (௩.௨)

இன்னருண் மந்தி ரேச னீண்டுசெ யருள்வி லாச
நன்னிலை யுள்ளத் தாலு நாடரி தற்ப மேனு
மென்னிலென் னளவோ முற்று மிசைப்பதிங் கிசைத்த வெல்லை
பன்னனு மொன்றிற் கோடி பங்கிலொன் றேனு மின்றால். (௩.௩)

என்னவாய் மலர்ந்த நந்தி யெந்தைதாள் சனற்கு மாரன்
முன்னமந் தின்ப வாரி மூழ்கி நீடார்வங் கூர்வ
தான்னுபு பின்னு நந்தி யோதுமென் றேதில் சூத
மன்னருண் முனிவர் கோமான் மாதவர் கேட்ப வோதும். (௯௪)

வேறு.

இந்தவருண் மூர்த்திவா னின்பினனி யாற்சொனுநர்
முந்துவெவி வாய்க்கொளுநர் முன்செய்வினை பற்றிகிறை
யுந்துலகை வாழ்க்கைமுழு தாண்டருளி னீற்றினைய
வந்தண்மலர் தாட்கமல வங்கணிழன் மேற்பொலிவர். (௯௫)

மூர்த்தி விசேடச் சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௭௯௯.

---

# சூதவன நாமகாரணச் சருக்கம்.

எந்தை தூயமூ தங்கொண் மேனியி லிங்க மேன்மையி சைத்தனை
மிந்த மாதவ மந்தண் மாவன மென்ற நாமமி சைக்குமுன்
வந்த காரண முந்து காதைகள் முங்கு வாமனெ னத்திரு
நந்தி நாயக னன்பி னேடுநெ யந்த வாவினை விற்றுமால். (௧)

வேறு.

இனிது கேண்மதி முனிவிர் மாமதி யெனுஞ்சீர்ப்
புனித மான்சனற் குமாரனே பூருவத் தலைபோன்
றினைய ஞெகிய காசிப முனிவாற் றழுவு
மனையர் கத்துரு வினதையெனு வனிதைய ரிருவர். (௨)

மனைவ மர்ந்தனை யோர்வயி னிருந்துழி மகவான்
றனது வாணிற வுச்சயிச் சிரவமென் றருபேர்
வினைது ரங்கமந் தேய்மைகண் டினையமங் கையருண்
முனைய ளாகிய கத்துரு வினதைநேர் மொழியும். (௩)

எங்கை யொப்பரி யிப்பரி யினதிலாங் கடலம்
பொங்கு வான்மைகொ ளின்மைகொல் புகல்கென வவடன்
றங்கை வான்மைய தென்னவத் தவையின்மூத் தவடா
னங்கை யின்சொலொங் வாமனி திறத்தென நவின்றுள். (௪)

இன்ன வாறவர் முரணுழி யெம்மிலார் தோற்ற
ரன்னர் வென்றவர்க் கடிமையா குகவென வவண்சூள்
பன்னி னுரவர் தம்மிலக் கத்துரு பார்த்து
துன்ன னந்தன்முற் பணிச்சிறார்ப் பார்த்திது சொல்லும். (ரு)

வருக நம்பணி மருப்பணி மைந்தர்காள் வானப்
புரவி வானிற வானிறங் கரிதெனப் புரிதற்
குரிய தெவ்வழி யவ்வழி புர்கென வுரைத்தா
ளரவ மைந்தராங் கடாதென மறுத்தன ரவருள். (சு)

அனைமு னிந்துரை சாபவெம் மொழியினை யஞ்சுந்
தனைய னுயகார்க் கோடகன் றாயடி பணிந்து
முனிய லன்னைநின் கருத்தினை முடிப்பனென் றதன்வாற்
றுனைபு சென்றிது குறத்தழீஇக் கரிதெனச் சூழ்ந்தான். (எ)

பின்னை முன்னையள் பின்னைநேர் பின்னைய ளுடனே
யன்ன வான்பரி யுலவுபா லாழியின் புறம்போந்
தின்ன வாலதி யெங்கிறத் தெனத்தெரிந் திளையாள்
சொன்ன நின்மைய தேயுனக் கடிமையான் றேறகாய். (அ)

என்று கூறிமுன் னவள்பணி பணிசடா ளியற்று
கின்ற நாளவ டனையன்வான் கிளர்சிறைக் கலுழன்
றன்ற னிப்புறத் தருணனுந் தன்முனைத் தாங்கி
யொன்று மெய்ம்மொழிக் கனைதையாம் வினைதையாங் குற்றன். (கூ)

உடன்பி றந்தவச் சத்துரு கத்துரு வுதுகண்
டடங்க லாச்செருக் ககங்கொளீஇ யினையனை யழைத்தே
தடம்ப ணித்தலம் புகுதநம் முளத்தவாத் தழைத்த
தொடர்ந்துன் மைந்தனுஞ் சிறார்ச்சுமந் தேகுறத் துனையா. (க0)

நம்மை நீசுமந் தேகுதி யென்னவன் னனமே
யம்ம பின்னவ டன்னிள மகற்பணித் தவளை
யிம்மெ னச்சுவன் மிசைச்சுமந் தாம்புகுந் திடிப்ப
வெம்மை மக்களோ டக்கொடி யவள்விரைந் திழிந்தாள். (கக)

ஆங்க ணிச்சையி னுலாவுறு மப்பணிச் சிறார்தம்
பாங்க ழைத்தனர் கலுழனை நாயிவண் பலவா
யோங்கு தீவங்கள் காண்விருப் புற்றன மெமைநீ
தாங்கி யேகுதி நம்பணித் தாதிதன் றனைய. (கஉ)

என்ன வோதின ளப்பணி யிழிபுரை யெனுந்தீக்
கன்ன பாகத்தைச் சுட்டிடப் பொறுமையக் கலுழ
னன்னை பாலுறீஇ யென்னையிவ் வறிவிலாப் பணிக
ணின்னை யீண்டுதந் தாதியென் றேறிய நிமித்தம். (௧௩)

உள்ள வாறருள் கென்றடி பணிந்துநின் றுரைப்பக்
கள்ள வாமதுப் பொழிமலர்க் கருங்குழற் கனைத
வள்ள வார்மணி மலைமுலை வழுக்கிலா மனைத
வெள்ள வான்மலர் மதிமிக மதிமுக விநதை. (௧௪)

அருமை மைந்தகே ளென்றுமு றொனைமுறை யாகநேர்
திரிய வஞ்சகத் தடிமையாக் கொண்டவச் செயலா
லுரிய மைந்தனுந் தாயுமா யிருவரு மொருவர்
புரிய லாவிழி தொழில்புரீஇப் புன்மையே பூண்டேம். (௧௫)

என்ன வாய்மொழி தாய்மொழி கேட்டிகற் கலுழ
னன்னை முன்னையள் கத்துரு சத்துரு வாகி
நின்னை யேவல்கொள் கொடுமையா மடிமையி னீங்கற்
கென்னை செய்தொழில் சொல்லுதி வல்லையென் றிசைத்தான். ()

தனையன் வாசகந் தனைவினுய்த் தனையிலா வுவகை
யினைய மைந்தனை மைந்தவப் பணிச்சிறு மிடையென்
னனைய மைந்தவிவ் வடிமைநீங் கியமுமக் காற்றும்
வினையு ரைத்திராற் றுவவொளை வினவென விடுத்தாள். (௧௭)

அன்ன பன்னக மைந்தரை வினவின னவ்வா
றுன்னரி யன்னயக் கடபதி முகமதித் துரைப்பா
ரின்ன லந்தரு வானமு தெமக்கிவ ணீதி
யென்னி னின்னனை யடிமையை நீக்குது மென்றார். (௧௮)

வியனு லாம்பொறைக் கனைதையார் மனைதயார் வினைத
வயங் கொடுசேய் வந்தவட் பணிந்தனுய் வானத்
தியலு மாமரு தங்கொணர் வான்வழி யினைப்பின்
றுயவு றுவிலொன் றுதவுதி யாலென வுரைத்தான். (௧௯)

உதவி றுளவற் குரைக்குமென் னும்பலே யும்பர்
பதவி நீபுக வாற்றுறு விழைவுறிற் படிநீ
குதறி வைகுநர் வேட்டுவ ருண்டிநீ யுறுங்காள்
மதர்நெடுங்கண் வேட் டுவர்நினை வேட்டொரு மறையோன். (௨௰)

ஆங்கு வைகுமா லவனைநீ யெடுத்துறு தைய
லோங்கு வான்புகுந் தமுதுகொண் டுறுதியிங் குறுதி
தேங்கு நின்சிறை முன்னுறுப் பியாவையுஞ் சிறப்பப்
பாங்கு வாயுமுற் சுரர்புரந் தருள்கெனப் பகர்ந்தாள். (௨௧)

அன்னை பேசிய வாசிய ஞர்கலி யணுகித்
துன்னு *சில்லரை யுண்டனன் கண்டமீச் சுடுதீ
யென்ன வேதியன் கனன்றிடக் கான்றனன் னெழுந்தம்
மன்னர் முன்னனெனன் பன்னியும் வழங்கருள் வள்ளால். (௨௨)

(வேறு).

என்னலுங் கிராத மாதை விகங்கவேந் தினிது கான்றிம்
மின்னெனுடிங் கிராது சேறி வேதிய வெனுலி நெத்துப்
பன்னுதன் றுதை காசி பன்னிடம் புகக்கண் டன்றே
னென்னிவட் சேறி மைந்த வென்னமுன் னிகழ்வி சைத்தான். ()

சொல்லுவான் மேலு மெந்தாய் சுடுபசிக் காற்று தாற்றி
னெல்லையில் சில்லர் பல்ல ரென்வயிற் றெல்லை யிட்டும்
வில்லழல் கொளுத்த நொந்து மெலிந்தனன் சிறைக ரிந்த
வொல்லைநல் லுணுவொன் றைய வுதவென வுதவு தாதை. (௨௪)

பன்னுவான் விபாவ சுப்பேர்ப் பனவனு மிளவ லான
வுன்னுசுப் பிரதீ கன்று னும்பொருள் குறித்துப் பூச
லுன்னிய விளைத்துத் தம்மிற் சொற்றனர் சாப மற்றுன்
முன்னவன் கமட மானன் முரணிப மானன் பின்னோன். (௨௫)

புகலுமிக் கமடம் வேழம் பூருவ வயிரந் தீரா
திசலியித் தடத்தி னுற்ற விக்கரி யுச்ச மாறு
தருமுடற் பருஉவி ரட்டி யோசனை சாற்றுங் கூர்மத்
தகலமோர் பத்தா முச்சத் தளவையோ சனைமூன் றுமாம். (௨௬)

எகியிங் கிவற்றை யுண்டாங் கெரியழற் பசிதீர்ந் தப்பாற்
போகிநீ போகில் வேந்த போகியூ ரமரி கொண்டு
வேகியாய் மீளு கென்றான் விரைந்தவண் விகங்க ராசன்
றாகியா யவ்வி ரண்டுந் தாளுகி ரிடையே கவ்வி. (௨௭)

விசைகொடு கிளம்பி நூறி யோசனை மேக்கு யர்ந்த
பசையுறோ கிணிநா மத்தொண் பாதவ விடபத் துற்று
ணசையுமக் கோட ரந்தா ஞற்றெறு திறலைப் போதத்
திசைகொண்மா தவத்தின் வால கில்லிய விருடி கூட்டம். (௨௮)

* சில்லர் - வேடர்.

வாவலி னப்பணைக்கண் மன்னுபு தூங்கக் கண்டா
னலிவர் வீழ்வர் கீழென் றகநகைக் குற்றக் கோடு
மேவுற வுடன்ற றீ இவிண் மீச்செலக் காசி பன்கண்
டோவிலிவ் விடப மெல்லை யுத்*தாரத் தமைய வைத்தி. (உகூ)

ஐயநீ யென்று னவ்வா றத்தாரத் தினிது வைத்து
மையிகல் வேழ மாவுங் கமடமோ டகமும் வாய்ப்பெய்
தொய்யென வுவணை மேலவ் வுவணவேந் தூறுங்கா லன்ன
தெய்வநாட் டேற்பா தங்க டிகழுமுன் கண்டான் வேந்தன். (௩௦)

அச்சமிக் கண்ணு மென்னீ தவம்பல காட்டேற் பாத
நிச்சயித் தருள்கென் றுசா னோர்பணிந் தியம்ப வன்றோன்
முச்சகம் பரவு வேந்த முந்துகா சிபன்று னூற்று
மெச்சநற் பண்டங் கொண்டாங் கெய்திய வேவச் சென்றார். (௩க)

வாலகில் லியர்க ளங்கைப் பெருவிரன் மானு மெய்யர்
சாலமன் சுமைசி ரத்திற் றாங்குபு சரிசெல் காலான்
காலுமுங் குரநீர் மூழ்கு காத்திரர் கலையே றிச்செல்
வேலைநீ யரித்தல் கண்டார் விழியெரி சுடுவ நோக்கி. (௩உ.)

இவற்கொரு விரோதி தோன்று கென்றவி சொரிந்து நோற்றார்
சிவத்தவர் கறுப்ப தீசெய் தீமையாற் காசி பன்பாற்
றவப்பெருங் குமரன் போந்தான் றன்சிறை யிரண்டி னொன்றாற்
புவிப்பரப் படங்க மூடும் புள்ளர சனைய மைந்தன். (௩௩.)

அமரிகொண் டேக விங்க ளனையுமவ் விசங்க நாத
னிமிருமுற் பாத மிற்று னிகழ்ந்தவென் றுரைப்ப வேந்தன்
கமையொலி யழலோ டூதிக் கடவுளர்க் கூவிக் காசி
னமதுவல கழுது புள்ளி றுதன்வேட் டெழுமிங் கென்றான். (௩௪)

அதுவிறு யமரர் யாரு மமர்விழை யனிகஞ் சூழ
முதுகய வரவு நீப்பான் முயலுப் முயம்சூழ்ந் தாங்குக்
கதுமெனச் சுதையைச் சூழ்ந்து காத்தனர் வருப தங்க
பதிமுதிர் வரைகள் சாயப்† பங்கதோ பலத்தின் வீழ. (௩௫)

---

* தாரம் - மலை.

† பம் - விண்மீன்.

அண்டமுங் கிடுகி டென்ன வரிப்பிர ளயமே யென்ன
மண்டொலிச் சிறக ரீற்றின் வளரொலி கிளர வீசிக்
கொண்டிறல் கண்டா ரண்டர் கூறுமாத் திறையோன் றப்போர்க்
கண்டக ரத்திற் கூடக் கைகுலைத் தோடி யெய்த்தார். (௩௬)

நின்றவர் சிலரந் தோவெங் கீள்விழி முகிழ்ப்பி லாழும்
நன்றல முகிழ்க்கு மேலிந் நடுவற்கு நடுங்கா துள்ள
மென்றினி யோடினுலு மிவன்விடா னென்று நின்றார்
வென்றியி னமர்வா ரென்ன வெரிமுறும் விபுத ராங்கே. (௩௭)

ஆற்றல்சால் சகுன வேந்த னவர்க்கப சகுன மென்ன
வேற்றனன் செஞ்ச ரந்தாம் பஞ்சர மெனவி லேகர்
தூற்றின ரவைதன் பக்கத் துணையினு லுக்க பின்னர்ச்
சீற்றமேல் கொடிய தங்கச் செம்மறன் சிறகர் வீசி. (௩௮)

வலனுறக் குவிப்ப வோர்கான் மாதிரத் தளவும் போத
னலிவுற வருதல் பல்கா னண்ணின ரமர ரப்போர்த்
தலையெழுத் திரித லன்னோர் தலையெழுத் தாக வப்போ
தலகுள துண்ட மொன்று லகிலாத் துண்டஞ் செய்தான். (௩௯)

உம்பர்கு ழும்ப ரெல்லா மொழிதனு மங்கி நானுல்
வெம்புளந் தாப்பத் தாண்டி வெம்படை யேற்பப் புள்வேந்
தெம்பர்மா நதிந தங்கள் யாவுமுண் டுமிழ்ந்தா னங்கி
யம்பர்மெய் கரிந்தி ருந்தை யாய்ச்செய லற்று நின்றான். (௪௦)

துணிவினேரிமையில் வென்று னிமையிலவ் விமையோர்தோற்றா
கணிதரு மிதற்கு நானே கரியென்பான் போற்க ரிந்து
பிணிமுகத் திறையால் வன்னி பிணிமுக னுய பின்னர்த்
தணிவிலா ரமுத மன்னுந் தகுமிடம் புகுங்கா லாங்கே. (௪௧)

பன்னக நிரைக ளங்கி படுவிடங் காரி ரும்பா
லன்னவா ரமுதைச் சூழு மரணங்க டிரண மாகத்
தன்னல காற்று ணித்துத் தனியுட லொடுக்கித் தோன்
றென்னலர்த் திசைத கிக்கு நேமிகண் டுண்ணு ழைந்தான். (௪௨)

தருப்பைசூ ழமுத பூரி தக்கன கடங்கைக் கொண்டு
பொருப்புவோர் பறியச் செல்காற் போந்துமா தவனே ரண்ணல்
விருப்பமீக் கூர்ந்தா மீண்டுன் விறலெறீஇ வேண்டிற் றென்கொ
லொருப்பட வளித்து மிற்றென் றுரைத்தியா துவண வென்றான்.

மாதவர்நீ நமைச்சுமக்கும் வரந்தருகென் றதுபெற்றச்
சீதரனை நினக்களித்துஞ் செப்புதிநின் வேட்கையென
வோதினனக் ககபதிமா லுதுகேட்டாங் கூர்தியெனக்
காதியென வமுதிநுசென் றளித்தபின ராதுமென. (௪௪)

தருவரமால் கொண்டுறப்பொற் றருவரமால் வெருவரநெஞ்
சருவரவா னமுதிழத்தற் காற்றுமைத் துணிந்தொருவா
னொருவரும்போர் நனிபுரிந்தங் கொருவகையு முய்வின்றி
வருவயிரப் படையாலி வாங்குகென வெறிந்தார்த்தான். (௪௫)

வருகுலிசந் தெரிகலுழன் மகபதிநீ தகவுதிகன்
மருவுமின துயிர்க்குலிசம் வறிதாறன் மாண் பன்றெனது
பொருசிறையி னிறகொன்று தருதுமெனப் புகன்றுதிர்த்தான்
பெருகொளியெண்டிசைநிரம்பப் பிறங்கியதா லிறகாங்கே. (௪௬)

ஊழ்த்தவிற கொளிப்பெருமை யுள்ளபடி யுணர்ந்தெவரும்
வாழ்த்தினராற் சுபன்னனென மகபதியக் ககபதியைப்
போழ்த்தவல கிலகுபடைப் புள்ளரசே தெள்ளமுதங்
காழ்த்தமனந் தினர்க்களிப்பக் கைக்கொடுசெல் கின்றனையால். ( )

அன்னவருண் டமையடர்ப்பா னதிகரித்தா லுனக்கந்தோ
வென்னவருஞ் சுதையிதையிங் கீதியென விரந்துரைத்தான்
பன்னவருந் திறற்கழலுன் பரிந்துரைக்கும் புரந்தரனே
நின்னவருத் தந்தனைத்தி நிறையமுத கடமிதனை. (௪௮)

யாமடிமைத் தொழிலொழிய யான்கொடுபோய் வைக்குமிடத்
தேயுடனீ கோடியென விசைந்தரிபி னசைந்துவரப்
பாயவகன் காயநெறி படர்புதிற லடல்வயின
தேயன்மனி தமுதெடுத்த தென்கடன்மீச் செல்கின்றான். (௪௯)

அப்பெரிய திறற்கலுழ னகல்வானத் துயுகாலை
யொப்பருமந் திரநாத லுலவுதிரு வருள்பொழித
லிப்பரிசே யெனவுணர்த்த விருசிறைக்கால் விரைசெலவாற்
றுப்புறுமக் கடத்தமுதத் துளிசிதறி நிலம்வீழ்ந்த. (௫௰)

அத்திவலைக் குலவிரிவீழ்ந் தமரிடமுக் குரோசமதா
மெத்திவலை யம்பெறுமவ் வியலிடந்தான் கீட்டிசையி
னத்திவலை யொத்தமுலை நகமகள்பா கன்றொண்டர்
பத்திவலைப் படுபரமன் பயிலுமிடம் பாவனமே. (௫௧)

ஆதியருள் கடிக்குளம்வே தாரணிய மமர்ந்திலங்க
வீதிகோத் திரகருப மிசைக்கோடிக் குழகர்தளி
யோதகத்தி யான்பள்ளி யுற்றிலங்க யாயினிய
மாதிரத்திற் றளாநகர் மறிந்தொவா ரிதிதிகழ. (௩௨)

வருகிருதி யம்பாத்தின் மறைபாவுந் தனிச்சேறுத்
திருவிரா மேசதலந் திகழ்தாப்பச் சிமவுலகி
லருள்பொழியுங் கொடுங்குன்ற மமர்ந்திலங்க லரியரிதம்
பரிதிநிய மம்பூவ ணூர்பயிலக் குபேரதிசை. (௩௩)

பன்னரியபொன்னினதி பாதாளீச் சுரந்திகழ
மன்னுதிற லீசான வம்பலிடைச் சிற்றேமந்
தன்னிகர்சீ தளகந்த தாபாரி சாதவன
மென்னவளர் திருக்களரென் றியம்புதல மினிதிலங்க. (௩௪)

முத்திதரு திருவருட்பா மொழிதலமிவ் வெண்டிசைசூழ்
மத்தியநா யகமாகி வயங்கருண்மா தலமாமா
லத்தனரு ளெனவானின் றுங்குபாம் புறவீழ்ந்த
புத்தமுதத் துளிநின்றும் பொலிசூத முளைத்தெழுந்த. (௩௫)

வாகீசத் திருவடிகள் வாய்மலர்ந்த தமிழ்ச்சுருதி
மீகாண விச்சின்றி நாறுசெய்வா னெனவிருந்த
மாகாசின் மொழிப்பயனோர் வயக்கியவெம் பிரானருளா
லேகாணத் தோற்றினன்கொ லெனவெழுந்த சூதவனமா. (௩௬)

அண்ணலுயிர்க் களிப்பதரு ளனுவெனினு மகண்டமதா
யெண்ணரும்பல் பயனளித்தாங் கிணையிரிய விரிந்திடம்போற்
றண்ணமுதச் சிறுதுளியிற் றழைத்தெழுமாம் பிரக்காம்
விண்ணரித முற்றளர்ந்து விரிந்தபலன் புரிந்தபல. (௩௭)

எண்ணியவா கனுழனடந் தின்சுவைதப்பொற் கடாகர்
கண்ணெதிர்வைத் தனையடிமை கடிந்தளித்த கடனளித்தான்
விண்ணவர்கோ னன்னவன்சொல் விரகிறு லக்கடங்கொண்
டெண்ணிறைய மகிழ்சிறப்ப வுவணைபுகுந் தினிதமர்ந்தான். (௩௮)

அணுவுதவி செயினுமலை யளவுதவி யவர்க்கருணற்
குணநிதிகள் செயல்காட்டுங் குளிரமுதத் துளியுதவிக்
கிணையிறல மிதுதிரட்டி யின்னமுதும் பருக்களித்தாங்
கணையுநிறை மதிசிகரத் தவிதருசே காரிகாம். (௩௯)

நமதமுதத் துளிபாந்த நறுந்தலமந் திரநாதர்
தமதருளிங் கெளிதெமக்குச் சார்மெனவந் துடற்கண்ணார்
கமமுறல்போன்ம் விரவுசுவா சுதமாதி பாதிறுகர்ந்
திமைதருபல் வடுக்கணிறை யிரதமகீ ருகிகரம். (சுo)

வித்தின்றி முளைத்தெழுந்த வீறுயிர தாபகிறைந்
தெத்திசையும் பரந்ததெனை விளங்குளிர்கான் றெழுநிர்மாழை
யத்தனலோ திமமுச்சி யலவன்மறை யோதிமமே
யொத்தவடிக் குடாவடி *விண் ணேச்சுமடிக் கடாக்கிடியே. (சுக)

திசைக்கரிய முகக்கவளந் திரள்கொடுக்கும் பாகரென
விசைக்கரிய சுவைக்கனிநாங் கிருஞ்சாகை திகையுரிஞ்சு
மிசைக்கரியன் சுதன்மைமுனம் விரவுகுளிர் நிழல்பரப்பு
நசைக்கரிய முசுக்கலைபன் னலனுகர்தே மாந்துருமம். (சுஉ)

சேதார முகந்தெறிபசு நிரைத்தடநீர் பருகுபல
சேதார முகந்துதிர்பசு நீங்கனியா தியநுகர்வ
சேதார முகவடிவுஞ் சேராத தீர்க்காயுட்
சேதார முகந்துறுமிச் சீர்த்தருமஞ் செப்பரிதால். (சுங)

புன்னைகுற வங்குரபம் பூகமிலாங் கலிகுடசம்
முன்னை வழை வில்வம்விளா முண்டகமா ரஞ்செருந்தி
வன்னிகளா விதழிபலா வகுளநாங் தஞ்சாளம்
பன்னிலகு சங்கோங்கு பாடலமுன் னீடலவன். (சுச)

மாதவிதன் மெனவன்மன மாலதிக மாலதிகள்
போதவிர்வன் சாதிமணம் பொலிமயிலை சண்பகமே
யாதியனைப் தாதவிழு மல்லிமலர் வல்லியெலாம்
பாதவமீப் பிரிவின்றிப் படர்ந்தொளிரு மடந்தையர்போல். (சுரு)

குறுகுலகோ கிலங்காளங் குயிற்றமிரு தங்கமரி
மதுகரம்யா ழிசைப்பமுசு மலர்கரதா ளம்மசைப்பச்
சதிமுறைமை வழாமையயற் றடமஞ்ஞை நடம்புரிய
முதுகனிப்பொற் றிரளையருண் முதவமுத சேகரங்கள். (சுசு)

மாதவர்கை யினநறும்புன் மடிநுகரு மானினங்கள்
ரேறுதடச மலகுவெ வுழுவைகிரை வாலதியாற்
போதகநீர் தெளிப்பவரி பூக்கொய்பணி தருஞ்சாபர்
நீதிலினைச் சிறைச்சிவிறித் திருத்தொண்டு செயுமாங்கே. (சுஎ)

* விண்ணேச்சுமடிக் கடாக்கிடி விஷ்ணுவாகிய சுகரிரா வராகம்.

கிளையமர்பைங் கிளைபுணர்தன் கிளைநுகரக் கிளைவானின்
விளைமலர்தூய் விளைதருவின் விரைக்கனிகொ ணூத்தாவக்
துளையெறிந்துள் ளுளைவுறவேம் புணக்கொடுத்தாங் கூடன்பிரு
டளையினுமிக் களைதருமா விலைச்சுவையு மிலையதனும். (௧௮)

வேறு.

இன்னதனிச் சூதநிழை யின்சுவையா ரமுதமய மிதுமைந் தோசன்
றன்னருளா தவின்வானந் தருமமுதி னுடற்குறுதி தருதலன்றி
மன்னுமுயிர்க் குறுதியையும் வளர்ப்பதெனு முளப்பொலிவு மருவுவாஞ்சை
துன்னுதபோ தனர்மலத்தின் னொருமைமுனியுந் தகைமுனிவர் சூழ்ந்தாரங்
[கே. (௧௯)

காசிபர்மார்க் கண்டர்கௌ தமர்பிருகு கடயோனி கர்க்கர் பைலி
யாசர்சுக ரத்திரிகுற் சகர்புலகர் யஞ்ஞபா லகர்பா ரத்து
வாசர்சனுர்த் தனர்சனகர் வருணர்சனந் தனர்சத்தி வாமதேவர்
கோசிகர்ப ராசரர்க கோளர்புலத் தியர்வசிட்டர் குற்ச ராதி. (௨௦)

சிவமுணர்மா தவமுனிவர் திருவமுத சூதவனந் திகழச் சேர்ந்தே
யுவமனிலா வுவகையரா யொருபோது மொருவாத வுளத்த ராகி
யவனுறைபல் லாச்சிரம மாமுடச மாக்கியினி தமர்ந்தா ரந்தத்
திவியமுனி சிகாமணிகள் சீலகுணச் சிறப்பெவர்வாய் திறக்க வல்லார். (௨௧)

அன்னவர்தா முன்னமர்சீ ரருட்கைலை மந்தரமே ருவைமுன் னுய
வென்னசிவ தலங்களினு மிலங்குசிவ தீர்த்தமெலா மிவண்வந் தென்று
மன்னுகவென் றுன்னினரம் மாண்புணர்ந்தாங் கனைத்துமிங்கு வையங்கு மந்
தப், பன்னரிய தீர்த்தமெலாம் படர்ந்தவண்பஃ றடங்களெனப் பாய்ப்பி
[னின்ற. (௨௨)

களியளியுண் டெவட்டெடுப்பக் கமழ்பிரசப் பெருவெள்ளங் கான்று நாளும்
வளர்கமலத் துணைகுமுத மலர்த்துணைகு வளைத்துணைமை வளைத்தெ ழுள்
ளிட், டுளபொருள்கட் குறையுளென வொளிர்தருமவ் வுயர்தடங்க ளுலவா
தென்றும், புளகநவிப் படியிலெவர் படியினுஞ்சூழ் பாவமறப் பண்ணு
[கும். (௨௩)

மாதர்வன சம்மனையின் மாராடனம் புரியவன மலிகொண் டங்க
ணாதமிசைப் பனகுமுத நற்சுடரேந் துவகீத நறுந்தேன் பாடும்
சீதமா கதக்கலசித் திலதீராஞ் சனந்துளிகள் சொரிய மம்பு
சாததமா லம்வளைப்பத் தக்கமுர சொலிப்பனபோ தகங்க ளாங்கே. (௨௪)

வாளைகள்*வான் றவரெனவவ் வாவியினும் வாவியெழில் வளர்கு தத்தின்
றேளதிர மோதுதலுந் தருஞ்சுவைமாண் கனிகள்பல தருவ தாமே
கோளுறுநெஞ் சினர்தீமை குயிற்றிடினும் பொறுத்ததனை குணமாக் கொ
ண்டு, மீளவுநற் பலனுடனே மிக்களிக்குந் தக்கவர்செய் மேன்மை காட்டும்.

வாவிதட மாநிரைசெவ் வனசநிரை மீதயல்வெண் மலர்தண் பூகந்
தாவியதம் மடைநுதியாற் சுரும்பரற்றக் கனிகனிதேன் றூவா நிற்றன்
மேவியவம் முனிவரர்நால் விதிமறையோ டொண்பொரிதூய் விளங்கு செம்
பொற், றூவிரிவட் டகைநறுநெய் தகச்சொரிந்தா குதிசெய்மகத் தகுதி காட்
[டும். (எசு)

இத்தகைய பற்பலமா ணெழிற்றடங்க ளிடையுலகமெனைத்து முள்ள
வுத்தமமா தீர்த்தமெலா முவந்தினிய பாவனமா யுற்றெறஞ் ஞான்றுஞ்
சித்திபுத்தி பத்திமுத்திச் சிறப்பெவையு மொருங்கருளுந் திறத்தி னாலு
மெய்த்தகைய புண்ணியமா விருக்கமெலாம் பெருக்கநிலாம் வியப்பி னாலும்.

திருவமுத சூதவனத் திருநாமத் தொருவாத சிறப்பி னாலுந்
தெருளமுத மீட்டியருட் டெள்ளமுத மூட்டிவளர் சிவப்பே றுய
பொருளமுத சிவானந்த போகமடுத் தடுத்தவர்க்கோர் புறத்தின் வெற்பின்
வருபெரிய நாயகிசேர் மந்திரநா யகனருளு மாண்பி னாலும். (எஅ)

கத்துதிரைக் கடலாடைக் காசினியிற் கண்ணுதலோன் கலந்து வாழு
முத்தமமா தலமெவற்று முத்தமமாந் தமதாமென் றுலகு போற்று
நித்தியமா தலமிதுவே நிசஞ்சொன்னேன் முகமனென நினையே லென்று
வத்தகைய திருநந்தி யடிகள்சனற் குமாரமுனிக் கருளி மேலும். (எகூ)

இவ்வருமை பெருமைதிக ழிருங்காதை யதிருப்ப மேனோர் தம்பா
லெவ்வகைய வேதுவினு மியம்பேலன் பொழியாத விதய சீல
மெய்வருடந் தவம்பழுத்த வித்தகசங் கமங்களுக்கே விளம்பு கென்று
தெவ்வடுவேற் பணிகொண்ட செவ்வேளிங் கெனக்கருளிச் செய்தான் மன்றே.

நனித்துணர்வித் தகனெனக்கு நவல்வானேன் விரித்தெனை நாதற்க ணந்தி
யினித்ததிரு மான்மியமீ திசைத்ததனைக் கேட்டளவா தின்புற் றேனைப்
பனித்தவள மதிவேணிப் பானருள்பெற் றுய்ந்தவர்சீர்ப் பண்பி னேடித்
தனித்தவன மாண்பினுக்கே தனித்தவனே முனனின்னுஞ் சாற்றுகெந்தாய்.

என்றுசனற் குமாரமுனி யெழுந்திறைஞ்சி நின்றனென் றிசைத்த சூத
வென்றிபுனை மாதவனை வினைக்கமலைத் தாள்பணிந்து மேலு மெந்தா
யன்றருணந் தீசனவற் கருளியவா றெமக்கின்னு மருளு கென்ன.
நன்றுணர்ச வுனகாதி நற்றவர் போற் றியசூத னவில்வான் மன்றே. (அ௦)

* வான்றவர் - வானவில்.

வேறு.

ஓது சவுனக ராதி முனிவர ரோகை நனிபெற மூதுணர்
சூத முனிமுன மோதி யருளின சூத வனநிப மான்மிய
மீது கனிமன மாத ரவின்மிக யாவர் வினவின ரோதினர்
மேத கவர்புவி வாழ்வு முழுவது மேவி யுறுவரோர் வீடரோ. (அரு)

சூதவனநாமகாரணச் சருக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ருஎசு.

---

# ஆதிசேடனுபதேசம் பெற்ற சருக்கம்.

தேமிகு மாமனு நாயகன் மேவிய சிவமாதல
மாமிர கானன மாநிப மோதின மகிநாயக
னேமுப தேசமு னேபெற லீதென ரசிதாசல
நாமிகு காவல ஞானசி காமணி நவில்வானரோ. (க)

வேறு.

இந்திரை இந்தி ராணி யீரிரு கோட்டு வால
சிந்துர நினைத்தாங் கீயுஞ் செம்மணி காம தேனு
முந்துமைந் தருக்கள் வான முதமுதற் பொருளெல் லாம
மைந்தவா கரமாங் கீர சாகரம் வழுத்தற் பாற்றே. (உ)

தொக்கமு துண்ம திக்தார் மதிக்தடி தொழாமைக் காவி
நக்கமுன் னுலங் காட்டி யந்தடி பணிந்த பின்றைத்
தக்கபே ரமுத மீந்து தண்ணருள் புரிந்த கீரா
விக்கட லிபமு கத்தெ மிறைதிரு வருட்செங் கோலே. (ங)

இத்திருப் பாற்க டற்க ணிடைமணித் தீவ மொன்று
புத்திதழ்த் தவள மாவும் புயப்பொருட் டெனத்து லங்கு
மெய்த்தகத் தீவி னிற்சு வேதமா புரம்பொ ருட்டின்
மத்தகத் தமர்வெள் ளோதி மத்தொழில் காட்டு மாதோ. (ச)

வழுத்துறு மச்சு வேத மாபுரச் செம்பொற் கோயின்
முழுத்தவம் மாரள வேந்து முதுகம ரம்பொன் மேனி
பழுத்தனுப் பயிலுல் வேதப் பண்ணவ னென்ன மேவு
விழுத்தகு மனைய செம்பொன் வியன்மணிக் கோயி லுப்பண். (ரு)

உருவளர் தவள மேனி யுரகவேந் துடல்வ ளைத்து
மருவுமெல் லணையவ் வேதன் வயங்குவெண் ணீறு பூத்த
திருமுக மதிய மென்னத் திகழுமா லிதன்பா லன்னோ
ணிருவிழி மணியின் சோதி யெழுந்தொருங் கிலங்கு மாபோல். (௬)

மாலிசை மாலின் மேனி மாலினீ தமரு மாலிக்
காலயில் கால கல்பூங் காவொளிப் பரியங் கத்தின்
மேலறி துயில்கொள் வேலை விண்ணுயர் மைநா கத்தின்
பாலொரு பால பானுப் பான்மையிற் படர்ந்து பல்கி. (௭)

மின்னொளி யுலகம் போர்ப்ப மிளிர்மணிச் செம்பொன் மோலி
சென்னிசேர்ந் திலங்க நீற்றுத் திருநுதல் பரிதி யோடு
துன்னுவெண் பிறையை மானத் தூமணி குண்ட லங்கள்
மன்னுமவ் வென்றா ழின்பால் வருமிரு குழவி மான. (௮)

இருவிழி யப்ப தங்க ளெதிரு ணறவெஞ் ஞான்றும்
பெருகுசெங் கமல மானப் பிறைமுனை மலர்செவ் வாம்பல்
பொருவிய திருவா யென்றும் பொலிந்திரு மதகிற் பாய்ந்துங்
கருணைநீ ரணுவுங் குன்றாக் கவின்றிரு வதனங் காட்ட. (௯)

மைம்மலைக் கிளைத்த நான்கு மாமணிச் சிகரமென்ன
விம்முதிண் டோளி லங்க வெங்கதிர் தன்கி ழத்தி
யம்முலை மணந்தாங் கோர்கை யாத்தவெம் பரிதி தோன்றச்
செம்மறை மராளத் தாங்கோர் செங்கையிற் சங்கி லங்க. (௧௦)

வரதநல் லபயம் வாம வலத்திரு வண்கை காட்ட
வரதநு முதலை மைந்த வங்கத கங்க ணாதி
யுரதநு வைசயந்தி யுயர்மணி யார மாதி
சாதந வொளியெங் கெங்குந் தனித்தனி கான்றி மைப்ப. (௧௧)

கவினிறை மணிவேந் தாகுங் கவுத்துவ மணிமா தீப
மவிர்தர வனவ னத்தண் ணணிநிழல் பரப்பு மார்பாந்
திவியவா தனத்தி னீல மணிமிசைச் செம்பொன் சேர்த்தாங்
குவமனே யுலகெ லாந்தேற் றுருபெருந் திருவி ளங்க. (௧௨)

மறுவெனப் படுவ யாவும் வர்ச்சித மெவர்க ளானு
முறுமிடத் துயர்வா லன்றே யுலகெலா முணர்ச்சி மேன்மை
பெறுபெருங் கவிக ளெல்லாம் பேணுமா பெறுமி தென்னத்
துறுமெழின் மறுவொன் றம்ம தூயவம் மார்பி லங்க. (௧௩)

உலகெலா மரபி னோங்க வுற்பவிப் பிக்கு மூல
குலமகப் பசும்பொன் றேசு கூர்மல ருந்தி யோடு
தலமெலாம் போற்று தாமோ தரபதப் பொருளின் வாய்மை
மலர்வட தளிர்மே லாந்தன் மல்கெழி லுதரங் காட்ட. (கச)

மாற்றுயர் சுவண நாக மருங்கொளிர் தரச்செங் கேழ்ப்பன்
னூற்றிதழ்க் கமல நீரி னேற்றிதற் கொப்பான் பன்னாட்
சேற்றிரீஇப் பங்கத் தோற்றஞ் சிவணிய வுகைமெல்லாம்
போற்றிய லெழின்மென் பாதப் போதருட் டேன்ற தும்ப. (கரு)

பரிபுர மாதி யம்பொற் பன்மணிப் பணிப ணிந்தார்க்
கருள்செயல் பலமுன் கூறி யழைத்தென வொலிப்ப நீலத்
திருவுரு நிறனு மேற்கொ டிருவெண்ணீற் றொளியுந் தன்னை
மருவியற் குணனுங் காப்பின் வளை வளை குணனுங் காட்ட. (கசு)

கடிமல ராசா ரத்தின் கதிரொளி படைப்புந் தானே
கடிமலர் மகற்கொண் டாற்றல் காட்டிரா சதம்வி ளக்க
கடிமலத் தவர்பல் லோர்முன் கண்ணருள் விழைந்து போற்றக்
* கடிமல விகங்க ராசன் கைகுவித் தெதிர்நின் றேத்த. (கஎ)

தேனல ரம்பு சாதச் செம்மல ரயன்மா லாதி
வானவர் சென்னி தாழ்த்த மாதவர் சூழ்ந்து வாழ்த்த
வானவர் பன்னி மாராங் காங்குபல் லாண்டு கூறக்
கானவர் கைவ ளத்தின் கைவளத் திசைக ளேற. (கஅ)

இன்னிய முள்ள வெல்லா மெழுந்திசை யெடுப்ப விண்ணிற்
கன்னியர் மரபி னாடக் கதைதவசி சார்ங்க மாதி
பன்னியற் படைக்க லம்பற் பலசூழீஇப் பணியி னிற்பக்
கொன்னியற் சேனைக் கோன்பொற் கோல்கொடு நெருக்கொ துக்க.

மாமறைத் துழனி மல்க மற்றுள கலைகள் பல்க
தேமலர்க் குழற்பூ தேவி தேற்றெழி னீளா தேவி
மாமலர்ப் பூம்ப தங்கள் வருடியாங் கிருபா லோகை
யாமல ருததி மூழ்க வமர்ந்தரு டிருவோ லக்கம். (உ0)

---

* கடி - விரைவு. மல - வளப்பமுடைய.

வேறு.

தன்னுளங் கவர்ந்து கண்ணிறை காட்சித் தக்கபே ருவகைநேர் தரக்கண்
டென்னுடை நாதா விருஞ்செகந் நாதா விந்திரை வந்தித நாதா
மன்னரு ணிதியே வைகுண்ட பதியே மாசிலார் பெறுபெருங் கதியே
யின்னருட் டிதியே யியற்றுதண் மதியே யாவையு முணர்ந்தமா றுதியே. ()

என்றினி தனந்த னனந்தமாண் டெதிக ளிசைத்தினி தெந்தையே யென்றும்
பொன்றுறு நித்தி யானந்த பரம போகமே புரிவதாய் விரிவதாய்ப் போத
நன்றிலாச் சனன சாகரங் கடத்து நலத்ததாய் வதைத்தவே தாந்த
முன்றிகழ் சகலா கமங்கள்சம் மதமாய் மொழியுமெய் வழியினை முறையே.

அறிவிலாச் சிறியேற் கருள்கென விரப்ப வன்னது தன்னிரு செவியேற்
றிறைவனு மனைய முகுந்தநா யகன்போ லீசற் குணநிதே யிதுகேண்
முறையினின் விறுவுக் கிறைபென வருளு முற்றுணர் பராபர முதலாய்
நிறைசமு சார வுததிதா ரகமாய் நித்தியா னந்தவின் மலமாய். (உ௩)

ஆதிமத் தியாந்த ரகிதமா யனாதி யாய்நிரு விகற்பமா யளவாச்
சோதியாய்ச் சமயா தீதமாய்ச் சிவதத் துவமுப சாந்தமுன் றுய
நீதியாய் வேத முடிவினிற் பிரம நேயமாய் நிறைதரு சிவத்வைத
யோதியா னுள்ள படியுணர்ந் துபாசித் துறுமிலை பெறுமவ ரெவரோ. (உ௪)

அவர்களீ ரினவு ரகசிய நெறிமுற் றறிவரீ தறிந்திலா ரவர்மற்
றவரொரு சிறிது மன்பிலார் நரரு ளதமராங் கவர்களே யாவர்
தவதிரு மனந்த வாதனை லினைய சதாசிவ மூர்த்திபூ சனையே
தவமின வேட்கை தருமலால் வேறு சாதனை பிலையீது சரதம். (உ௫)

யாவரோ வீரத் தவம்பெறீ ரோயோ ரணைந் திந்திய *புபுட்சுக்க ளாகா
தோவியே யாசை யொழிபயன் கருதா தத்தம பத்திபெற் றுய்வோ
ராவரே யரிய முமூட்சுக்க ளென்றுங் கருமறை பெருமுறை யறையும்
வாவுறும் விடய நுகர்ச்சிமுன் னுவ மாற்றுநற் கசத்தரே லவர்தாம். (உ௬)

விதிவழி வழாமன் மதிநதி வேணி விமலனை யமலமா விழைவாற்
றுதிவழி பாட்டிற் பதிமன மாட்டித் துரிசறப் பூசித்த லுறுவே
கதிவழி யாமா லிதுதுணிந் தென்றுங் கைவிடா தய்வுறக் காணூஉ
மதிவழி யுடனுள் ளளவிரு வினையின் வருபய னுருவற நுகர்ந்து. (உ௭)

---

* புபுட்சுக்கள் - புசிக்கும் இச்சையுடையார்.

நியதிசெய் பூசோ பாசஞ் பெலத்தா னிமலமெய்ஞ் ஞானமுன் னிகழு
மயர்விலா வாய்மை மலர்சிவ ஞான வலியினுன் மருவுதே காந்தத்
தயர்விலா தென்று மழிவிலா தமரு மத்துவி தானந்த போக
நயனிறை மோக்க நண்ணுப தின்ண நன்குண ரங்கத நாத. (உஅ)

ஆதலாற் சமுசா ரோததி கடந்தே யருளினு னித்தியா னந்த
போதவீ டுறுதற் கேதுவச் சிவனைப் புலமொரீஇ நலமரீஇப் புனித
பாதமெய்ச் சிவஞா னம்பெறீஇ யுள்ள படியுணர்ந் திரண்டறப் பயிற்று
மோதபூ சனையேயன்றிவே றிலையான் முடிபிதென் றுணரகி முதல்வ. (உகூ)

செப்பியாங் கனைய தத்துவ முணர்ந்து சிவத்துவம் பெறற்கிடை யூறு
மொப்பரும் பசுத்து வம்முயி ரெவற்று மொழிவுறு வழிவிரிந் துளதா
லிப்பசுத் துவந்தா னெத்தவத் தாலு மிரிந்திடா திரித்திடு மிவனே
யப்பர மோக்க விருப்பனிட் களங்க னகமிலா னெனுமறை யந்தம். (ங0)

வேறு.

இத்தகைய பசுத்துவத்தை யிரிப்பதுதான் பாசுபத தீக்கை யேயா
முத்தமமா மிதுவிரசா வோமமுட னிகழ்வுறச்செ யுண்மைத் தாமாற்
பத்திமையால் விரதநெறி பன்னிருநா ணியமமுறப் பயிற்றல் வேண்டும்
வித்தகவம் மகதீக்கை விதியினைநா முள்ளபடி விளம்பக் கேணீ. (ஙக)

இன்னவிர சாமகத்துக் கிடுஞ்சமித்துக் கோமயமன் னிதுகொள் காலம்
பன்னுமுவா விருநான்கு பதினன்காந் தினநான்கு பரம மிந்த
மன்னுதினத் தீன்றணிமை வருபிணியீ னுக்கன்னி மலடு மூப்பே
யுன்னுறுகன் றிறப்புமல முண்பதிவை யுறுகிரைநன் குணர்ந்துசார்ந்து. (ஙஉ)

அனையநறுங் கோமயத்தை யளிக்குங்காற் பின்மரைமெல் லடையிற் சாத
மனுநவில்பேற் றம்மயமேல் வழும்பகற்றிக் கோசலம்வா மத்தாற் பெய்து
பினைநவிலு மகோரத்தாற் பிசைந்துருட்டி யுலர்த்திமுனம் பேணிக் கொண்
டே, முனைவிலோ மந்தொடங்கன் முறையாகு மம்முறைமேன் மொழியக்
[கேட்டி. (ஙங)

அக்கினிகோத் திரமுளரி யரணிசுசி தரணிசிலை யழலிம் மூன்றிற்
புக்கதொரு வசுவெழுப்பிப் புருடத்தான் மயசுட்கம் பொலிய மூட்டிச்
சொக்கிரா கியமாகுஞ் சூத்திரத்திற் சொன்முறையித் தூவேள் விக்குத்
தக்கமனு நாலொன்பான் றத்துவா தியசுத்தி தயங்கக்கூறி. (ஙச)

சொல்லியவான் கிருதத்தாற் சொல்லியவா ருகுதிக லெங்க வாற்றி
வில்லியனுஞ் சயாதியோ மஞ்செயலு மீற்றின்முறை விளங்க வாற்றி
நல்லியன்முற் றமைந்துபிர திட்டையிலா வோரிலிங்க நாடிக் கொண்டாங்
கெல்லியனூல் விதிப்படியே பிரதிட்டைபுரிந்தருச்சித் தினிதுபோற்றி. (ஙரு)

மேவுபசுத் துவநீக்க விருப்பொடுநன் னெறியொழுகும் வேதி யர்க்குத்
தாவருநால் வகையுண்டி தக்கிணை தாம் பூலாதி தகமு னல்கிச்
சேவுடையான் பாசுபத தீக்கைமுறை யக்கினொற் றிணியா மத்துந்
தேவியலவ் வருட்குறியைத் தியானமிடை யறுதன்பு திகழப் போற்றி. (௧௬)

வேண்டுமுப காரணமெலாம் விருப்பமிக நனியீட்டி விளங்கப் பூசித்
தேண்டருமெம் பெருமானே யிந்துசே கரனேயெம் மிறையே மன்றிற்
றாண்டவருஞ் சிதபாதா தருகிரிசை மகிழ்நாதா சுயியே னிந்நாட்
பூண்டவிர தம்முடித்துப் புணர்பசுத்து வம்முழுதும் போக்கி மேலும். (௧௭)

உள்ளபடி சிவத்துவப்பேற் றுண்மைதிகழ் தாவருளே யுதவு கெந்தாய்
கள்ளமனத் தேனெனினுங் கைவிடனின் னடிமையெனக் கரைந்திவ்வாறே
தெள்ளுமுளத் தீரா றினங்களும்பூ சனையோமஞ் செயலோடாற்றி
நள்ளருளாற் பதின்மூன்று நாளுநய நித்தியமு நடாத்திப் பின்னர். (௧௮)

நேசனையாப் பூசனையா னிலவியவக் குலவிலிங்க நிமலன் றன்னை
மாசனைவ ருந்தெறவே மதித்தமைந்த சிவானுபவ மனஞ்சேர்த் தென்று
மீசனையே பசுத்துவநீக் கிடுதிறமை யொடுதிகழு மெழிலா சாற்கு
பாசனையாற் றக்கிணைதாம் பூலமொடு பரிந்தளித்துப் பணிந்துபோற்றி. (௧௯)

பின்பனைய குரவனைநாற் பெருமறையோர் மரபினைப் பேதி யாமெய்
யன்புறுமா சேசுரரை யறுசுவைநால் வகையுண்டி யயில்வித் தன்போ
டின்புறுதக் கிணையாதி யினிதளித்தி யகிந்திரநீ யிவ்வா றுக
முன்புரிய பாசுபத தீக்கையிடை யூறின்றி முடித்தி யாலோ. (௨௰)

வேறு.

முறைமையினித் தீக்கையினை முடித்தியெனிற் பசுத்துவம்போய்
நிறைவியசா லோமத்தா னிருமலகாத் திரனாகி
யறைதருமிச் செயன்முடிவி லாசமனை யிருமுறைசெய்
திறைவியசா லோமாந்தத் தெடுத்தொளிர்வெண் ணீறுதல். (௨௧)

அங்கிகோத் திரமெனபா சனஞ்சதி கோத்திரமத்
தங்கியொக் கினியிவற்றின் றாயதிரு நீறுதல்
செய்கையில்யா தொன்றேனுந் திருந்தவமைத் தங்கியெனத்
தங்குபத முதலமைந்த தக்கமது வோமோழால். (௨௨)

மைத்தனிக்கை மேன்முடி மனனுறமும் முறைசெபித்து
வைத்தொடபி மந்திரித்தோ மாபோவென் மனுவாலு
நலத்தகைய * வாபோவா மனுவாலு நறுநீராச்
செலத்ததிதே வினைவினைந்து தெளித்தனைய திருநீற்றை. (௨௩)

* வகாம்-உடம்பு-மெய்.

ஒப்பவொரு முப்பாக முறப்பகுத்தோர் பாகத்தைச்
செப்பருமீ சானத்தாற் சென்னியிற்றற் புருடத்தாற்
றப்பின்முகத் தகோரத்தாற் சாற்றிசைய மகமேதோ
டிப்பியவா மத்தாந்தி சாதத்தாற் றிரள்சானு. (௪௪)

இருகாங்க ளாமுழுப்பி னெழிலுறமே பனமாகப்
பெருகுறப்பூ சுபுயின்னர்ப் பிரித்துளமற் றொருபாகத்
திருவருள்காட் டிடுநீற்றைச் சென்னிமுதற் பாதம்வரை
யொருவறமெய்ப் பூசுபுபின் புடனிருகா லாசமித்தே. (௪௫)

அனந்தரமற் றொருபாகத் தணிநீற்றைச் சென்னிமுத
லினந்தருமைந் திடத்தாத லெண்ணிரண்டெண் ணுறன்காதல்
வனந்தருதத் துவவகையின் மருவாமு றிடனுதல்
மனந்தாமுன் மனுமுறையின் மலிதிரிபுண் டரமாக. (௪௬)

தரித்திடுதன் மாபாமித் தருநீறு தரித்தவரோ
யிரித்திடுவர் பசுத்துவமிவ் விரும்பாசு பததீக்கை
புரைத்தவிதி வழாதன்பி னுருற்றினுமுன் ளுயிர்போல
வரத்தகுமாண் புளதொன்று வழங்குதுமற் றதுகேட்டி. (௪௭)

செபமூலம் யாகாதி செயன்மூல மருமுனிவோர்
தபமூல ஞானசா தனமூலஞ் சிதம்பரமா
நபமூல மறைக்குயிரா நன்மூலஞ் சின்மூல
முபமான மிலாதென்று முயர்பஞ்சாக் கரமூலம். (௪௮)

நவிலிஃதேழ் கோடிமனு ராசாதி ராசமனு
திவியமனுப் பாசுபத தீக்கையினும் பலனளித்தற்
கவிர்தருமுக் கியமிபமா மதிகாரி ரிதன்பாலே
கவிதருமிவ் வருட்பஞ்சாக் கரமுறைநீ பெறல்வேண்டும். (௪௯)

பரமசிவப் பிரசாதம் பரிந்தருளிம் மனுவேந்து
வரமிகுமா றக்காமா மருவுதொகை வகைமரு
மரனதிக னேயெனமுன் னுஞ்சுரு ளெனின்மனுவுட்
டானதிக மிதுவென்று செப்புவதென் றெளிமனத்தோய். (௫௦)

வேறு.

வேத முடிசொல் கைவலிய விமல மோக்க தாயகமிப்
போத மயமந் திரமேயாம் புனித முனிவர் கனிமனத்திற்
பேத மறவீற் றிருக்குமிதிற் பிறங்கோ ரெழுத்தின் பெருமையெனு
மோத லரிதே யுன்னரிதே யும்ப ரெவர்க்கு மயற்கெனக்கும். (௫௧)

சகல வேத கோடிகளுஞ் சாற்று சிரங்க ளெல்லாமுஞ்
சகல கலையு மெய்ப்பொருளுந் தன்னு ளமைந்து தனிவிளங்க
வகல மளிக்கு மாதார மாகு மவற்று ளெஞ்ஞான்று
மகல வரிய வாருயிரா யவிரு மகாமந் திரமிதுவே. (௫௨)

சத்து சித்தா னந்தவுப சாந்த பரிபூ ரணவிமல
சுத்த முத்த நித்தபர சுத்தாத் துவித பரப்பிரம
வத்து தானென் றுபநிடஞ்சொல் வரத பரம சிவனென்று
முத்தி முதலாய் வீற்றிருக்கு மூல மகாமந் திரமிதுவே. (௫௩)

ஏனை மனுக்கள் குடிலையுஞ்சேர்த் தெண்ணப் படுவ தத்தமெழுத்
தான வளவை சிற்சிலதம் மந்த மருவா தளப்பனவா
மான மறுவீ தக்குடிலை மருவா தந்தம் வரையெண்ணு
மேன திருவைந் தெழுத்தெனவே விளக்குமியற்சீர் பெறுமனுவாம்.

இதனு ளிதுதா ரகஞ்சேர்ந்தா றெழுத்தா யெண்ணப்பெறினுமீதை
முதனூ லாதி கலையெல்லா மொழிவ திருவைந் தெழுத் தென்றே
சிதமா முனிவ ரிதுபேணிச் சிவாபி வியத்திப் பேறுற்றார்
புதர்பற் பலரு மிதுகொண்டே பொருவில் பதங்கள் பலபெற்றார்.

இன்ன மறுவி னமவென்னு மிரண்டக்கரங்கள்பசுத்துவந்தீர்ந்
துன்னுமான்மாபரசிவத்தோடொன்றிவாழ்மெய்ப்பொருளுணர்த்து
மன்னு நமசி வாயவென வழுத்திம் மனுமா மலபந்தத்
தின்ன லொழிந்துய் யுறவுயிர்கட் கீசன் றனே தருமனுவாம். (௫௬)

யாவ ரிதயத் திம்மனுவீற் றிருக்கு மவருக் குபநிடதத்
தாவில் பொருளா மருந்தவத்தாற் றருநீர்த் தாதி யாகாதி
யோவி லறனுற் றமக்காக வேண்டும் பயன்வே றொன்றிலையான்
மேவிம் மனுவோர் முறையேனு மெய்யன் புறவோ தாவிடிலோ. ()

கணிப்பி லபார துக்க பயங் கரசங் குலவா கரமாய
கணிப்பில் சமுசா ரப்பெருஞ்சா கரநீந் துறவே யுபாயமிலை
தணிப்பில் சகல வுபநிடபூ ரணவிம் மனுவே சகலசுகந்
தணிப்பில் பரம சிவஞானோ தயமுக் கியகா ரணமாகும். (௫௮)

தருணை வலிய சிற்சொருபந் தன்னை விளக்கு மணிவிளக்குத்
தருபல் குரூர பஞ்சபா தகதா வாங்கி யென்றுரைக்கத்
தருமிப் பிராண வஞ்சார்பஞ் சாக்க ரம்மே மோக்கம்விழை
தருநால் வருணர் சங்காருஞ் சாற்றும் வரோப காரமனு. (௫௯)

எனநாரண னோதிய வாய்மையமு திருகட்செவி வாய்நுகர்ந் தேயமுத
நனிகூடகி நாயக னோதுறுமென் னுதாதிரு நாதவெ னக்குயிரி
னினியாரினி யாருனை யல்லதையிங் கெளியேனுயு மாறிரங் காரருளாற்
றனியோதிய யாவுநின் பாற்பெறவே தமியேற்குள மார்வமிக் கூர்வதரோ.

அண்ணலெனை யேன்றுகொண் டின்னருளே யளித்தோயகி லம்புமளித்த
ருளாய், கண்ணுவருள் கொண்டுய னிக்கடிமேற் கைகூப்பிய சென்னியன்
வீழ்ந்துபணிந், தெண்ணேர்பெற வேண்டலு நீண்டவனுங் கிரும்பைப்பதி
யெண்ணமு டித்துமென, வொண்ணுநீதி பெற்றெனை முற்றுவளை யுதிப்
[புனன் மூழ்கின னாங்குடனே. (௬௮)

பின்னேயமொடன்னபணிந்திரணப்பெருமான்றிருச்சந்நிதிமுன்னுறுமோர்,
மன்னேர்திருபுண்ணியதீர்த்தமலர்வாவிப்புனலும்படிந்தாசமியாத், தன்னே
ர்திருநீறணிந்தெல்லைபெருத்தண்மாமணிமெல்லிலைகோலமுடன், கன்னே
ர்கவிகைத்திருமாலடிக்கீழ்க்காணிக்கையதாகமுன்வைத்தனனால். (௬௯)

மேனுந்துதி விண்ணுமு னின்றனனவ் வியாளேசனுக் கத்திரு மாதவனெந்
நானுந்துதி செய்விர சானவமார் நலம்பாசுப தச்சிவ தீக்கைமறை
நாலுந்துதிமந்திரமாதியெலாநயப்பப்புரிந் தத்திருநீறளித்தெக் [மனம். (௭௰)
காலுந்துதி செய்திரு வைந்தெழுத்தைக் கருதிப்பொருள் வாய்மைகளிந்து

வேறு.

ஏகச்சிவ மாகத்தனைப் பாவித்திரு கண்ணுற்
பாகத்துற நோக்கித்தரு பார்வைத்திரு வமுதாற்
சேகற்றுய வாசத்தனி விரதச்செயல் கோளந்
நாகர்க்கிறை தேகத்தினை ஞானம்புரி வித்தே. (௭௧)

தன்னேர்முகங் கிழக்காகவங் கதக்கோலினை யிருத்தி
யன்னோன்சிர மிசையங்கைவைத் தருண்மாசிவரூப
மென்றவரு திருவைந்தெழுத் துபதேசமு னியற்றி
மன்னேர்சிவ மயமாக்கினன் மகியேந்தகி வேந்தை. (௭௨)

உரையாதிக ளாலும்மன னுணராவொளிர் மனுவேந்
துரையாலொரு செவிவாயினு மொருவாத்திரு வமுதாய்
*வரையாமுன மெனமாதவம் வாய்த்தோமென மகிழா
வரையாதமெ யறிவானந்த மயவாரிதி படிந்தான். (௭௩)

* வரையாம் எனப்பிரிக்குக.

தானென்பெருரு சிவமென்றிரு வேறின்றெழு தருமெ
யானந்தமம் மானந்தம ரங்கைப்பெரு மான்றன்
பானன்றருள் காமத்தக பரிசாதிய பயனுறன்
மானந்தர வெல்லாஞ்சிவ மயமாய்வயங் கினளும். (எச)

அதிநாயக னலர்நாயகி யணிநாயக னடியிற்
றகுமாதர மிகவீழ்ந்தடிக் கடிதாழ்ந்துபசீ ருதிசன்
மிகவோதியவ் வரிதாட்பணி விடைபரிக்குளாம் விழைந்தா
னிகவாழ்வயன் முதலோர்பத மெல்லாந்தரும் பெனவே. (எரு)

மதியாநதி மதிவேணியன் பதவம்புய மலரோ
கதியாமனம் பதியாவொரு கணமும்மற வாதப்
பதியாருட் குறியாஞ்சுயம் பிலிங்கேசபொற் பதமே
விதியோடருச் சனையேபுரி விழைவேமிக வமர்ந்தான். (எசு)

என்றேதிய நந்தீசனை யிருதாள்சனற் குமர
னன்றுதர விறைஞ்சாநலிக் கதைமேலுற யங்கே
நின்றுவென வருள்குதனை நேயம்மிகு முனிவோர்
பின்றுனர விறைகாதையென் னெனவாங்கவன் பேசும். (எஎ)

வேறு.

திருவைப்புணர் மாதவ னற்புரிகு திறனுற்றெழு சேட னுளக்களிகூர்
தாமுற்றுப தேசமு ளாத்தகதை தனையற்பின்வி ளுவினர் செப்பினர்தாம்
குருவைப்பெறு வார்கள்ப சுத்துவறிக்குலமெய்ச்சிவ ஞானமுறப்பெறுவார்
பருகுத்திக வாழ்வுகண் முற்றுமொரு பாமுத்திபு மேவுவர் திச்சயமே.(எஅ)

ஆதிசேடனுபதேசம்பெற்ற சருக்கம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் (கூ௨.அ)

சாலமா சினியி லந்தை தாத்திரி பாரி சாதி
மாலமா துளைய சோக மாசுகர்ச் சூர மாத
மாலமஞ் சாடி நாவன் மதாகஞ்சே வோமை வெள்ளி
லேலமி லவங்கஞ் சாதி யிலாங்கலி பூக நாகம். (அ)

ஆதிய நிரைக ளந்த வாம்பிரா டவிச்செ றிந்து
சாதிதா டிமஞ்சம் பங்கி சண்பக மயிலை யீந்தின்
மாதவி மல்லி முல்லை மதுரமுன் வல்லி தத்த
மீதழீஇப் படர்ந்து பல்க விண்ணெலா மளர்ந்து மல்கும். (கூ)

வேரிகை நிமிர மாந்தி மிழற்றிசைச் சுரும்ப ராதி
சாரிகை காள கண்டந் தத்தைசா தகஞ்ச கோரங்
காரிகை யோதி மஞ்சி காவளஞ் சிவல்க போதம்
* வாரிகை யிசைமுற் றத்த மாண்செயல் வழங்க மல்கும். (கo)

வாவிபல் வலந்த டாக மடுச்சா சேரி கேணி
யாவியு வளக மேல்லை யலந்தைமுன் னுய வென்றுங்
காவிபங் கயங்கல் லாரங் கைரவ மாதி தாகீர்ப்
பூவிரித் துளங்க வர்ந்து பொலிவினெங் கெங்கு மல்கும். (கக)

மிருகண்டு சூனு வாதி விழுந்தவ முனிகு ழாங்க
ளருள்கண்டத் துவித போகத் தமர்ந்துவா ழுடசந் தோறும்
பொருசுண்ட வேழஞ் சீயம் புண்டரீ காதி யாங்கே
வருதொண்டு பலவுஞ் செய்தே மாவெருழிந் தமர்ந்து சூழ்வ. (கஉ)

இன்னன பலவ ளங்க ளெல்லையின் றென்றும் பல்கு
மன்னமா வனத்தி லெங்கு மமுதமுன் னடுத்த தாய்மை
யுன்னியோ வுலகெ லாமுய்ந் துறந்திரு வுளங்கொண் டோங்கின்
மன்னுபுண் ணியவி சிட்ட மலபரி பாகத் தாலோ. (கங)

தானருண் மறைக ளாலுஞ் சாற்றுமற் றளவை யாலு
ஞானமா முனிவ ராலு மெளனமுன் வா னவர்க ளாலு
மேனவின் மனம்வாக் காதி வேறெவற் றாலு மெட்டா
மானமெய்ச் சிவமே லிங்க வடிவமாய்ச் சுயம்பு வாகி. (கச)

அவ்வன நாப்பட் டோன்றி யாரமு தெனச்சு வேத
மெய்வ்வள ரொளியி னீடி விளங்குமவ் விலிங்க மூர்த்தி
திவ்விய சரண பூசை சிவாகம விதியாற் செய்தி
யிவ்வருட் செயனீ வேட்ட தின்னுறு புதுமைத் தன்றால். (கரு)

---

* வாரி - இசைக்குழல்.

பதஞ்சலி யாகி முன்னம் பாமஞர் முன்ன மங்கை
முதஞ்சலி கூப்பச் சென்று முறைமுறை யிறைஞ்சிப் பூசை
நிதஞ்சலி யாம லாற்றி நிருத்தநேர் காணப் பெற்றாங்
கிதஞ்சலி லங்கொள் வேணி யிறையருள் செயப்பெற் றாயால். (கசு)

வேறு.

இப்பகலு மப்படியே யாம்புகலிச் சூதவனத்
தொப்பரிய மெய்ப்பொருளை யுமாபதியை யெமாதருமை
வைப்பினைநூல் செப்புநெறி வழாயலருச் சனைபுரிந்தி
யப்பாம னெப்பொழுது மமாமுத வருட்குறியில். (கஎ)

பணியரசே சிவார்ச்சனையாம் பணிபுரியப் பணிவொடுநீ
யணியனைய சூதவன மெய்துமுன மெய்தருபன்
மணிகனக நிதிவகைகள் வரம்பிலகொண் டருமறைக
ணிபுணர்ந்து சிவாகமமுற் றுரிசறத்தேர்ந் துளந்தெளிந்த. (கஅ)

நிதறுபோ தகராதி சிவமறையோர் வைதிகரை
மூதகுசீர்க் காசியப முதலாய முழுதுணர்ந்த
நேதருபல் விமாளுதி நிருமிதசா தகசதுர
ரோதுமெல்லை நிகம்வல்லா ருடன்றேவர் கம்பியனை. (ககூ)

உடனழைத்துக் கொடுவிளைந்த வுத்தமமா வனஞ்சேர்ந்தங்
கடைதினத்திற் சேத்திரபிண் டாதியுப வாசாதி
கடனமைத்து மடனகற்றிக் கதிபுகுத்து மான்மார்த்தந்
திடனிலேத்த சிவலிங்க சிவார்ச்சனைசெய் குதிவிதியால். (உ0)

சகலதல சிவலிங்க வியட்டிபூ சனைப்பயன்முற்
றகலமுற வளித்திடுமோன் மார்த்தபூ சனையதனு
விகலரிய மாகதமா விலிங்கமுனைக் களிக்கின்றேம்
புகலருமன் பாலென்றும் பூசைவழா தியற்றுதியால். (உக)

என்றருளி முகுந்தனா விறையிறைஞ்சி யெதிர்நிற்ப
மன்றன்மல ராதிகொடு மாபின்மா கதலிங்கத்
தொன்றியபூ சனைபுரிந்தீற் றேமாங்கி வினைநிரப்பித்
தன்றிருமென் கரத்தாலச் சாலிங்கந் தனையளித்தான். (உஉ)

அதியாச னடிவணங்கி யங்கையிணை விரித்தேந்தித்
தருமலரா தியகொண்டா சானெதிரா னையின்விதியான்
மிகுகிரியா தியதெரிப்ப விழைதகுபூ சனைமுடித்து
நெகுமுளத்தாற் குருபூசை நேரியற்றிப் பணிந்தெழுந்தான். (உங)

குரவெதிர்நின் றரவிறைபின் கூறுகின்றான் மார்க்க
சரவிலிங்க பூசனையே சகலதல சிவலிங்க
பரமபூ சனைப்பயனைப் பாலிக்கு மென்றனையாம்
பிரவணநா யகன்பூசை பேணுகெனப் பணித்ததை யென். (உ-ச)

அடிகளடி யேனுளத்தி னையமொழித் தருளுகென
முடிவணங்கி யெதிர்நின்றான் முகநோக்கி மொழிகின்றா
னெடியவனங் கதவேந்த நீகேட்டி நிபந்தெரிப்பாங்
கடிவருமான் மார்க்கநெறிக் காசறுமா பூசனைதான். (உ-ரு)

சுருதிசிவா கமமாதி யாதிசைவ சம்மதமே
கருதுமது கைக்கொண்டோர் கனிவுறுதா வரலிங்க
பரமசிவ வழிபாடும் பரிவுயிகக் கொளல்வேண்டும்
வரமிகுதா வரலிங்க வகைபலவா மவைகேட்டி. (உ-சு)

வேறு.

மனுட தாபித லிங்கமே மானுட லிங்க
முனிவர் தானவர் திருதரான் முனைத்ததா ரிடமே
யெனைமு றைஞ்சுதா பிதந் தைவிக லிலிங்கங்
கனிக ணேசகு காதிதா பிதங்கண லிங்கம். (உ-எ)

உலகெ லாமுய வருவிற்று ளுதித்ததே சுயம்பு
விலகு மிவ்விய லவகை யொன்றுக்கொன் றேற்றங்
குலவு மாயிர மயுதமி லக்கமே கோடி
நிலவ னந்தமா மடங்குயர்ந் தரும்பய னிகழ்த்தும். (உ-அ)

வழுத்து மிவ்வகை யன்றியே ஒருருவகை வயங்குங்
குழைத்த மண்கடு மண்டருச் சிலைகொள்சி ருணமு
னிழைத்த ரத்தின மொண்மணி வாணமே யிரதம்
பழுத்த மெய்ச்சுயம் பெனவிரண் டைந்தொரு பகுப்பாம். (உ-கு)

இன்ன பத்தினுண் முன்னைநான் கொன்றினொன் றேற்றந்
துன்னு மொவ்வொரு பதின்மடங் கனையதாச் சைலந்
தன்னி லாறுபங் குலோகமாங் கதினிரத் தினந்தான்
மன்னுமாயிர மதின்மணி யிலக்கமே வாணம். (ந.0)

அன்னதற்கொரு கோடியே விரதமாங் கனைத்தே
யின்னருட்சுயம் பிலிங்கமாங் கதனிலு மேற்ற
மென்ன லாமலா ளவுகண் டிசைப்பரி தெவர்க்கும்
மன்னு பூசையீற் றினில்விடு மிலிங்கமோர் வகைகேள். (ந-க)

மண்ணுறு தண்டலை மன்னமாற் றுமணல்கோ மயமே
வெண்ணெய் கண்மணி சந்தனங் கூர்ச்சம்பூ விளைத்தார்
நண்ணுறு சர்க்கரை மாவென நவில்பவா றிரண்டி
னொண்ணணி யாதொன்றிற் புரியினு மிலிங்கபூ சனையே. (௩௨)

போதக ருத்திரா ராதிய புனிதராற் பூவில்
வேதனாதிய ளப்பிலா விபுதரா லென்னான்
மாதவ போதனர் ஞானவர் நிருதர்மற் றவராற்
கோதற றப்புரி யிலிங்கங்கள் கோடிமா கோடி. (௩௩)

ஆய வெவ்வகை யிலிங்கத் துஞ் சுயம்புவிற் கதிகந்
தாய மெய்வகைப் பயனெலா மொளிருடன் றுறுத்து
மேய விவ்வியன் மெய்ம்மையா லமுதமா வியினந்
தேயமுய்வுறத் திவ்விய வமுதலிங் கேசன். (௩௪)

அருளி னிற்கள வில்பலப் பிரதனே யாகத்
தெருள்சு யம்புவாய் வீற்றிருந் தருள்பெருஞ் சிறப்பா
லிருளி ரிக்குமச் சேகர வனம்புகு கென்று
மருடெ ரத்தகி வேந்தவம் மந்திர னாதன். (௩௫)

அவ்வ னத்தன வாதசா ரித்திய னாகித்
திவ்வி யத்தனி யமுதலிங் கத்தினிற் றிகழ்வுற்
றெவ்வு கத்துநீங் குருதிருந் தருளுமிவ் விறைக்குச்
செவ்வி முற்றநீ முன்புரி திருப்பணித் திறங்கேள். (௩௬)

வேறு.

வாய்புனித தருப்பணம்போற் கருப்பதல மருத்த மண்டபமா மண்டபஞ்சோ பனமண்ட பாதி, புரப்பகைவிற் பொருப்பெனவிண் பாப்புயர்பற் பலகோ புரவகையா வரணவகை பொன்னெயில்கண் முன்று, நாப்புகனூல் பற்பலதேர் சிற்பர்முடி வணக்கந் தருமயனு னிருபிதஞ்செய் வித்தியனோ யசின, காப்பவனத் தமாமுத முலலிங்கத் தட்ட கனந்தருபந் தனம்புரிதி காசனூ றாக் விதியால். (௩௭)

கணநாதர் குறப்பிடிதன் மணநாதர் கபால காநாதர் பாநாதன் கடைகாவ னாதர், தணவாத தூசம்பீடஞ் சௌபாதி சண்டீ சாந்தபரி வாரசுரர் தமை நிருமித் தாங்காங், கணவாரின் முவரிப்பத் தாவனஞ்செய் தரிபூ ரையை மத வெள்ளியமு னாயனிவ ரவ்வூர், மணவாரின் றனவாதம் புரப்பதிநீஇ யிமய மலையருணின் மலைபுலக மலையறவீன் றருள்வாள். (௩௮)

உம்மையினு மிம்மையினு மம்மையினு மெய்ம்மை யுண்மையுற வன்மையுற வொண்மையுறத் திண்மை, செம்மைசிவத் தன்மையெனு நன்மையருள் வின்மைச் சிவைகெவுரி பவைகுமரி பெரியநா யகியெம், மம்மைதிரு வுரு விதியி னிருமிதஞ்செய் தவட்கெ மையனமர் றுய்யசின காவிரிபோற் செய்ய கொம்மைதிகழ் கருப்பதல விமாருதி பவைங் குமைவிகே தனமெழுப்பிப் பதிட்டைமுறை குயிற்றி. (ரு.கூ)

பாவுசிவா கமநெறியிற் சிவத்துவிச விசிட்ட பாவனையைக் கொண்டேமுற் பகர்பதிட்டை யாதி, புரிபுசுப தினத்துலகு புகழுமகா சாந்தி புனிதவினை யனுஞ்ஞைமுதற் கும்பாபி டேகம், வரைகிரியை மந்திரம்பா வனாதிவி யாதி மறந்துமொரு குறைமருவா வகைவயங்கப் புரிவித், தாவிலைறநீ யும்ம னைய மனுவிறைவற் பூசித் தந்தனருண் முதலாய வனைத்துமியற் றுதியால்.

அனந்தரமக் கனந்தமமா கந்தாற்குப் பன்னீ ராயிரவிட் கம்பொருவொவ் வொருவருடந் தோறு, மினந்தரவந் திடத்தகுபல் வகையவிளை நிலங்க ளிலங்குமா வணத்துடனீந் திதன்மேலு முவகை, மனந்தாமா மணிமணிகள் சுவணாதி தாதி மலிதருபா சனவகைமற் றுள்ளவெலாம் வயக்கிக், கனந்தா நித் தியமுதன்மூன் றுஞற்றுசிவத் துவிசர் கனிதரநெஞ் சினிதளவிக் கனகாதி மனைகள். (சாக)

வளனிறைபல் விளைநிலங்கண் மற்றவெலாஞ் சாசு வதாநுபவ சாதனத்தான் மறுத்திடினு மருத்தி, கொளவினிது புகன்றுதவி யாங்கவரெஞ் ஞான்றுங் குலவியவாழ் தரப்பதிட்டைகுயிற்றியொருவாதே, பளகொழிபுரியுமவணமர்ந்த னையான்மார்த்தமார்த்தமர கதவமுதசிவலிங்க மூர்த்தி, களைதீதமு மனவி லுபகரணவகையெல்லாங்கவினியபூசனைகள்சிவாகமவிதியாற்புரிதி. (சாஉ.)

இவ்வியல்பிற் பூசனைநீ புரியமுத லிங்கத் தின்னினிமா தவப்பெருஞ்சீ திருடிகணீர்க் கிறைமுற், றிவ்வியபூ சனையாற்றி யிட்டமெலாம் பெறுவர் சென்றினிகா மிரவிகுலோற் பவராம நாமத், தவ்விறையாய்த் தெவ்விறந்தெய் மெய்வலிபெற் றுய்வா னவ்வமுத லிங்கசிவார்ச் சனைபுரிந்தின் படைவே மெவ்வமிலொன் பதுகோளு மெவ்வுலகும் பூசித் தின்பமுறு மாம்பெறுவ ரென்புகல்வதினிநாம். (சா௩.)

ஆதலினற் பணிராச குணிசிகா மணிகேளத்தகுமா வனத்தமுத லிங்கேச சரணங், காதலினு முறைத்தவிதி கருத்துறவெண் ணீறு கண்மணிமுற் சிவசின்ன காத்திரனு யார்த்தி, * யோதலினு வரைந்தருளு மனுவாகம ராகமுத் தமோத் தமசீவ ரத்தினமாய் வேதத், தீதலினர் வம்பெருமைந் தெழுத்தை முறை யோதி யினிதுதினந் தினம்பூசித் தின்பினமர்ந் திருத்தி. (சாச)

* ஓது அல் இன்னுவெனப் பிரிக்க.

இத்தருதி யோபெரி சுத்தசன்மார்க் கந்நி னியைந்துமம சதலிங்க வான்மார்த்த மெனுமவ், வுத்தமபூ சனையும்வழா தூருற்றிவரு குதியே னுலவாத வினையொப்பு மலபாக மேலுஞ், சத்திநிபா தத்துயர்கு தாத்துவிதா னந்தசாந்தபர சிவமாவை பாந்தள்குல வேந்த, நூத்தியமன் றிறுவாய்மை யெனமாத வாசான் சூதவனத் துய்த்தனன்கா கோதரேந் திரனை. (௬௫)

வேறு.

என்ன வோதிய நந்தி நாதனை யெண்ணி லாமுறை வந்தி யாவய
னுன்னுகான்முனை பின்ன னந்தன வொண்மை மாவனம்வந்து ளானவி
னன்னர் கேள்வியி னுங்கு மாதப நண்ணி னுனெதிர்நந்திநாயகன்,சொன்ன
வாறுவி ளம்பு வான்விழை தொன்மை மாதவர் முன்பு சூதனே. (௬௬)

அமரர் வானமு தன்று சீவர்க ளமிர்த மாய்முழு வின்ப வாழ்வினி
லமர மேவமு தென்று மாதவ ரளியி னீடிய விந்த மான்மிய
மமர வோதின னொன்று கேள்விய ரகில போகமு முண்டு மாமலை
மமர ஞானமெய் கண்ட போதர்பி னழிவில் வீடுற வொன்றி வாழ்வரே. (௬௭)

ஆதிசேடன் சிவலிங்கம் பெற்ற சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௧௭௧.

---

# ஆதிசேடன் சூதவனஞ்சென்ற சருக்கம்.

மதியி லங்கு வேணிமுக்க ணிமலை யங்கி ருல் கட்க மருவு செங்கைநீன்மி டற்றன் முதுவானவர், ஆதிவா ழுங்க நாதன் முற்செ லருள்பு ரிந்துகாதன் முற்று ஆணைசெய் நந்தி தேச னற்பி னெதிர்கோன்மை, கதலி லிங்கமீது பெற்ற கதைபு கன்று மாறு ரைத்த கவினி லங்கு சேக ரத்தன் மலர்கானனை, மைதவி ழைந்து நேயரிக்க மனனின் முந்து போய டுத்த வருமையன்பி னேறு திற்ப மென வோது மால். (௧)

வேறு.

வினவுதி சனற்கு மாா வித்தக முனிவ ரேறே
வனசைகோன் புகன்ற வெல்லா மகிழ்மிக வினவு சேடன்
* பனியுரு தவனி மாந்தர் பதஞ்சலி யுருவந் தாங்கி
நனிமகிழ்ந் தரிபொற் பாத நளினம்பன் முறையி றைஞ்சி. (௨)

* பனி-நடுக்கம்.

விடைபெறீஇச் சென்று வேத வித்தகர் சிவாக மாதி
தடையறத் துணிந்து நான்குஞ் சமைந்தபோ தகர்முன் னேறாந்
னடைதரு மயனுள் ளிட்டோர் நவிலுமற் றுள்ள வெல்லாம்
புடைவர விலகட் கெட்டாப் புனிதவன் மணிக்கு லாலன். (௩)

வகைபல வளக்க வொண்ணு மாகிதிப் பொருப்பு மற்று
மிகையெனக் கைக்கொண் டச்சு வேதமா புரத்தி னின்று
வகைமிகப் புறப்பட் டோங்கல் வகையெலாம் பணிபு மோங்கற்
சிகைகிளா திளைடல் கோடித் திருக்கையி லாயம் புக்கான். (௪)

கண்டமர் மொழியோர் பால கண்டனை யெண்டோள் கொண்ட
கண்டனிப் பால நீல கண்டனை முண்டத் திற்று
கண்டசீ கண்ட நாம * கண்டனை மண்டு தொண்டர்
கண்டரு மங்க ளனைக் † கண்டனை கழலி றைஞ்சி. (௫)

அருள்வலி யெண்ணி யெண்ணி யாங்குற வேண்டு கோடற்
பொருண்மலி துதிபு கன்று போந்தலி முத்தஞ் சார்ந்து
தெருள்பொலி கங்கை தோய்ந்து சிவந்திகழ் விசுவ நாதன்
மருணலி யுகள பாத வாரிசந் தொழுது வாழ்ந்தான். (௬)

ஆங்குநின் றரிதி னீங்கி யருட்பருப் பதங்கி ராதர்
தேங்கமலாம்ப கங்கொ டிருப்பதி பொருப்பி னின்னை
கோங்குவண் டினில்வ தெத்த குளிர்பதி யிருவர் நாப்ப
ணோங்கன லோங்க றுாய வொண்மணி முத்தாற் றேறி. (௭)

புலிபதஞ் சலியா னித்தம் பொலிபதஞ் சலியா நித்தங்
கலிசிலம் பொலியா நிற்பக் கனியருள் வலியா நிற்ப
மலிசிவ காமி யுள்ளம் வாம்பிலா னந்த வெள்ளம்
பொலிதர வமன்ற மன்றம் புரிந்தருள் கின்ற மன்றம். (௮)

ஆழுத்த மாங்கத் தேந்தி யருக்கனைத் தலத்தின் பேற்றுற்
கோமுத்தி வாய்ப்ப வந்நாட் கொடுத்தரு டிருத்த மெய்மா
னேமித்தின் படைக்கி டந்த நேத்திரார்ப் பணபு ரஞ்சேர்க்
காமித்த வாஞ்சை யன்பர் கைக்கொள்சீ வாஞ்சி யந்தான். (௯)

அரியுரத் துச்சு வாச நிச்சுவா சத்தி னுங்கே
புரிதரு மசபா நித்தம் புரிமுகு குந்த வேத்துட்
பரிவெனும் வலையி னீர்க்கப் படூஉப்படி மூலா தாரத்
துரிமையி னொருவா தும்ப ருத்தம னுருத்தி வாரூர். (௧௦)

* கண்டன் - தலைவன் † கண்டு அல்லை கழல் எனப் பிரிக்க.

ஆதிபஃ றலங்க டோறு மடுத்தடுத் தாங்காங் கன்பி
னேறுகேத் திரபிண் டாதி யுருத்திமா மணிமி டற்று
மாதுபா தியனை வாழ்த்தி வழிக்கொளீஇ மறைக ளொன்று
நீதியி னருச்சித் தேத்தி நிலவுமா ரணியம் புக்கு. (கக)

வேதநா யகனைப் போற்றி விளம்புமவ் வனத்தின் மேல்பா
லோதிரு யோச னைத்தா யொப்பிலாத் தனது முன்னை
மாதவாங் குரமே சாகை வகைவிரித் துயர்ந்து விண்ணின்
மீதெழுந் தனைய சூத விபினமே நோக்கிச் செல்வான். (கஉ)

செல்லுழி யகிகு லேசன் றிருக்குநேர் திருக்கி லாத
நல்வினை சுபமி கித்த நற்சகு னங்கள் பல்வே
றொல்லையங் குறுவ கண்டா னுலப்பிலா வுவகை வெள்ளத்
தெல்லைகாண் கில்லான் றற்கு ழெனையபோ டேகு கின்றான். (கங)

நவங்*கடத் துவன்செல் சூத நறுங்கடற் றினிலு மேதப்
பவங்கடத் துயுநா வாயென் பாக்கியன் மார்க்கண் டாதி
தவங்கடத் துவமோர்ந் தாற்று சற்சனர் முன்ன ராங்கே
சிவங்கடத் துருகி மித்தத் திறம்பல திகழ்ந்த மன்னோ. (கச)

தனித்தனி நிமித்தங் கண்ட தருமகிழ் வதுந் தம்மு
ளினித்தெழு மின்பந் தேங்க விருகணீ ரருவி தாங்கப்
பனித்துடல் பூரித் தோங்கப் பாவுரோ மஞ்சி லிர்த்த
வனித்தவ மார்க்கண் டாசா னுடசம்வந் தொருங்கு சூழ்ந்தார். (கரு)

வேறு.

அன்ன மாதவர் யாவரு மெம்முட லகத்திலும் புறத்து
முன்னு நன்னிமித் தம்பல வேககா லத்திலிம் முளரித்
துன்னு நம்மவ ரொவ்வொரு வருக்குமிக் கின்புறத் தோன்றற்
கென்னை யோசிப மென்னையோ சனைபுரிந் திருந்திடு மெல்லே. (கசு)

வான துந்துபி யோவென முழங்குகெம் பீரவான் வாணி
யான தங்கெழுந் தரியருள் சேடனுஞ் சேடன்மெய் யன்பாற்
கான மின்னதில் வாழுநம் புண்ணிய கௌரவ கனத்தான்
மேனி மிர்க்கெழு சூதமூ லத்தொளி மிளிர்சுயம் பிலிங்கம். (கஎ)

அமிர்த ரூபமாய் மல்லிமுன் வல்லிகள் செறிந்துசூழ்ந் தடர்பு
நிமிர்த ருங்கிரு காந்தாத் திலங்குமந் நிமலமா விலிங்கத்
துமைம ணாளனைத் திருமணா ளன்றனி யருள்பெறீஇ யுவந்திங்
கமைய நேர்தொழற் காதர மீதரப் போதரு மகிகோன். (கஅ)

* கடம்-வழி.

அன்ன சேடனிங் குறுதனு மருந்தவப் பயனென வறிமி
னின்ன காரண மேகிமித் தம்பல நிகழ்ந்தநும் மெதிரே
யென்ன வோதிய வுடலிலாத் திடமொழி யமுதமுண் டிலங்கு
நன்னர் மாதவர் ஷெறினி யாதுகொ லின்பென நயந்தார். (கக)

அனை யர் சூழன்முன் னனந்தா மனந்தனு மனந்தநல் லினந்தன்
றனைய ளாவிய வெதிர்வா மூதிர்வா முனிவரர் தாஞ்சென்
றினைய தென்பதி லின்பமெ யன்புற முன்புரீஇ யிம்பர்
வினையை யோவிய மேவிய காவிய நாவியல் வேந்த. (உ௦)

இந்த மாவனத் தெல்லையில் வரத்தினேனினி துவீற் றிருக்கு
மந்தி ரேசன தருட்பெருந் தரத்தினே மருதமர்ந் நீண்டு
வந்தி யாம்புரி யருந்தவ வுரத்தினே மற்றெனே வமையு
மெந்த வாய்மையு மின்னநின் வரத்துயர் விசைப்பதை யெவனும். (உக)

என்ன வின்னன வின்னுரை முன்னுரைத் தெதிர்கழீஇ நமந்தா
ரன்னர் யாரையு முன்னமந் தடிக்கடி யருந்தவப் பெரியீர்
பொன்னை நாதனைப் பல்லுகம் வெரிந்மிசைப் பொறுத்தபுண் ணியமோ
பின்ன ராங்கவ னருள்பொழி கருவொழி குருமொழிப் பேறே. (உஉ)

எத்த லங்களும் பத்தியான் மிக்கிறைஞ் சத்தகு மிருஞ்சீ
ரித்த லத்தலை புகப்பெறீஇ யெளிதுட னித்தவப் பேற்றால்
வித்த கத்திரு * மும்மையா லருளுல காட்சி செய் விமல
வுத்த மத்தவ குலதரி சனத்தனிப் பேறுபெற் றுவந்தேன். (உஙு)

இனிப்பெ றற்கரும் பேறுமற் றுண்டுகொ லெனக்கென விசைத்தாங்
கினிப்பு றக்கலந் தழைத்துறு குலந்தழைத் தெழுமுனி வார்தாந்
தனிப்ப ரன்கரு ணைகான் மிருகண்டு தனையனுச் சிரமந்
தனிற்பு கப்புருந் தருந்தவ விருத்திக டமில்லினு யமர்கால். (உச)

நான மாதிகட் கெவருமிக் கன்புற நயப்பது நலமிக்
கான மார்க்கண்ட தீர்த்தமென் றவர்சொல வினவியவ் வசீசன்
ஞான மாதவ ரோடுநீஇ யங்குமா சங்கற்ப நவின்றவ்
வான நீர்குடைந் தவட்புரி நியதிகண் மாபினுவ் வயக்கி. (உரு)

வேறு.

கோதான முதலாய குலதானம் பலதானங் குளிர்வ தான
மேதாந முனிவோர்கள் வெறுக்கையுறு வகைவேண்டி வெறுக்கையோடு
மீதானத் தருவாதி விருதாநந் தானமெனு வென்க நல்கி
யாதானம் புரிந்தனல்வேட் டருந்தானந் தம்முனிவர்க் கார்வஞ் செய்தான்.

* மும்மை-விபூதி ருத்திராக்ஷம் சடை.

இவ்வாறு செவ்வாறுற் றியன்முனிவர் பயன்முனிவந் தேற்ப நல்கு
மவ்வாதி சேடன்மதித் தமுதாதி நாளளித்த வாசான் சொன்ன
மைவாழுங் களத்தமுத மயவிலிங்க தரிசனத்தின் வாஞ்சை கூர்ந்திங்
கெவ்வாயின் னமுதசுயம் பிலிங்கம்வீற் றிருந்தருளு மியம்பீ ரென்றான். ()

அகியரசு புகலுறுமவ் வாசைமொழி நேசமொழி வறவி ளைய
தருமுனிவ ரகநெகிழ்பு சாற்றுகின்றார் முன்காகோ தரகு லேச
முகமுருவங் காண்மோவ முதலிங்க தரிசனமிம் முளரி யிற்பல்
லுகமுறினு மெமக்கெவனு முற்றெமது கண்ணுக வுணர்த்திலாயேல். (உஅ)

இங்குநினைக் கொண்டினிய விலிங்கதரி சனப்பெரும்பே றெய்த லாலே
எங்களிரு கண்ணீமெய் யேமுகம னன்றுகரி யினிவே றென்னே
தங்கியும்பன் னெடுநாளித் தலைச்சிறப்பு நினதருமைத் தவாங்கு ரம்மே
யொங்கியெழுந் தனவிலிங்கத் துயர்வேது முணர்ந்திடும்பே றுற்றிலேமால்.

என்றனைய முனிவருவந் தினிதிசைப்ப வவரோடு மெனைய ரோடு, மன்றி
னிய சூதவனத் தமுதமய சுயம்பிலிங்க வருமருந்தை, நன்றுதரிசி யெங்
கெங்கு நடந்தறுங்சான் மார்க்கண்ட நளினி தீரத், தென்றுதய திசையணித்
தா யிசைப்பரும்பல் வளஞ் செறிந்தோ ரிடந்தோன்றிற்றால். (௩0)

ஆங்கதுகண் டுறும்பொழுதா ரமுதினினித் துளங்கனிவித் தருள்வந்தீர்த்தாங்
கோங்கியெழு மின்னிசைகேட் டெவ்விடமோ வெவ்விடமுண் டும்ப ராவி
தாங்குகளத் தமலனமர் தானமவ னமுதவுருத் தவமு தென்றுந்
தேங்கமுதம் பொழிதிறமே*சீரிதுவென் றுளங்களிப்பச் செல்லா நின்றான்.

வரவரவவ் வொலியெழுத்தின் வடிவாக மாதேவா மணிகண் டாசங்
கரவாவு மாகாந்தா கைலாசா சைலேசா கங்கை நேசா
பரவாத பூதேசா பாசுபதே சாசுவதா பரமே சாபூ
தபவாபூ டணசாம்ப சதாசிவமந் திரநாதா தாணு சம்போ. (௩௨)

சந்திரசே கரவாம தாண்டவமுற் றுண்டவபஞ் சாக்க ரேசா
சந்திரகாத் திரவிலோ சனத்திரைய வினத்துயர்மா சரும வேகா
சந்திரளம் புயத்ரகோ சராசனபல் சுராதிபனே சருவே சாநெஞ்
சந்திரமா மன்பருளத் தனிக்கோவி றனக்கோவில் சாந்த வாழ்வே. (௩௩.)

என்பனவா தியநாமத் திலங்கொலியா வெழீஇச்சுகமா யினித்த லான்மெ
யன்புநிறை சுகவொலியீ தாமெனவுட் காமுறவாங் கணுகுங்காலவ் [கன்
வின்பவொலி பன்னிறத்த விருஞ்சிறைப்பைஞ் சுகவொலியா யினிது மல்
முன்புதெரீஇ யிங்கிமித்த முன்னியது முடிக்குமெனா †முடிந்து கொண்டான்.

* சீர் = ஒலி.
† முடிதல் = எண்ணென்றனையின் முடிதல்.

அனந்தரமர் தவர்சூழ வாங்கணுகி மாங்குயில்க ளழைக்குமோசை
கனந்தருசா ரிகைசுவா கதங்கிலவென் பனவாதி கழறு மோசை
சினைந்தருகி மயினடமுன் னிலைநினைப்பித் துலமெழுகி வெகிழ்ச்சி காட்ட
வினந்தருவண் டிசையாதி யேத்துறுமங் கடளுங்க மெனமுன் கண்டான். ( )

சாதிமா லதிமயிலை தளவுமுத லளவில்கொடி தழைந்து மல்கி
மீதுபடர்ந் தலர்துறும்பல் விருக்கமுள முருக்கமுத விமல லிங்க
பாதசரி சனநிமித்தம் பகிரண்ட நிரைகளினும் பயிலா நின்ற
வாதிதிருக் கயிலைநிரை யடைந்தவண்சூழ்ந் தனவெனுமா றமையக் கண்டான்.

சேகரபூ ருக்கிகரஞ் செறிதளிரின் றிருவர்முனந் தேட நீடுஞ், சேகரவெற்
பொன்றலபஃ றிரள்கொலென நின்றொளிரச் சேய்மைகண்டான்
சேகரவா திவர்பரமன் றிருவருளிற் பெருகருவித் தெளிதேங் கண்டான்
சேகரண மிறக்குனித்த செம்மலைக ளெனவிதழிச் செறிவு கண்டான். (௯௭)

இத்தலத்தோ ரணுவளவா கினுமீகை மலையளவா மிரும்ப யன்க
டத்தமகை யுறனிதரி சனமெனவே யிலாங்கலிக டமக்குச் சின்னீர்
துய்த்திடமுன் னல்கியவச் சுநாசியமர் சுதன்மைமுனந் துலங்கப் போந்து
பத்தியினல் விளநீர்கள் பற்பலதந் தலங்கரிக்கும் பரிசு கண்டான். (௯௮)

உத்தமர்நூற்கவிசுலபத்துணர்வரிதாய்வெற்றென்றுஞானதாகி, மெய்த்தரு
சொற்றொடருடைத்தாய்விழுப்பொருளாழ்ந்தினிப்புறவுள்ளிளங்கல்போற்க
வித்தமிதற்கெதிர்மறையாவிளைநலவல்பலத்தோடுமெதிர்வகண்டான்,மொய்
த்தெழுமுக்கனித்தொகைகண்மூவகைநூற்றிறத்திலகுமுறைமைகண்டான்

சம்பீர மிலிகுசமென் றன்பெயர்க்கேற் றிடக்கன்னித் தைய லார்தஞ்
சம்பீர மிலிகுசமாத் தனிகாட்டுங் கனிகாட்டித்தான்மோ கிக்குஞ்
சம்பீர நிரைகளைச்சா மீகரப்பஃ றிரளைகளைத் தங்கைநீட்டிச்
சம்பீர வடியருக்கீ தாவெதிர்பார்த் துறுங்கொடைஞர் தாமாக்கண்டான். (௱)

நீடுபல பொருள்களெலா நிறைந்திருந்துந் தாழ்ந்தடங்கு நிலைமை வாய்ந்து
பீடுபெறுமணிதொகைபாய்ப்பெருமுடிப்பாயருள்கொடைஞர் பெற்றிகாட்
டும், தாடிமமும் பெயராலுந் தானிறிந்து முளபீசந் தனைமுன் காட்டி
யீடிலிடம் பளைப்போன்றங் கிலங்குறுமுந் திரிவிருக்கத்தியல்புங்கண்டான்.

இவ்வகையின் மற்றுமவ ணிலங்குபல நலங்களெலா மிதயானந்தச்
செவ்விமிகக் கண்டுகண்டு செலுஞ்சேட னெதிரவண்விசேடமேன்மைத்
திவ்வியதேத் துயர்விருக்க சேகரமாய்த் தோன்றிடவோர் சேகரந்தா
னவ்வியன்மா வணித்திதழி யருண்மலிகூ விளம்பாரி சாத மாதி. (௱௨)

சூழுபுவா னிவந்துறவத் தருமங்கண் மீப்படர்ந்து துவன்றி யெங்கும்
வாழியன்மா லதியாதி வல்லிகள்பே ரில்லிதெனு மாண்பிற் சூழ
வேழிசைய பிரமரங்க ளிருஞ்சாம கீதமினி திசைப்ப மல்குங்
கேழிசைய வொருசூழல் கெழுமுதல்கண் டுழுவலன்பின் கிழமைகூர்ந்தான்.

அளிகிளர வாங்குறுங்கா லச்சூழ லுட்சார்ந்தங் கரிது நீங்கி
யொளிகிளரு மடிமடைவிண் டுறுகாலின் மறுகாலி னுயர்பால் வெள்ளங்
களிகிளரப் பிரவகிப்பக் கற்றினங்க ளுடன்பல்வலங் * கண்டு தாழ்ந்து
தளிகிளரப் புறம்போந்து தன்னெதிரே பன்னிரைகள் சார்வ கண்டான்.

பாற்கடலின் மேற்படப்பெய் பசுக்கடம வசுக்களுடன் பரவி முன்செல்
காற்கடவு ளருள்வெள்ளங் கைம்மேல்வந் தும்மேன்மைக்கனம்பெற்றாங்கு
நூற்கடனீத் திலகனந்த னுவலரிய சிவானந்தா னுபவி லாச
மேற்கடவச் சென்றாங்கு விதப்பருமற் புதப்பரம விளைவு கண்டான். (௬௫)

தோற்றுறுமச் சூழலிற்சார்த் தாலகுலம் வாலதியாற் சோத னித்தொண்
டாற்றமுய விரலைகுடா வடிவினைசூழ்ந் திறைஞ்சுபுயோ காதிதொண்டு
போற்றியதா மும்பணிந்து பரியோகத் தினிதமரப் புழைக்கை நீர்தா
யேற்றபணி கயஞ்செயக்கண் டரவம்பாங் குபசாந்தத் திறைஞ்சிச் சூழ. (௬௬)

இன்னனபல் விலங்கினமு மிருங்ககமுற் குலங்களுமல் லெல்லை யாற்று
முன்னருமற் புதச்செயல்கண் டலவாத வானந்த வுததி மூழ்கி
யென்னையுடை யானமுத லிலிங்கேச னெழுந்தருளி யினிது வாழுந்
தன்னிகர்மா தலமிதுவோ தகும்பணிசெ யிவையெம்மா தவர்க ளேயோ. (௬௭)

என்றுவினாந் தன்புறமு னேகியெதி ரடிக்கடிவீழ்ந் திறைஞ்சி யெம்மான்
முன்றிலரும் பணிநாளு முயல்கின்றீர் திருத்தொண்டீர் முன்னு ளென்னு
வின்றுறுமத் தரிசனப்பேற் றினுக்கியன்மா தவமென்னே வெளிய னேனைக்
கொன்றைமுடி யானேன்று கோடலுறுஞ் சங்கமத்தின் குணமே மென்னு.

அன்புரையற் பல்புகன்றாங் கருளீர்ப்ப வுட்புகுந்தா னமுத மான்பே
ரின்பமய சுயம்பிலிங்க வின்னருண்மந் திராகத னெழிற்கோ லந்தன்
முன்பிலகு முறைகண்டான் முதமகோ ததிமூழ்கி முன்ன மாதி
தன்பழைய கரணமெலாந் தணந்தொழிய மணந்தசிவந் தானே யானான். ()

சிவகுண சேட்டிதமோர் சிறிதுமிலான் றிருமுனந்தான் செய்த†லோதல்
யாவதுமோர் வரிதாய்ப்பற் றிலாதவொரு தம்பமென வெதிரிற் றாழ்ந்தா
னேவரிய சிவானந்த வுததியினுங் கரையிவரா தொன்றி வாழ்ந்தான்
றேவர்பிரா னருளெப்பத் திரையூடு கரையேறித் திருமு னின்றான். ()

---

* கண்டு-செய்து. வசு-பசுக்கன்று.

† ஓதல்-நீங்கல்.

அருண்மேனி யமுதவொளி யழகெறிப்ப வணித்த தாகண் டன்று விந்தத்
திருமேனி திகழ்தரவிச் செகமுழுதும் புகழ்தரநீ திலிய லிங்க
வுருவாகி வுதித்தெழுந்திங் கொருவாம னுலகமெலா முலவா வின்பப்
பெருவாழ்வு பெறவமர்ந்த பேரருளிப் பேதையுணர் பெற்றித் தேயோ.

உரையாலு முளத்தாலு முணர்வாலு மொருநான்கி னுச்சி யாலும் [தே
வரையாநின் னருட்பெருக்கெவ் வகையாலு மனுத்துணையும் வழுத்தொணு
புரையோடு தரையோடு புன்மொழிலே துன்றியவிப்புழுத்தநாயேன்,கரையா
வன் மனத்தெளியேன் கருதாவதோ விதிர்விதிர்க்குங் கடையேனுள்ளம்.()

அகிலேசா சுயம்புலிங்க வமுதேசா முழுதருளம் பாரேசாவிவ்
வகிலேசா யினுமளியு முதெனு தெளியுமளித் தருள்சு ரேசா
முகிலேசா முடித்தூசா மூதேசா பூதேசா முன்னு ளன்னை
நகிலேசாத் தியவடுக்கொ ணடநேசா படனேசா நானுால்வாசா. (௫௩.)

என்றினைய துதிகள்பல வெடுத்திசைக்குந் தொடுத்திசைக்கு மிடையே யின்
பந், தன்றிருக ணீர்மாரி சொரிந்திடநாத் தழுதழுப்பச் சொற்கள் சோரு
முன்றிலடிக் கடியிறைஞ்சு மொழிகுழறும் பினுந்துதிக்கு மூகமாகு
மன்றகிவேந் தற்றுளவா ராமையெவ ரளக்குநர்முற் றரிதேயம்மா. (௫௪)

இவன்செயலிங் கிதுவாக வினிதுடன்சா ரிருடிகுழாமெல்லாங் கண்டாங்
குவந்தனர்பன் முறை யிறைஞ்சி யுருகினரிவ் வமுதேச னுருவங் காணுஞ்
சிவந்தரவந் தருளியவிச் சேடனே விசேடகுல தெய்வ மென்பார்
பவந்தெறுநங் குருவென்பார் பாகதிக்கு வித்தென்பார் பரமனென்பார். ()

பன்னளிங் கமர்ந்துளநாம் பரிந்துபுரி யருந்தவமெய்ப் பலனே யென்பா
ரன்னேவிப் பணியரசுக் காற்றுலுகைம் மாறெம்மா லாமோ வென்பார்
முன்னளிங் குளதெனிலிம் முளரிமுழு துலாவியவெம் முற்ப டாதோ
வின்னுகர்கோனன்பே யிவ்விலிங்க வுருவாகி யெழுந்த தென்பார். (௫௬)

அன்னேவென் புகன்றவா றமுதசுயம் பிலிங்கமிஃ தநாதி யோரு
முன்னுதற் கென்னதவ முற்றினமுற் படலெளிதோ முளரி வாழ்க்கை
மின்னுத குரவனருள் வியனுபதே சப்பேற்றின் மெய்ம்மை தேர்ந்த
வின்னேன்வந் திலனேலிவ் விலிங்கமதி தூரமக் கின்னு மென்பார். (௫௭)

இவ்வகைபற் பலபுகன்றுங் கின்புறுமெ யன்பினமு தேசபாத
திவ்வியச ரோருகம்பன் முறையிறைஞ்சிச் சிவானந்தந் திளைந்து வாழ்ந்தா
ரவ்விருடி குழாம்பணிவேந் தமுதலிங்க தரிசனம்பெற் றடுத்த வந்நாட்
டைவருபூ சங்குருவா ரம்பருவ மாயவதி சயத்தை யோர்ந்தான். (௫௮)

வேறு.

முன்னுந் தில்லை முளரியின் மாநடந்
தன்னை நாந்தரி சிப்பத் தருந்தின
மின்ன மாவனத் தீசனைக் காட்டிற்று
லென்னை யோவிதற் கீயுங்கைம் மாறியாம். (ருகூ)

யாது நல்கினு மின்னதற் கோரணு
வாத லொப்பரி தாதலி னித்தரு
மூதி னத்திம் முளரியி லீசனைப்
பாத சேவை பரிந்து புரிந்தவர். (சுo)

ஆத ரத்தபி டேக மருச்சனை
மாத ருற்சவ மாதி வயக்கினர்
காதன் முற்றுமுன் பெற்றருள் காட்டிமா
மோத வுத்தம மோக்கமு மேற்கொள்வார். (சுக)

என்ன மாண்பல வாசக மீதுரைத்
தன்ன வாரமு தேசனை யாசையிற்
பன்னு மாமலர் பைங்கனி யாதிகொண்
டுன்னு பூசை முறையி னுஞற்றினன். (சுஉ)

என்று நந்தி யியம்ப வெதிர்தொழா
நின்ற வம்புய னும்பல்பி னேயகிக்
கொன்றி மேற்பன்ன கேச னுஞற்றிய
நன்றி யெந்தை நவின்றருள் கென்றனன். (சுங)

சனற்கு மார னுவகை தழைப்பமேன்
மனக்கு லாவுநந் தீசன் வழங்கியாங்
கினக்கு ழாங்கொ ளிருடிகள் கேண்மினி
யெனக்கு ணாகர சூத னியம்புமால். (சுச)

வேறு.

இளைய நாதையி சைத்துளா ரினிது கேள்விம தித்துளார்
வினைக ளியாவும்வி தித்துமேல் விளைபல் போகநு கர்ச்சியார்
புனக கோவின்மு டிக்கணீள் படியி னுயுண்மி குத்துவாழ்ந்
தனக பாதரி ழற்கணே யமல யோகினி லைப்பரே. (சுரு)

சூதவனஞ்சென்ற சருக்கம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-எஙசு.

# ஆதிசேடன் றிருப்பணிச் சருக்கம்.

அன்பேறு சேடன மாவன மன்றேரு காதைதயி தோதினம்
பின்பாதி சேதிம மாதிய பின்றுத நீள்பணி பீடுயர்
கும்பாபி டேகமு ஞயசெய் கொன்பேசு வாமினி மேலென
நம்பாவ நாசசு போதக நந்தீச ஞதர வோதுறும்.

வேறு.

தாதை மைந்தனென் றேது தபோகிதே
* போத னந்தன னந்தாம் போற்றுமா
நாத னெந்தை நயந்தமர் கோயில்செய்
காத லுந்து கருத்தனி தாற்றுமால்.

பாங்கி னின்ற சூாத பதியைநீ
யோங்கு சேதிம மோது முறைப்பெலாந்
தாங்கு வானவ ருருஞ் சமழ்ப்புற
வீங்கெ மீசற் கியற்றுகென் றேவினன்.

பின்னு மெந்தை பிரானடி யர்ச்சனை
யுன்னி யாற்றற் குழுவலன் புந்திய
வன்ன பூசைமா சாந்திகட் காம்பொரு
ளென்ன வுங்கொணர் மின்னென வேவினன்.

உழைய ராங்கவ் வுரைசிரங் கொண்டென்
றெழுமிவி லாவவ் வுபகா ணம்மெலாங்
குழுவின் மல்கக் கொணர்தரு முன்னவட்
செழிய புற்கொடி யாதிய சிந்தரோ.

பானு மாய்மருந் தாய தெனும்படி
கோல முற்றுஞ் சுராதிகொள் கோக்களன்
பால ருந்த வருச்சித் தருத்துபு
சானு மெய்ப்பயன் பற்பல சார்ந்தனன்.

பளிக்கு மேனிப் பானமு தேசனுட்
களிக்கு மப்பிர தேசங்கண் ஞேடிபோ
லொளிக்கு லாவிய வொப்பச் சமன்செயாத்
தெளிக்கும் போழ்தத் தினகான் றன்காம்.

---

* போதனந்தன்-சென்ற அனந்தன்.

சிறிது மெல்லெனத் தீண்டுறக் காண்டலு
மிறை யிலிங்க முடித்தணி ருகரம்
பொறைசெய் வெண்குடை பொற்ப நிழற்றும் வாழ்
வுறநி னைந்தர சேசன்மு னுற்றனன். (அ)

அதற்கு முன்ன ரமரர் தபதியங்
கிதற்கு நேரிலை யெந்தவண் டத்துமென்
பதற்கி ணங்கொரு பைம்பொன் மணிக்குல
விதத்தொ ளிச்செய் விமான நிறீஇயினன். (கூ)

யாமி யத்தொ ளிலங்குபொன் மேருவிப்
பூமி யுற்றது கொல்லெனும் பொற்பது
தோமி குத்தெழு திண்கயத் தெண்குல
நாமி கப்பொறை யாற்று நலத்தது. (க0)

அனந்தன் கூர்மன்முன் னுயவ ரண்மியாங்
கினந்தி கழ்ந்துற வேண்டி மிடந்தொறுங்
கனந்த ரப்பொலிந் தோது கவின்மிக
மனந்த ருக்கி வகுத்துள மாண்பது. (கக)

பானு வான்செல் பரிசுநேர் பார்த்துமப்
பானு வொன்றிவட் பற்பல் பசுங்கதிர்ப்
பானு நின்றொளிர் பான்மையி தென்னையென்
பானு மும்பொற் கலசம் பரிப்பது. (கஉ)

வானி ராசியு மல்லவிம் மண்ணுலா
மானு மல்லவக் கோபுரத் தானல
வேலை யாண்டைய வெண்ணப்பல் வேற்றின
மேனி லைத்தெழில் செய்ய மிளிர்வது. (கந)

ஏந்தி லிங்கத்தி னொன்றதி தாலமா
முந்தி லிங்க மெனவின் முடிநிறை
யிந்த ணிந்த தெனநித் திலத்தினத்
தந்து மொண்குடை சென்னி யொளிர்வது. (கச)

அன்ன தற்கிரு பான்முத் தவிர்மணி
யின்னி யற்றிரண் டேழையர் சாமர
முன்னர் வீசுபு நிற்றலம் மொய்திரை
மன்னு கங்கையி னாறென வாய்ந்தது. (கரு)

மாற்று யர்ந்தவட் டாபத மாமணி
யாற்றி கழ்ந்து சிவாகம யுத்தமாய்த்
தேற்றி யெங்குஞ் சிவனே பரமென
வீற்று வீற்றொளிர் விம்பங்கண் மேயது. (௧௬)

நித்தி லத்தொடை சூழ நிரைஇ நவ
ரத்தி னத்தினு நாற்புறஞ் சித்திர
பத்தி மிக்கெழச் செம்பது மத்தணி
மத்தி வைத்த விதானமுள் வாய்ப்பது. (௧௭)

புத்தி சற்றுமில் புன்மைய ரேனுத
ரத்த தாங்கொ னவிற்றரி தோர்ந்துண
ருத்த மப்புல வோர்க்கு முறுப்பொளஞ்
சுத்த யோகருட் டோன்றவ் விமானமே. (௧௮)

இனைய மான விமான மிலங்கமேற்
புனைக ருப்பக் கிரகம் பொலியுமவ்
வனைக னைம்முக னுதவி னுற்றிசை
யினிலுங் கண்ணடி யேநிரைத் தாலென. (௧௯)

நாற்பு றத்து நலந்திகழ் பித்திகை
யேற்பு றப்பளிங் காலுறுப் பியாவையு
மேற்ப டுத்தி வியன்மணிச் சாளரம்
யாப்பு றுத்தெழின் மல்க வியற்றினன். (௨௦)

வேறு.

இவ்வகையி னமுதசுயம் பிலிங்கசதா சிவார்ச்சனைக்கவ் விறைவ னைந்து
தெய்வமுகோற் பனமுனிக டிருக்குலத்தார் சிவசாதிச் செல்வ ராதி
சைவசிவ சமக்கார சர்வாதி காரவெனத் தணரே யல்லா
லவ்விடையுட் புகுதும்விதி யார்க்குமிலாக் கருவின்முடித் தமைத்த பின்னர்.

அரனரியம் புயன்மகவா னமிவர்நாற் சாதியவொன் றாணஞ்சொன்
மாபினில்லை சியவயன்றன் வத்திரோற் பவமுனிவர் மாபிலங்க
வருமறையோர் புகுமருத்த மண்டபஞ்சத் திரியமனர் வணிகர் சற்சூத்
திரர்புகுமா மண்டபமுன் றிகழாறு காற்பீடஞ் சேரச் செய்தான். (௨௨)

அடுக்குமா ளிகைநிரையின் னகடுபோழ்ந் தவனைதா னமைத்த வேணி
கடுக்குமா றெழீஇச்சூழ்ந்து கவினமுதற் பிராகாரங் கண்டான் மேன்மேற்
றொடுக்கும்வா னகருமிவட் டொன்றுறப்பல் லேணிவைத்த தோற்ற மென்ன
மடுக்குறுமைந்தாவரண மதில்களின்மேன் மேலுயர்கோபுரங்கள் வைத்தான்.

ஆவரண மைந்தினுமாங் காங்குபரி வாரகுல வமரர் வாழ
மாவரண வுறைபுள்பல மணிபொன்னாற் புரீஇப்பளிங்கு மணிச்சி லாதி
யாவிரிபன் னிலங்களுமொப் பமைத்தனைய குட்டிமஞ்சந் தரும்பொ னாற்றிச்
சேவினமுஞ் சிவகணமுந் திருமதில்க டொறுந்திகழச் செறிவித் தானால். ()

முரணிடப நந்தியபி முகவாயி லெறுமருவ முதிய செம்பொ
னரதநமா தியதிகழ்மண் டபங்கள்புரீஇ முதல்வாயி லங்கந் தீசா
பரதலமேற் பொன்னாலம் பரதலமே னிர்திருசத்தம் பங்கி நீஇமா
திராபிருநான் கிலுமனைய சேவேறு கொடித்தம்பந் திறந்தா பித்தான். (உ௫)

அனகன்விழாக் கொண்டருளு மணிவசந்த மண்டபஞ்சி வாக மாதி
புனிததமிழ் வேதசிவ புராணாதி திருமுறையைப் பூசித்தென் றுங்
கனிதருமன் பருண்முனுரீஇக் களங்கறமுற் றுணர்ஞானக் கல்வி கோர்ப்
வனமுய்சிவப் பிரசங்கம் வயங்குறச்செய் வித்தியா மண்டபந்தான். (உ௬)

ஆயிரவிற் கானிறுவு மணிமணிமண் டபஞ்சதகம் பாதி மேய
மாயிருமண் டபம்யாக மண்டபமா மறைநீத மண்ட பாதி
தூயபல வங்கமெல்லாந் துறைதந்திலங்க வமுதலிங்க சுயம்பு நாதற்
கேயமகா சிவலோக மிதுவேயென் றெடுத்தோத வியற்றி னானால். (உ௭)

இம்முறையே மும்மையினு மெம்மையரு மெய்ம்மையுல கெல்லா மீன்ற
வம்மையமர் செம்பொன்மணி யாலயமு மாலயன்முன் னமரா ராதி
மும்மையுல கமும் வியப்ப முதண்ட பகிரண்ட முழுதும் வாழ்த்தச்
செம்மையபல் லங்கமெலாஞ் சிறந்தோங்க திறந்தோங்கச் செய்து மேலும். ()

தூய்மையதாய்த் திண்ணியதாய்த் தொழிற்கினிதா யிழுக்கிலதாய்த் தொன்
னூல்சொல்லும், வாய்மையதா யொண்மையதாய் வயங்கெழின்மாண் சிலையி
னியமாமுகத்தோன், றூய்மையினார்பரன்முவர்கொளாதிசண்டாந்தபரிவாரச்,
சேய்மையாமருமுருவந்திருவுருவோவசரியப்பச்செய்துமேலும். (உ௯)

அண்ணறனக் காவிடையா வருட்டத்தி பீடமுஞ்செய் தாங்குக் கண்டோர்
கண்ணடியோ மரகதமோ கருஞ்சிலையோ வன்றெனவே கழறி முற்று
மெண்ணரிதாயிறுவன்யுமீதலென்றேமறைகளிலறையையோதும், வண்ண
மெனத்துணிந்துணாக்கும்வகையவர்க்குமரிதாகுமாண்பிற்றந்தான். (௩0)

திருவிழாக் கொண்டருள்சோ மாக்கந்தர் மதிமௌலி சிற்ச பேசர்
கருவிழா தெனமையருளுங் கணேசர்வான் பிடிகுறமின் களிக்கு நேசர்
மருவிழா விதழிமுடி வாங்கினரத் திரதேவர் முதலோர் வண்ண
குருவி*ழா விருதாம் பூநதத்தா னிருமித்தாங் கொளிர்வித் தானால். (௩௧)

* ளகரம் - எதுகைநோக்கி ழகரமாயிற்று ; உழ்கியென்றாயதுபோல.

இருமணியி னிருமிதஞ்செ யிருவகையிம் மூர்த்திகளுக் கெல்லாஞ்செம்பொ
னருமணியின் வருமணிக ளளப்பிலசெய் தமுதேசர்க் கைந்து சென்னிக்
குருமணிய சுடிகைதிகழ் கோளராப் படங்கவிக்குங் கோள காதி
திருமணிய வுபவீதத் திருவணிமு னெல்லாமுந் திருந்தச் செய்தான். (௯௳)

இப்பரிசெல் லாம்புரிந்தாங் கெதிர்நின்ற மயனுடல மிழுகப் புல்லி
யொப்பரிதாய் நீயிவண்செ யுதவியுரை யளவைகளி னுணர்த்தொ ணாதா
லெப்பெரியவருக்குமெனில்யான்கொலனு வெனுங்கைம்மா றியற்ற வல்லே
னப்பரம னருள்வீடு மதற்கிணையோ வன்றேமற் றறியே னம்மா. (௯௯)

என்றுபல புகன்றிணையொன் றின்றெனினு மாயிஃதங் கீக ரிப்பா
யென்றுபல பலபொருளி னிருங்குவைக ளரும்பணிமு னெல்லாந் தந்தாங்
கென்றுமறழ்மா மணிப்பணிவேந் தின்புறுமெ யன்பினமு தேசன் பாதத்
தென்றுணையேகும்பாபிடேகமினிக்கொண்டருள்கென் றிறைஞ்சிப்போந்து

முனிவர்சிக மாகநான் முற்றுணருஞ் சிவத்துவிச மூதக் கோர்மற்
றெனையரொடுஞ் சூழ்ந்தனுஞை யெழுவாய்மா கும்பாபி டேக மீரு
மணியசிவ மகாயாக மகாசாந்தி புரியோரை மாசொன் றின்றாய்ப்
புனிதமதாய்ப் பொன்மதிமுற் புணர்சுபநோக் கணவுகலம் பொலிவ தாகி.

திரிகோணங் கேந்திரமா தியநலன்பல் பயன்மலிந்து சிறப்பத் தீக்கோண்
மருவாது நுனித்துநிறை மதிநாணிச் சமிந்தனைய மாசு ணேசன்
பெருகார்வத் தமுதேசன் பேணுதளிப் பூர்வதிசை பிறங்கப் போந்தாங்
கொருவாதொன் றிலஞ்சிதன்பே ருறப்புரிந்து மயனுலவ் வுயர்த டாகம். ()

மேற்றிசைமார்க் கண்டமுனி வியன்றடமிவ் விரண்டினுக்குமிளிர்சோ பான
நாற்றிசைமா மதிலாதி நயப்புறுத்தி வியப்புறுமெய்ஞ் ஞானம் வாய்ந்து
போற்றிசையுஞ் சிவத்துவிசர் புந்திமகிழ்ந் தனவரதம் பொலிந்து வாழ
வேற்றிசைவான்வெருவுகுடிமியெழின் மணிமாளிகைபலவாங்கியற்றுவித்தான்.

முற்பெறவச் சகருடும்ப முதியசிவ மறையவரை முழுத்த நன்று
ளிற்பாவு பற்பல்பொரு ளெல்லாமு நனிநிறைத்தவ் வில்லந் தோறும்
பொற்புறுமா பிரதிட்டை புரிந் தமைத்தாங் கேனையவும் புரிந்து செய்யு
மற்புமிகு மகிவேந்த னந்நாட்டு மகிவேந்தா மபயர் கோமான். (௯அ)

சாற்றுறுபே ரிராசகு டாமணியென் பான்றனையித் தலத்தி னும்போந்
தாற்றுசெய லுரைத்தழைமி னந்தணர்கா ளெனவிடுத்தா னவராங் கேகித்
தேற்றினர்கேட் டன்புவகை திளைப்பவளப் பரியந்தித் திரளி னேறும்
போற்றுயரி வர்க்கமெலாம் புடைசூழ மாவனத்துட் பொருக்கென் றுற்றான்.

அந்தகையி னிராசசூ டாமணிபோந் தகிவேந்த னடிதாழ்ந் திந்த
வுத்தமமா தலமிதுவோ வொப்புயர்வில் சிவபுரமென் றுவகை யுள்ளம்
பொத்தநடந் தனந்தனெனும் பொன்மணியா திகடிகழும் புனிதன் கோயி
லெத்தலமுஞ் சிலாத்துவிச ரிருக்கைகளுந் தனித்தனிகண் டின்புற் றனனால்.
என்னுரைக்கே னின்னருமை யெப்பெரிய புலவோர்க்கு மெடுத்துக் காட்டா
முன்னுரைக்கு மரிதேநீ யுவந்துபுரி திருப்பணியி னுயர்வென் றனின்
முன்னுரைக்கு மாறேழை முன்னுகினு முற்றுவதோ மூதக் கோவென்
றின்னுரைக்குஞ் சென்னிதனை யெதிர் தழுவிப் பணியரசோ ரிருக்கையீந்தான்.

வேறு.

அந்தலத் தமர்ந்தர சனந்த னோடவ
ணைத்தரு செயனுங்கண் டிருப்ப வவ்விடை
மொய்த்தபல் பொருளெலா முன்கொண் டேகுவா
னுய்த்துள வேவல ருவைகொண் டேற்றனர். (௪௨)

அரிசனப் பெருங்குவா லாங்கொர் பாங்கரப்
புரியிடி யரிசிமாப் புலர்ந்த தாத்திரி
விரியிடி குங்குமம் வியன்மி டாக்களிற்
றெரியொரு பாங்கரிற் செறித்து வைத்தனர். (௪௩)

அலகில்பன் மிடாக்களெட் டைல மார்த்தனர்
பொலியும்*வற் சலகிரை வேண்டும் போதெலா
மிலகுதோ சனமுற யாத்திட் டாரவைக்
குலவில்பல் லுணுகிறைந் தொளிர்பல் சாலையில். (௪௪)

அப்பொழு தப்பொழு தாங்கு வேண்டுபால்
பொற்புறு தயிர்மிடா நிரைகள் பூரித்தா
ராப்பழு சுகந்தமெட் டெகுஞ் சூழ்பசுந்
திப்பிய நெய்க்குட மனேகஞ் சேர்த்தனர். (௪௫)

நெங்கெழு வின்சுவை நிமிருந் தைதவிக
முக்கனித் தொகுதியன் மூரி வெற்பின்வான்
மிக்கெழச் செறித்தன பேனை மேதகு
மெக்கனிக் குவாலுமங் கெய்த வைத்தனர். (௪௬)

மதுக்குடம் பற்பல மலிபல் லாயிர
முதுக்கழை ரசகண்ட முழுத்த சர்க்கரைப்
பொதிக்குல மனேகமுப் புடையி லாங்கவிக்
கதிர்க்குலை கோடிமேற் கவினச் சேர்த்தனர். (௪௭)

---

* வற்சலம் - இளங்கன்றுப்பசு.

திணியகாழ் நறுங்குற டெரிஞ்சு தேங்கமழ்
தணியபூந் தேய்வைப்பொற் றசும்ப னேகமாங்
கெணியவில் வாதியின் வடித்தி மோதக
மணிகட மளப்பில வாக்கி வைத்தனர். (எஅ)

பன்னிறப் பல்வகைப் பளகில் சாலிக
ளென்னவு மனேகவெற் பெனக்கு வித்தனர்
தன்னிக ரின்னியற் றூய தண்டலை
மன்னவற் றெண்மடங் கதிக மீட்டினார். (எகூ)

வாடக வொவ்வொரு வகையு மாசுதீர்த்
தாடக மாடமூர்க் கந்தி லாதிய
பீடகத் தானியம் பிறங்கு பற்பல
*நீடக மெனநிரை நிறைத்த மைத்தனர். (அ0)

வில்லுவம் பாடலம் பலாசம் வேணுமா
சொல்லுதும் பாஞ்சமி யித்தி தூர்வையம்
புல்லர சால்பலாப் போற்று சந்தன
மொல்லைவெள் ளெருக்குநா யுருவி மூவைந்தும். (அக)

திகழ்கருங் காலியே தேவ தாருவே
யகருவா மலகஞ்செஞ் சந்த னாதிய
பகர்சமித் தெலாந்தனித் தனிபற் பல்கிரி
வகையெனத் துணித்தவண் மலிவித் தாரரோ. (அஉ)

மலிபசுந் தருப்பைகண் மாயிற் கொய்து கொய்
தலகில்பன் முடிகொணர்ந் தாங்குப் பைம்மணி
மலையென வுயர்த்தினர் வகைபற் பன்னவ
கலசமுன் னடுக்கினர் கணக்கி லாதன. (அங)

அறிவரும் பொன்னினால் வெள்ளி யாதியாற்
சிறியன பெரியபஃ றிறத்த பாசன
மிறைசிவ யாகபூ சாதிக் கேய்வகை
யறிமய னிருமித்தாங் களிப்பச் சேர்த்தனர். (அச)

கூவிரம் வாரிசங் குமுதங் கொன்றையிந்
தீவரஞ் செங்கழு நீர்முற் சீரிய
பூவின மீனினம் புவன கூர்மமுன்
னுவன பொன்மணி யால மைத்தனர். (அரு)

* அகம்-மலை.

சூதபத் திரங்கண்மும் மூன்றிற் சொல்லுப
வீதபத் திகண்முடி விளங்கு கூர்ச்சங்க
*ளாதபத் திறத்ததேங் காய்க ளாதிய
பூதபத் தியின்மணி பொன்னிற் சேர்த்தனர். (௫௬)

பொன்னினும் பட்டினும் பொருவி லாமணி
தன்னினுங் கவிகைவெண் சாம ராதிகண்
மின்னுமிழ் சுருட்டியா லவட்டம் வீசன
முன்னிவை யளப்பில முற்றி னார்களால். (௫௭)

விலைசெல்காற் பாசமெல் வாசம் வீற்றுவீற்
றலகில்பன் னிறத்தபட் டாடை காம்பாங்
குலவுமெல் வோர்வகை கோடி கோடியாக்
கலைகளி னளவுறக் கலைக ளார்த்தனர். (௫௮)

மதிப்பரும் வின்னவ மணிக்கு வால்பல
கதிர்த்தெழு வனகன கக்கு வால்பல
நிதித்தொகை பற்பல நிமிர்த ரக்கொளு
விதிர்ப்புற வகையுமிகக்கு வித்தனர். (௫௯)

வேறு.

கற்பமுறை யமைத்துவடித் தெடுத்துத் தூய கமழ்தருசீ தளவிலைப்பூங் கலவை சேர்த்துப், பொற்புறவாய் தாத்துகிலி னிறுகச் சூழ்ந்த பூரிதவெண் டிருநீற்றுப் புனைபொற் கும்பம், பற்பலசேர்த் தனர்நானங் குங்கு மப்பூப் பாளிதங்கோ ரோசனைவெண் பசுங்கர்ப் பூரம், விற்பெறுதண் புழுகுமுத லளப்பிலாத விரைவருக்க நிரைநிரையா விளங்கச் சேர்த்தார். (௬௰)

விரைகமழு நறுந்தூபம் விரித சாங்கம் விரவுறுபூம் பொடியேல விதந்தக் கோலம், வரமிகுசா திக்காய்பத் திரிவ லங்கம் வான்மிளகு முதல்வாசவருக்க மெல்லாம், பெருகநிரைத் தனர்யாகத் திரவி யங்கள் பெட்புறவொவ் வொன்றுகப் பேணி யாராய்ந், தரியவெலா மிகச்சுலப மாக வாங்க ணளப்பரிதாம் படிநிறைய வமைத்துப் பின்னும். (௬௧)

அரம்பைநெடுங் குருத்தலரும் பருவம் வாய்ப்ப வரிந்துசுமை சுமையாக வனேகஞ் சேர்த்தார், வரம்பிலகாய் வகைமூல வகைக ளூக வல்லிபழுக் காய்வகைகண் மற்றுஞ் சேர்த்தார், விரும்புதளிர் வகைதுவர்ப்பூ ருகத்த தொக்கின் விதமிருத்தி கைவகைகளொ ளுகவி தங்க, ணிரம்புசிவ தீர்த்தவகைப் பொற்குடங்க ணிகழ்த்தரிவை முதல்யாவு நிறையச் சேர்த்தார். (௬௨)

---

* சூரியகிரணம் போலும் ஒளியைச் செய்யுந் தேங்காய்.

இவ்வகையே வலர்வேண்டும் பொருளெலாமவ் வெல்லையெலாஞ் செறிதரச் சேர்த் திடுங்காற் சேட, னவ்வமுத லிங்கேசற் குளிராம்ப வருண்மேனி குளிர்தாமா வபிடேகாதி, திவ்வியபூ சனைபுரிந்து மேற்செறு டங்குந் திருத் தருமா கும்பாபி டேகச் செய்கை, யெவ்வமுறு இயலுறக்கொண் டருள்க வென்று வேத்திறைஞ்சி வேண்டுபுமே விதனைச் செய்யும். (௯௩)

சிவத்துவிசர் முகமாக மயனைக் கொண்டு திருந்திரண்டாம் பிராகாரத் தீசா னத்தி, னவத்தகுமா குண்டங்கள் வேதிகாதி நாலிருமங் கலந்தசா யுதங்க ளுட்டி, நிவத்தகுநாற் றுவாரங்கூர் மாதனுதி நீடுறு மேல் விமானமே மிக ழ்வி தான, முவத்தகுபல் லுறுப்பெலா மணிபொனுற்கொண் டொளிர் யாக சாலைகளாங் குளுற்று விப்பான். (௯௪)

ஒருகோட்டு முதிர்வேழ மலகில் கோட்டு மிருகோட்டு வான்பிடியோ டொளி யாருந், திருகோட்டு மாறுமுகங் கண்டெட் கோட்டந் தீரவருண் மதவேழம் வேதன் சென்னி, யருகோட்டு வண்கைவடு கேசன் மற்று மருக்கன்முதற் சண்டேச னந்த மாக, வருகோட்டு பரிவாரர் விமான மாதி வகைக்கெல்லாந் தனித்தனிமா மகப்பொற் சாலை. (௯௫)

அருண்மலரும் பிரகந்நா யகியெம் மன்னை யமுதேச னிருவருக்கு மருமை வாய்ப்பத், திருமலரும் பிரதான யாக சாலை திகழ்தரச்செய் வித்தரம்பை கழைதிண் பூக, மருமலரும் பஃறெருடைப் பொன் னரிய மாலை வளரொளிப் பன் மணிமாலை மணிப்பொற் குச்ச, முற்றுமலருந் தோரணமுன் னணிக ளெல்லா மொப்புயர்வி லாவகையாங் கொளிர்வித் தானால். (௯௬)

இன்னனபற் பலமுன்ன ரமைய வேண்டு மிருந்தொழில்க டிருந்தவயந் தெல்லாஞ் செய்தாங், குன்னிமிக மாகமமுன் னோதிங் கைவந் துறுமனுப்பா வனைசெய்யுந் திறமுன் னோர்ந்து, சொன்னமா பங்கீ னுதி குற்றந் தோயாம லகம்புறமுந் தூயோ ராகி, மன்னுசபத் தினிகசிவத் துவிசர் நான்கும் வாய்ந் தவரை யாய்ந்து தெரீஇ மாபிற் போற்றி. (௯௭)

சிவமாகும் பெருவாழ்வு பெற்று வாழுஞ் சிவத்துவிச மகத்துவமான் செல் வர் காளிப், பவமாகந் தவமாகும் பாபி டேக பரமமகா சாந்தி செயும் பணி மேற்கொண்டே, னவமாவ தணுவுமுறு வண்ண மன்ன தாற்றியருமம் பய னெனக்கு மளிப்ப தும்பா, னவமாவ தன்றிதுமேற் கொண்டு நீரோ நடத்தி முடித் தருள்கவென நமந்து பின்னர். (௯௮)

அத்தகைய சிவத்துவிசர் தமையெம் பெம்மா னமுதேசன் பெரியநா யகி யையங் கையோன், சத்திதரன் முதலானோர் வேள்விக் கெல்லாந் தனித்தனி யே நவநவமாச் சாருங் குண்ட, மெத்தொகையத் தொகையமல போத கேச ரிருத்துவொடு சாதகரென் றெண்ணி யின்று, ரித்தகுருண் டத்தோ மம் புரிக வென்று வெல்லையுற நியமித்தா னிரும்பை வேந்தன். (௯௯)

அங்கதன்மே லங்கதவேந் துலைக்கி சைந்தாங் கருத்திமிகு குருத்துவப்போ திகா ரச்சீர்ப், புங்கவர்தாஞ் செய்விக்கு மிறைவ ஞம்பப் புயங்கபதி யிடையாச வனுஞ்ஞை பூணுங், தாங்கவினைமுறைமையிற்செய்தங்காண் முன்னுத் தொடங்குபுசென் மானதிதித் தொகைகண் முற்றும்,பங்குபதி ஞென்றுகப் பாப்பித் தூய்மை பணுஞ்செயலாந் தனபூசை பாங்கிற் செய்தார். (எ0)

பின்னூரிய பிராமணர்த மனுஞ்ஞை பெற்றூர் பெருகுதிதி தக்கிணைமுன் பேணி யீந்தா, ரன்னையரு ளமுதேசர் தமைமெ யன்பா லபிடேகா திகணிகழ வருச்சித் தேத்தி, யுன்னுதிரு வருள்வேண்டி யனுஞ்ஞை பெற்றுங்குறு செயலெல் லாமிடையூ றென்று மின்றி, மன்னிமுடி வுறவேண்டி விக்கினேசன் மலாடிக்கு மாபூசை வயங்க வாற்றி. (எக)

நேர்ந்துபராய்ப்போந்தமுதநா தனுர்சந்நிதியின் மகாசங்கற்பஞ்சிழ்த்தி வாத்து, சாந்திபிர வேசபலி கிராமசாந்தி சாற்றிரட்சோக் கனஞ்சீவ தயைமீக்கூடாத், தேர்ந்தளபூ சினிக்காய்முன் னுவ கொண்டு செய்திளம்புன் முதனிலைத் தான் றிரட்குலங்க, ளார்ந்ததிருக் கோயிலிட மெங்கு மங்கி யமர்தருகோ திவாசமுறை யாற்றி னுமால். (எஉ)

அனந்தரம்பூ ருவபுண்ணி யாகவாச னஞ்செய்தரு மறையாக மாதியாய்ந்த, கனந்தருவிப் பிரவெண்டிமாபிற் செய்தார் கலிஞுறவுத்தாபுண்ணி யாகங் கண்டார், தனந்தருமா கிருகமகம் புரிந்தார் சங்கி தாவோமந்திசாவோமஞ் சாந்தி யோமம், வனந்தருமா வருணிறையு மூர்த்தி யோம மலிதர்வாங் காங்குலிதி வயங்கச் செய்தார். (எங)

வேறு.

இருசேய்க ளொருதாயெம் மமுதேசன் விழைசண் டீசனிவ ருற்சவங்கொண் டெழுந்தருண்மூர்த் திகளை, வருதேச திரிசூல வத்திமா தேவை மலியுமபி டேகாதி வயங்குறப்பு ரித்தாங், கொருவாவெள் விடையாதி கவிலாலோ கணிப்பித் தொளிர்வீதி விழவுறச்செய் தடன்போந்து விஸ்வத், தருமூலத் தெழுந்தருள்வித் தறுமாயி லனைய தருமூல மிருத்திமைபொற் றட்டதனிற் கவர்ந்தே. (எச)

மாற்றுயர்பீ தாம்பரமேல் வயங்கவிரித் தனைய மண்கவர்ந்த வண்கனக பாத்திரத்தை மாபி, னேற்றிவர்யாங் கமர்ந்தருளு மமுதேசா தியரோ டெழுந்தருள்வித் தாவயம்புக் கெழில்யாக சாலைப், பாற்றிகழச் சோமகட தாபன முன் னிகழப் பாலிகைபூ சனைபுரிந்தப் பாவனமிர்த் திகையை, வீற்றுவீற் றுளபாலி கையினிறீஇ யான்பால் விராயபல தானியங்கண் மீது தெளித் தமைத்தார். (எரு)

அவிர்தருமிவ் வகைமிருச்சங் கிரகணத்தோ டங்குரார்ப்பணஞ்செய் தனைய
சிவத் துவிசரொரா மன்பர், விவர்தருபொன் ஞாணிரட்சா பந்தனங்கைக்
கொண்டாங் கெமதிறைவ னமுதசுயம் பிலிங்கேச னிமய, நவிராம்வள ரனை
சேய்மு னெவர்க்கு முயர் செம்பொன் ஞாண்காப்பு யாப்புமுறை புரிந்தபி
டே காதி, திவியபிர சன்னபூ சனைபுரிந்தாங் கனைய தேவேசன் முதலா
ஞோர் திருத்தகுசந் நிதியில். (எசு)

தூயதுகி லான்வடித்து மணங்கள்பல தொகுத்த ஆகீர்பூ ரித்துளபொற்
குடங்கள்பிர தான, மேயவருத் தனியட்ட வித்தியே சாதி விதமுறத்தா
பனம்புரிந்தாங் கமுதேச விபுவை, யேயதனிச் சுயம்பிலிங்க விம்பமன்றிக்
கும்பத் தெந்தையே வந்தருள்கென் றிரந்திரந்து நின்று, வாயிதனி லமர்ந்
தெளியே மட்டபந்த னந்தா னமைத்தபின்பின் டெழுந்தருளி யமர்ந்தருள்
க வண்ணல். (எஎ)

ஒருவாத தனியமுத லிங்கவுரு விதுமா மொருவரிதென் றமர்ந்தருளேல்
பொற்குடமீ துனது, திருமேனி மலர்சிகைபொற் றேங்காய்மா விலைசூழ்
செறிநூலா தியவேனைத் திருவுறுப்பாத் திகழ்வ, வருணீரிற் குளிர்ந்தமனை
நிறைந்துபூ ரிதமா யமர்திருத்தந் திருத்தகுமட் டகத்தினிலென் முமே,
பெருமானே திருமானேர் வருமானேர் பாகப் பெம்மானே யம்மானேந்
தியகாத்தெம் பிரானே. (எஅ)

வேண்டுவார் வேண்டுவதே யருளுமது தொழிலென் வியவுமெய்த் திருஞ்
சுருதி விரிப்பதையுன் றனையே, யாண்டருளு மன்றுமே மென்றுமே
வெனவே யடுத்தடுத்தாங் கிரப்புமொழி யளப்பில சொற் றழைக்கு, மாண்
டருமந் திரங்களெடுத் தோதியா சாதி மாபினிற்செய் தனையருடத் தானா
கித் தேனே, யேண்டருபொற் குடங்களிறுங் கலசவர்மு தனமா மேயுந்தரு
ள வம்முறையா வாகனமுன் னியற்றி. (எகூ)

அருளுருவா யமர்ந்தருளெம் பெருமானை யுருகு மன்புருவாய் நின்றிரந்து
வேண்டியவிர் குடத்தின், வருதன்முனந் தெரிதலெனப் பரிதவிருஞ் சயங்
கி மற்றனைய பொற்றசும்பை யருச்சித்தாங் கேனை, யொருவில்கடங் களும்
பூசித் துடன்யாத்தி ராதி யுயர்தானம் புரிந்துதனித் தனியுட்டி னீட, சிர
மேலச் சிவத்துவிச ருயிர்மேலும் வகித்துச் செல்லடிமே லடிதுவன்றமெல்ல
நடக் கின்றார். (அ0)

முத்தாரா விருதமுழுக் குடைகள்சா மரங்கண் மூரிவிடைக் கொடியாதி
வரிசையெலா மொய்ப்ப, வித்தார மாகதர்வந் தியர்சூதர் வீர மேதகுமங்
கலம்புகழ்கள் விதந்தெடுத்துப் பாடப், புத்தேளிர் கற்பகப்பூ மாரிவனி பொ
ழியப் பூதேவ ரக்கதைதா யாசிமொழி புகலச், சுத்தோத கம்பனிநீர் படிவா
நறுந் தோயஞ் சுவணமணி சாலிபொரி பூமழைமுன் றூர்ப்ப. (அக)

கண்மணி புனைந்து பஞ்சாக் கரங்கருத் துறச்செ பித்து
வண்மணிக் கோயில் புக்கு மந்திரேச் சுரன்வான் போற்று
மொண்மணி கண்டன் முன்சென் றுளநெகிழ்ந் துருக வேத்தித்
தண்மணிக் கழலி றைஞ்சித் தாண்டவம் விழைந்தி ருந்தான். (கஙஅ)

முன்னருள் புரிந்தாங் கன்ன முனிவற்கு நடன நாதன்
றன்னருட் பெருக்கி னாலத் தாண்டவந் தரிசிப் பித்தான்
பன்னரும் பரமா னந்தப் பரவையுட் படிந்து பல்வே
றின்னருட் டுதிகள் கூறி யடிக்கடி யிறைஞ்சி வாழ்ந்தான். (கஙகூ)

இறையவ யார்க்குங் கிட்டா விப்பெரு நடன நாயேன்
குறைதப வளித்தா யெந்தாய் கோதிலா வருட்பெ ருக்கி
னிறைவெவர் சொல்ல வல்லார் நீசன்செய் கைமா றுண்டோ
மறையெலா மளப்பி லாத வள்ளலே யென்று தாழ்ந்தான். (கசo)

அளவிலா னந்த மீக்கூர்ந் தனையனு டோறு மன்ன
பளகிலா ரோது சூத பாதவ கானத் தாலங்
களனிலா வண்ணல் பாதங் கைதொழு தமர்ந்தான் பன்னாள்
வளனுலாம் புன்னை வேலி மறைவனத் தடைந்தான் பின்னாள். (கசக)

கோசிக னடங்கண் டன்பு கொண்டுவாழ் காதை யீதான்
மாசறு தவத்தோய் பானு மதிமுத லொன்பான் கோள்கள்
பேசரில் வனத்தோர் காலெலம் பிரானடி பணிந்து போற்றித்
தேசுறு தவஞ்செய் திட்ட சித்திபெற் றருளின் வாழ்ந்தார். (கசஉ)

உத்தம முனிவ வேமுன் னுரைத்துநீ யுற்றுக் கேண்மோ
முத்தொழிலின் மத்தி வாய்ந்த முதுதொழிற் றிறசெய் தேவன்
றத்துவ மார்க்கம் யார்க்குஞ் சாற்றுமா குரவன் வாய்மை
யுய்த்துணர் மறைநான் காதி யுள்ளவா றுணர்ந்த மேலோன். (கசங)

இப்பெருந் தலைவ னுய்யு மிந்திரை கேள்வ னாழி
னெப்பெரு வலிக டத்தற் கருணையா லாதி நாளிற்
றுப்புறு மசுரற் காற்றுச் சுரர்கட லமுதுண் டாற்றல்
கைப்பெறு மாபா லாழி கடைந்திடத் தொடங்குங் காலை. (கசச)

விக்கின நீக்க லாக்கல் விளைத்திடும் பெரிய தேவை
யக்கணம் பூசித் தேத்த வயர்த்தமு றுணவின் வாஞ்சை
மிக்கெழ வமரர் சூழ வேண்டும்பல் கருவி கூட்டித்
தக்கபா லாழி மாலோன் முன்கடைந் தியல வாங்கே. (கசரு)

இந்திரை யிந்தி ராணி யிலங்குவெள் ளிபமுன் னாவ
வந்துவந் தெழலு மீது மற்றெமக் கெமக்கென் றேறி
முந்துமுந் தொவ்வொன் றாக முற்றும்பெற் றுளங்க ளித்தார்
சிந்தனை விழைந்த வாறத் தெள்ளமு தெழக்காண் கில்லார். (கசசு)

மெய்விசைத் தீர்த்து வானோர் விசைதரக் கடைந்தா ரற்றாற்
பைவிரி யரவாற் றாதப் பரவையும் வறப்பத் தன்வாய்
மைவிரி யாலங் கால மற்றெமக் கெமக்கென் றோர்முன்
கைவிரித் துதறி யஞ்சிக் கால்விசை கால்வி சைத்தே. (கசஎ)

முழுவிசை யிதுவே யென்ன முற்றொருங் கோடி னாரப்
பொழுதிறை பாணித் தூன்மா னுணித்தான் பொருக்கென் றோடா
வழுவினவ் வால மீற்றின் வன்னியிற் சுடவெண் மேனி
பழுதுறீஇக் கரிய னாகிப் படர்கதி வலியி னுய்ந்தான். (கசஅ)

வருவிடந் துரப்பச் சென்ற மாயன்முன் வானோ ரச்ச
மொருவிடா தோடி யோடி யுலகெலா முழன்று மந்தோ
வெருவிட மன்றி யாண்டும் வேற்றிட மின்றி நைந்து
பொருவிடை யமலன் முக்கட் புராரிபே ரருள்கை கூட. (கசகூ)

அடுத்தவ ரிடுக்கண் டீர்க்கு மமுதசஞ் சீவி யாயிப்
படிக்கணே வயங்குஞ் சூத பாதவ கானத் தெய்தி
நடுக்கமுற் றொழிந்து கீழைக் கோபுர வாயி னண்ணிப்
பொடிக்கொள்பொன் மேனி யெம்மான் கோயிலுட் புக்கோ லிட்டார்.

அண்ணலெம் மந்தி ரேச னடியின்கீ ழலறி வீழ்ந்தா
ருண்ணெகிழ்ந் துருகு மாயோ னேதுமீ தும்பர் கோவே
துண்ணென விரிந்த நஞ்சந் துரப்பவொந் தலைந்தா கூழிற்
றண்ணரு ளீர்ப்பப் போந்துன் சந்நிதி யடைந்தே மெந்தாய். (கருக)

ஒருகணந் தாழ்க்கி னெம்மை யுடன்றுடன் றொலைக்கு நஞ்சம்
வருகணை மீற்றி லாடு மயானயித் தான மாகிப்
பெருகணை வுசாத்தா னப்பேர் பிரியுமால் விரியு நஞ்ச
மருகணை வுறாம லெம்மை யளித்தியா லருளின் வள்ளால். (கருஉ)

வேறு.

என்று மாதவ னிணையடி மாதவ னிறைஞ்சி
நின்று வேண்டலு நின்மல னாருரு ணிலையாற்
றென்றி சாமுக வாயிலின் வழிவெளிச் சென்று
பொன்று றுத்திறல் வைரவச் செம்மன்மேற் றிசைபோய். (கருங)

ஐங்கு ரோசத்தி னெல்லையி னவ்விட மமர
ரெங்கு ளாரென வினவலிற் கொதித்திரைந் தெழலுஞ்
செங்கை நீட்டிபு கவர்ந்தனன் றிருவுசாத் தானத்
தங்க ணுதனு யிடைப்புக வருட்காத் தளித்தான். (௧௫௪)

அனைய வல்விட மங்கையி னங்கயின் றகில
நினைய நீலகண் டேசநா மங்கொடந் நிலையிற்
புனைய ருட்டிருக் கோயில்கொண் டருளியப் புராரி
யெனையு மாள்பான் வீற்றிருந் தருளுவா னென்றும். (௧௫௫)

இந்த மாதலத் தவ்விட மெந்தைகை யளித்த
மைந்த னும்வடு கேசன்றென் மாதிர முகனு
மெந்த நாளுமத் தளியில்வீற் றிருந்தருள் புரியு
மந்த நற்றலத் துற்றருள் பெற்றுளா ரனேகர். (௧௫௬)

இன்ன நற்றலந் தாமரங் கோட்டையென் றிசைப்ப
வின்ன தியாவையுந் தருமய னகரின்மிக் கிலங்கு
மன்னு சீகண்ட நாதனுங் கருள்செயல் வாம
மன்னு தாயறம் வளர்த்தநா யகிபெயர் வயக்கும். (௧௫௭)

அறம்வ ளர்ப்பது நாமிரு நாழிநெல் லாலெத்
திறனி வர்க்கொடச் செயல்விரிக் குதுமெனத் தெளிந்தம்
முறைய ளித்தநெல் லாலு லக்கூட்டமூ தகுசீர்
நிறைவ ளத்தவே ளாளர்கூட் டம்மவ ணிலாவும். (௧௫௮)

என்னை யாளறம் வளர்த்தவ ளெண்ணிய செயலை
முன்னி யாங்குமுற் றினாரிவர் முதத்தினெம் மணித்தாய்
மன்னி வாழ்கெனத் திருவுளங் கொண்டமாண் பாலோ
வன்னர் கூட்டமிக் கவிருமந் நகருமப் பாங்கும். (௧௫௯)

விடம யின்றரு ளண்ணறன் சூதமா விபினத்
திடைமி டைந்தமான் முதலினோர்க் கருள்புரிந் தினிநீர்
கடல்க டைந்திடிற் கணேசனைப் பூசித்தே கடையி
னிடரொ ழிந்திடுஞ் சென்மினென் றிசைத்தன னெம்மான். (௧௬௦)

அன்ன வாறரு டலைக்கொடு மான்முத லமரர்
ஈன்ன ரேகின ரயன்றிருக் குமரமே னலங்கேண்
முன்ன ரோர்பகற் கௌதமன் மனுவிறை முளரி
யன்ன சேவடி பணிந்தக லிகைதனை யடைந்தான். (௧௬௧)

உ

# அமுத நிவேதனச் சருக்கம்.

தசரதன் மைந்த னனைமீளி தளர்வொழி புய்ந்து நீடுவாழ்வி
னிசைதரு மந்தி ரோபதேச மினிதுறு நன்றி யோதினுமுன்
னசையமு தங்கொ ளுமுராரி நகமகள் கொண்க னர்முனியு
நிசசரி தஞ்சொல் வாமெனவு னிகழ்தர நந்தி நாதனேனும். (௧)

வேறு.

சூதவன நாத னமர் தூச்சரிதத் திடைமேன்மேற்
காதல்வளர் சனற்குமா கரிசனுமா தவகேண்முன்
மாதவனெம் பிரானளித்த மலியருடன் றலைநிரைவைத்
தாதரமிக் குறுதியினி யமுதுறுதி யெனக்கூறும். (௨)

சுராசுரர் குழாந்தொடரத் தும்பிமுக நம்பியிரு
வரகமல மலரடிகண் மறவாம லுறவாழ்த்திப்
பரவுபொருள் பலகொடுசெ பரியைவிதி வழியாற்றிக்
கரமலரஞ் சலிமுடிமேற் கவினுறநின் றனன்றுதிப்பான். (௩)

பிரணவமாந் தனிக்கூடம் பெயராத குஞ்சரமே
பிரணவமா மாளானம் பிரியாத புகர்முகமே
பிரணவமா மலர்வாவிப் பெரிதாடும் போதகமே
பிரணவமாஞ் சேவகத்திற் பிறங்குமணி வாரணமே. (௪)

ஓங்கார வோங்கலகத் துதித்துலவுங் கிரிசரமே
யோங்காரத் தீங்குடிலை யுள்ளவிரு நதிசரமே
யோங்காரத் தேங்கான மொருவாத வன்சரமே
யோங்காரப் பெருவீதி யுலாவருதந் தாவளமே. (௫)

தாரகமே முகமாகத் தயங்குபெரு மதங்கயமே
தாரகமே திருவுருவாத் தனிவிளக்கு மாதிரமே
தாரகமாம் பிடிகளிற்றிற் றனியெழுந்த கயமுனியே
தாரகத்தி னுள்ளுயிராய்த் தணவரிய குணகரியே. (௬)

திருவருளா மதவெள்ளந் திரைகொழிக்குஞ் சாவமையே
கிரியையறி விச்சையெனுங் கிளர்மதமூன் றொழுக்கிபமே
யிரவுபக லற்றொளிரு மிடத்தமருங் கடக்களிறே
வரவொடுபோக் கிலாதெங்கு மருவிநிறை மதாவளமே. (௭)

பரவுமலப் பெருஞ்சேற்றைப் படர்ந்துழக்குங் கறையடியே
விரவுபலப் பெருங்காட்டை விரைந்தழிக்கும் புழைக்கரமே
வரவயிரா வணமுகைத்து வருங்களப நால்வாயே
யரவுதர பந்தனமா யார்த்தபெருஞ் சீர்த்தகரே. (அ)

ஐங்கரனால் வாய்முக்க ணருளிருதா ளொருமுனியே
சங்கரனின் சடைக்காட்டிற் றனிவிளையாட் டியல்கயமே
கங்கையுத கம்புழைக்கைக் கவர்ந்திறைக்குங் கயந்தலையே
செங்கரவேற் சோளரியோ டெனுதித்த சிந்துரமே. (௯)

மறைமுடிப்பா துகையினடி மலர்சாத்துந் தாடியடியே
மறையணிநூ புரமாக வளையணிமா லேவபூமே
மறைபுகன்மூ லப்பொருளா வழுத்தியன்மா தங்கமே
மறையுமனு குதற்கருஞ்சீர் வளர்களப சேகரமே. (௧௦)

கணராச குணராச கவிராச புவிவாச
பணராச சடிலமகி பதிராச நிதிராச
வணராச மலரிதழி வனைராச வனைவல்லை
மணராச துணர்வரச மலரடிக ளிணை போற்றி. (௧௧)

அகிலமெலா முபக்கிரமத் தன்பினினை யேயிறைஞ்சத்
தகவுறுமச் செயன்முழுதுந் தனிமுடிப்பாய் வனிமுடிப்பாய்
திகழுறயாந் தொடங்குறுமிச் செயன்முடிப்பாய் பயமொழித்தெம்
பகவதிரு வருள்பொழியும் பதத்துணையே துணையென்று. (௧௨)

இன்னனபஃ றுதிபுகன்றவ் விறையருளா னிறையுவகை
துன்னியசென் றம்முகுந்தன் குதவன நாதனடி
சென்னியுற மறவாத சிந்தையனாய்ப் பாலாழி
முன்னிலையிற் சுராசுரரான் மோதமுறக் கடைவித்தான். (௧௩)

ஆங்கெழுந்த தினியசுவை யாரமுத மதுகடத்தின்
பாங்குறப்பூ ரிதம்புரிந்து பாங்குறவைத் தனன்பின்னர்த்
தேங்குசுரா சுரரனைய திருமார்ப னடிதாழ்ந்திவ்
வோங்கமுத முறைபகிர்ந்திங் குதவுகென வேண்டினரால். (௧௪)

அதுவினவு மரியவரை யழைத்தசுர சுரகுலங்காள்
விதுமுடியாம் பிரவனத்தெம் விமலனரு ளாலிந்த
முதுசுவையா ரமுதெமக்கு முற்றுறப்பெற் றனமவனுக்
கிதுமனிவே தனம்புரிந்தவ் விரும்பிரசா தங்கொளலே. (௧௫)

மாயாகும் பொருத்திருமின் வல்லையமு தளிப்பலென
வுரையாடி யமுதகட மொருங்குடன்கைக் கொண்டேகி
விரையார்தண் சூதவனம் விரையாவந் தனையசுவைச்
சுரையார்பொற் றசும்பொருபாற் றுரிசறவைத் தமுதேசன். (கசு)

கழன்மறவா மனத்தொடுமார்க் கண்டதோ யந்தோய்ந்து
நிழன்மறையாக் கண்டிகைவெண் ணீறணிந்தைந் தெழுத்தோதிப்
பழமறைபோற் றருமமுத பாமசுயம் பிலிங்கேசற்
றொழுன்முறையா னயந்தேத்தித் தாநறுமா மலராதி. (கஎ)

அருச்சனைக்காம் பொருள்புவை மமைத்தடிபூ சித்தனைய
மருச்சுவைத்தண் ணமுதகட மலிதரநேர் வைத்தண்ணல்
கருச்சுழியி லுறாதருட்செங் கைந்நீட்டி யெமையெடுக்குந்
திருச்சடையே யமுதேசா சிறியேமின் றிருவருளால். (கஅ)

ஆழிகடைந் தெடுத்ததிரு வமுதினுநஞ் சமுதாக்கொள்
வாழிதிருக் குமுதமலர் மதுவாக்கொண் டருளியெம
பாழிவினை யொழித்தினருள் பாலியெனப் பலமுறைதாழ்ந்
தேழிசைமா மறையனந்த மெடுத்தேத்தி யெதிரிறைஞ்சி. (ககூ)

பூசனைமுற் றறமுடித்தப் புனிதனிவே தனவமுத
னோசனையாச் சண்டேசர்க் குபாக நிவேதனஞ்செய்
தீசனைநல் வாசனையா ரிதழிமதி நதிவேணித்
தேசனைமீட் டெம்பாலிச் சென்றனனவ் வமுதினெனும். (உ0)

அன்னதிரு வமுதநுகர்ந் தசனமேலா வதுமேனித்
தன்னிமோ முற்கலுழன் றனையமுதத் தாளியானோ
மன்னயிர்தந் தருதானவ் வடிவினுணர்த் திடவதுவாய்
முன்னரே முளைத்தெழுந்த முறைமையோ நாமறியோம். (உக)

அத்தகைய மாவனத்தவ் வருளிலிங்க மமுதமய
சத்தவடி வாகவே துலங்கியொளிர் தருமென்றும்
வித்தகமே லவ்வமுத மிளிர்கடங்கொண் டேகியமால்
கொத்தகரு ணையிலமார் குலைக்கிடா மெனக்குறித்தே. (உஉ)

அவ்வசுரர் தமைவஞ்சித் தமாருக்கே யமுதமளித்
தொல்வரும்பாற் கடலடைந்தாங் குரகபதிக் கொளிர்குத
இவ்வியகான் விடந்துரத்தச் சென்றதுமந் திரநாதன்
றெவ்விடமுண் டெயிரளித்த திருவருளு மதன்மேலும். (உங)

வேறு.

மைந்தகே ளனந்த னுங்கு வந்தமு தேசற் கந்நாண்
மைந்தம ரிராச சூடா மணியெனும் வளவற் கூய
மைந்தபல் வளந்து வன்ற மாபினி லுவகை மல்கி
* மைந்தறப் புரிம கோற்ச வத்திரு மாண்பு முற்றும். (௨)

வானநா டளிக்குஞ் சீர்த்தி மகபதி யுணர்ந்து சூத
கானநா டளிக்கு ணத்திற் கனிந்தமு தேசன்காள
பானனு டளிக்குட் போந்து பரவியத் திருவி ழாச்சீர்
மேனனு டளிக்கு லாவ விழுத்தக விதியாற் செய்தான். (௩)

அனந்தன்முன் னியற்று வித்தாங் கனந்தாம் வலாரி யாற்றும்
வனந்தரு மனைய வாய்மை மகோற்சவத் திறஞ்சொல் வாமென்
றினந்தரு முனிவர் வானோ ரேனையர் தமையொ ருக்குங்
கனந்தரு வேத்தி ரக்கைக் கண்ணுதல் கழறு கிற்கும். (௪)

வினவுதி யனற்கு மார வித்தக முனிவ ரேறே
யனகனும் பனக வேந்த னுற்றமத் திருவி ழாச்சீர்
த்னகமோர்ந் தெழுக நாசி தண்ணரு ளமுத நாதன்
கனகவம் போரு கப்பூங் கழற்பதி கருத்த னுகி. (௫)

தழைத்தெழு மன்பு முன்போ தரச்சதா கதியைத் தன்முன்
னழைத்தனி மேக கேட்டி யாம்பிர கானத் தெம்முட்
குழைத்தரு ளுருவாய் மன்னுங் குலவமு தேசற் கிந்நாண்
மழைத்தரு சைத்தி ரோற்ச வம்புரி வாஞ்சை யுற்றும். (௬)

ஆதலி னமுத சூத வணிவனம் விரையச் சென்று
காதலி னுங்கு முன்னர்க் கவினிறை செயல்க ளெல்லா
மோதலி னுதிக மென்ன வுஞற்றுகென் றனன்கேட் டாங்குப்
போதலி னுர்வ மிக்குப் பொருக்கென வெழுந்தான் மன்னோ. (௭)

ஆசுக மளிப்ப திந்த வருட்சிவ பணியே யன்றோ
வாசுக† மளித்து மாற்று மமுதலிங் கேச னம்பா
லாசுக வளிப்பா னுக வருட்டொடர் பிணித்தான் போன்மென்
றாசுக வேந்தன் மீது பார்வமுந் துறச்செல் கின்றான். (௮)

---

* மைந்து - மயக்கம்.

† உகம் - உலகம்.

பிறங்குகண் ணடியோ வென்னப் பித்திகை யாதி யேனைத்
திறங்குல வணிக ளெல்லாந் திருத்தக வமைத்துள் ளாலம்
மறங்குசெவ் வியவ சந்த மண்டபப் புறம்பு சூழக்
கறங்குசீ ரிளம ரக்காக் கமழ்ந்துல களப்பக் கண்டான். (கஎ)

திருத்தகு மயிழு கச்சீர்த் தெருதுவா யிலினே ரெம்மா
னுருத்தக வெழுந்து பத்தி யுலாநடைக் காவ ணந்தான்
குருத்தகு விதான மாதி குலமணித் தொங்க லாதி
மருத்தகு மாலை யாதி மலிந்தொளி வயங்கக் கண்டான். (கஅ)

மாகதத் திலைக டண்டு மணிபொனூற் குலைய மைத்து
விரவுபூந் துகிரிற் றூக்கும் விழுமிய வாழை வெண்பொ
னரைநுவர்ப் பழுக்காய் முத்தி னலர்முகை யாதிப் பூக
நிரைகள்பல் வகைய நன்ன னிரைநிரை யாகக் கண்டான். (ககூ)

நிலனெலாம் பளிங்கிற் சோதி நிலவெழச் சமன்செய் தன்ன
தலனெலா மதித ழூஉம்பசு ஞ்ராகா கணங்க ளென்ன
நலனெலா நிறைந்த தூய நகுமணி நிரைக ளாய
குலனெலாம் விளக்க மாகிக் கொழுஞ்சுடர் பாப்பக் கண்டான். (உ0)

விரையெலாம் விராய சாந்த மெழுக்கெலா முகனுஞ் செய்தான்
விரையெலாம் விராய பன்னீர் மேலெலா மணப்பப் பெய்தான்
விரையெலாம் விராய தூபம் விசும்பெலாங் கமழச் செய்தான்
விரையெலாம் விராய சுண்ண விசுமெலாம் விரியப் பெய்தான். (உக)

இடமிடந் தோறுஞ் செம்பொ னெழின்மணி குயின்று தூய
வடிபுனை கிரைறத் துச் செந்நெ மாலிலை மணிப்பொற் றேங்காய்
முடிசரு கருப்பை வாச மொய்ம்மலர் மாலை சேர்த்தி
நெடியொளிர் பூரகும்ப நிரைநிரை யாக வைத்தான். (உஉ)

இன்னன மேலு மேலு மெண்ணில வெண்ணி யெண்ணி
மன்னிய புரிஇவ சந்த மண்டப முதற்கோ டித்தாங்
கென்னையாண் மந்தி ரேச னிமாசலை யாளு மீன்ற
வன்னைவாழ் நிகேத னங்கட் களவிலா வணிகள் செய்தான். (உங)

தினமரு தமர்ந்து போற்றுந் திருத்தொண்டி னிலையர் தாமு
மினமரு தியாமுன் செருண்டாற் றிருக்கணி யிதுவன் றென்று
மனமரு தையுற் றெங்கை வடிவிஞற் றெளிவ மென்று
லனமரு விழைவி குற்று மணிநிலை யளக்கற் பாற்றே. (உச)

உலகெலாந் தழைக்க வெம்மா னுலாவரத் தவஞ்செய் வீதி
நிலனெலாந் தருப்ப ணத்தி னிழலெழத் தூய்மை செய்தத்
தலனெலாம் வெண்ம ணற்றூர்ந் தன்மையிற் றரள முண்மைக்
குலனெலாம் பரப்பி வேணிக் குடிஞையென் னுவப்பச் செய்தான். (௨௫)

அம்மறு கிருபாற் கன்ன லாம்பைபூ கதவொ ழுக்க
மம்மறு கனைய கங்கை யாற்றிரு கரையி லாவுஞ்
செம்மலர்க் கதலி யாதிச் செறிவென நிறுவி மீது
செம்மணித் தொடைய லாதி திகழ்மக ரிகைகள் சேர்த்தான். (௨௬)

இவ்வகை யேனை யாவு மெழில்வகை நிரம்ப முற்றி
யவ்வகை மயன்முற் றென்றுங் கனிலனுக் குணர்த்த வன்றே
னுய்வகை முன்ன மேய வும்பர்கோற் குணர்த்த வொல்லைச்
செய்வகை யமரர் சூழத் தேவர்கோ னெங்குப் போந்தான். (௨௭)

ஆரு ளீர்ப்ப முன்னின் றன்புபின் றள்ள வுள்ளம்
போரு ளுலகெ லாஞ்செய் பெரியநா யகியா னேய
சீரு ளமுத நாதன் சேவடி தாழ்ந்து பல்கா
னேருருள் வெள்ள மூழ்கி நின்றுபஃ றுதிக ளின்றான். (௨௮)

காளகந் தாம கேச கனககந் *தாமா னேச
†காளகந் தார்க்கு மோச கனிகந் தாமா றேச
‡காள¶கந் தாச தேச கனகந்தகந் தாச போச
||காளகந் தாச சூத கானகந் தாசி வாச. (௨௯)

வந்தனை தாண மூன்று மாமறு வழிசெய் வார்க்கு
வந்தனை யினுற் பக்க மளியமுன் பொலிய வாங்கு
வந்தனைத் திங்பமுற்றும் வழங்கமு தேச வானி
வந்தனைத் துலகும் போற்று மாவனத் தரசே போற்றி. (௩௦)

*நாகவ ரசன வாத நகுமணிக் கடிகை யுச்சி
நாகவ ரசன பூசை நயந்தவ தருமே காச
நாகவ ரசன காதி நற்றவ குரவ வாசை
நாகவ ரசனம் போற்று நறியமா வனத்தாய்போற்றி. (௩௧)

---

* தரம் - மலை. † காளகம் - கரியபாவம். ‡ காளம் - மேகம். ¶ கம் - சிரசு. || காளம் - சூலம்.

* நா - கவர் எனப்பிரிக்க.

தருமமால் விடையாய் போற்றி சைலையோர் புடையாய் போற்றி
யிருண்மனத் தடையாய் போற்றி யிதழியந் தொடையாய் போற்றி
சருமமுற் றிடையாய் போற்றி சதுர்மறை நடையாய் போற்றி
வருமயிற் படையாய்போற்றி மாவன முடையாய் போற்றி. (௩௨)

அரிவளர் மனத்தாய் போற்றி யடையலர்ச் சினத்தாய் போற்றி
கரிவள ரினத்தாய் போற்றி காளமேக சனத்தாய் போற்றி
துரிவளர் கனத்தாய் போற்றி தூயசோ பனத்தாய் போற்றி
நரிவளர் தனத்தாய் போற்றி நவிலுமா வனத்தாய் போற்றி. (௩௩)

வேறு.

என்றிவ் வாறு துதிக வியம்பிநேர்
நின்று செங்கர நீண்முடி மேலெழீஇச்
சென்று கூம்புறச் சிந்தை மலர்ந்துதா
னொன்று மன்பி னுவந்திது வேண்டுமால். (௩௪)

ஐய வாரமு தேச வசலைபான்
மெய்ய மந்திர நாத விநாதநிச்
செய்ய வேணிய சின்னஞ் சிறியனே
னுய்ய வேண்டிநின் சந்நிதி யுற்றனன். (௩௫)

உற்று னோனின் சைத்திர வுற்சவ
முற்று நான்முறை தொட்டு முடித்திட
லொற்றி வாழ்விருப் பெய்தினனேழையேன்
*பெற்று கந்நின் பேரருள் வேண்டுமால். (௩௬)

நமை தொன்றுறற் கெண்ணி னடுவிடர்
பமைபு குந்திடும் பண்பினர்க் கும்மெனி
னமை தொன்றுபரி னுயினேற் கன்னவை
பமைமுற் றெய்தல் பகர்தலும் வேண்டுமோ. (௩௭)

செய்த னோத வியாதுந் தெரிதராப்
பைதல் வாழ்க்கையுட் பட்டுழ லேழையா
னெய்த லில்லை யாதமொ ராயிர
மைத செய்துற நண்ணினு மண்ணலே. (௩௮)

திருவு ளம்பொறுத் தாள்கெனத் தேவர்கோன்
மருவு ளம்புயத் தாளின் வணங்கிமேல்
லொருவு ளங்கெது நந்திமுன் வேண்டுபு
தருவு ளம்புரி யாணை தலைக்கொளா. (௩௯)

* பெற்று - கடைக்குறை.

தன்ன தேவர் குழாத்தினைத் தானமைஇத்
தன்ன மும்மனம் வேறொன்றிற் சார்ந்திடா
தின்ன வுற்சவத் தின்புற நீர்விழைந்
தின்ன ரின்ன வியற்றுகென் றேவினான். (௬௦)

ஆசை யாசையிற் போற்று மமரரை
நேச மிக்க நிமல நமாங்கா
ளேசி லாத விழாவிங் கியற்றுதல்
பேசி னுந்துணைப் பேறகொண் டேயெனு. (௬௧)

முகம னோதி யவருண் முதிர்கிதித்
தகவற் கோனவன் றக்கிணை யாதிய
தொகுபொன் னொடோறுங் காலந் தொறுந்தொறு
மிகவ ளிக்கும் வினைகினக் கென்றனன். (௬௨)

எழு நாக்கொ ளெரியினை நோக்குபு
வாழி வேண்டிடந் தோறும் வகைப்பல
கேழின் மிக்க சுவையிற் கெழுமுறு
ஆழி னுக்குந் தொழிலுனக் கென்றனன். (௬௩)

அனில கேட்டி யனகன் சினகாம்
புனித வீதிக ளாதிய பூவெலா
மினிய கண்ணடி யென்ன விளக்குமவ்
வினைப ரிக்குதி யென்று விளம்பினான். (௬௪)

வருண வாதனச் சோதனி மாண்பணி
புரியி டந்தொறும் பூம்புன றாம்பணி
மருவ முக்கின் மெழுக்கு மலர்பணி
யுரிய வுன்றனக் கென்றன னும்பர்கோன். (௬௫)

நிருதி யீண்டு நிருத ரசுரர்கள்
பெரிய பூதர்முற் பேத வகையினோர்
புரியுந் தீவினை யாண்டும் புகாதுநின்
றரிதி னோம்பனிற் காமென் றறைந்தனன். (௬௬)

நடுவ கேள்வரு நாற்புறத் தோர்களு
மிடைநெ ருக்கை நடுவின் விலக்கிநின்
றிடரு றுநெறி செல்ல வியக்குகோ
லுடைய கைத்தொழி னிற்கென் றுரைத்தனன். (௬௭)

அனுமதிபெற் றகமதியா னைதாச வனுஞையெனும்
வினைவிளக்கி யோதியுணர் வேதியர்தம் மனுஞையும்பெற்
றெனையருளு மமுதேச னிமாசலபூ சனைசிறப்ப
வினிதுபுரிந் தெதிர்வேண்ட லெனுந்தேவா னுஞைபெற்றார். (அ0)

அக்கடவுண் மாமறையோ ரனையமகோற் சவமிடையோர்
விக்கினமு முறாதினிது வேண்டியவா முடித்தருள்வான்
மிக்கமறை முதற்பொருளாம் விநாயகனை விதிமுறையாற்
பொக்கமிலாப் பேரன்பாற் பூசித்தா ரருள்பெற்றார். (அக)

பின்னனைய விழாவினுக்காம் பெருதியந் தூய்தாக
வன்னதனைச் சனைபுண்ணி யாகவா சனமாதி
முன்னருளுந் றினர்வாத்து சாந்திவினை முறைபுரிந்தார்
தன்னிகர்மா மறைபரவுந் தனிவில்வ தருமூலம். (அ௨)

தனிமுத னாதனிரு தனையொடு மிடத்தமர்ந்த
வனிதையொடும் பிதாவிருகால் வாங்கியவோர் காவினொடும்
புனிதமயிற் றேவினொடும் புடைதிமிர்பல் வரிசையொடு
மினிதினெழுந் தருளிவீற் றிருந்தருளப் புரிந்ததற்பின். (அ௩)

விதிமுறையிற் பூசனையவ் விருக்கமூ லத்தியற்றித்
துதிசெய்திருத் திசையதன்பாற் றொட்டெடுத்துப் பட்டடுத்த
கதிர்மணிசூழ் பொற்கலைத்திற் கைக்கொண்டு பக்கமுறப்
புதியமதி வேணியொடும் பொற்கோயில் புக்காரால். (அ௪)

இன்னமுறை யேதிருச்சங் கிரகணமாங் கியற்றியபின்
னன்னதிருத் திசைமுக்கூ றாக்கியவை யொவ்வொர்வகைச்
சொன்னமுறைப் பாலிகையிற் றூயேற்றின் றுவசமொடு
மன்னுவிழாத் தீர்த்தமென்மு வகைக்குறித்தா முளைதெளித்தார். (அ௫)

இவ்வகைசெய் தன்றூரார்ப் பணமிராட்சா பந்தனமீற்
றெவ்வமறப் புரிந்துவிடை யெழுதுபடம் பூசித்துத்
தவ்வியவ சாதிவா சனம்பேரி தாடனமுற்
கைவருபல் வினைகளுமங் கிசதுமெல் லியின்முடித்தார். (அ௬)

வண்டிமைகா வலர்களுமாங் கிருந்தொண்டு புரிந்துறினும்
பண்டிசைநால் வழாதுதிசா பந்தனமம் முறைபயிற்றி
வண்டருமக் கிராமதேவ தார்ச்சனமு மாபியற்றித்
தொண்டர்மகிழ் தாவிமயத் தோகையொடு மமுதேசன். (அ௭)

தனக்கினிய விசேடபூ சனையாற்றி மகிழ்ந்தேத்தி
மனக்கினிய வருடருசோ மாக்கந்தர் தமைத்தொண்ட
ரினக்கினிய மண்டபத்தி னெழுந்தருள்வித் தெதிர்மாயின்
வனக்கினிய மால்விடைமுன் வைத்தபடத் தெடுத்துயர்த்தார். (அஅ)

ஓதுமுறை மாதுவசா ரோகணமீ தருற்றியுடன்
மேதகவெண் கொடிகளினும் விடையுயர்த்தாங் குடன்யாக
வேதிதிகழ் சாலைபுகூஉ மேவுபரி வாரமுடன்
மேதகுயா கோகடம் விதிமுறைபூ சனையாற்றி. (அ௯)

கோதான விலக்கிலவ குண்டமுற முறையங்கி
யாதான முதலான வாற்றியா குதிகளொடு
மீதானம் புரிந்தீண்டிவ் விதத்தங்கி வினைகிகழ
மாதான மமர்ந்தருள்சோ மாக்கந்தர் திருமுனுமீடு. (௯0)

அளிபெருக கனிசிறப்பி னமர்தருபூ சனையாற்றிக்
களிபெருக வாங்கோளி கவினவிரண் டணிக்கலாற்றி
ஞெளிபெருக வெம்பெருமா னென்றினுமை யொன்றினைந்து
தளிபெருக வலம்போந்து நகவின்மகச் சாலைகளில். (௯க)

எழுந்தருளி வந்தனைய விருஞ்சாலை யயிமுகமாய்த்
தழுந்தகைய பச்சிமநேர் தான்பூர்வ முகத்தருளே
பொழிந்தருளி நின்றருளப் புரிந்துமகம் பூர்த்தியுற
மொழிந்தமுறை பூரணு குதியினிது முடித்ததன்பேம். (௯உ)

அன்னமகச் சாலைதொ வமர்ந்துயர்ந்த வேதிகையின்
மன்னமுத நாதனிடம் வளர்பெரிய நாயகிக்கு
சொன்னகடத் திரும்பூசை தொடாவிரு பாங்களிலு
நன்னர்மகா தீபாதி நலம்பெருகு முறைபுரிந்தார். (௯௩)

சான்றசிவத் துவிசரிவர் தம்பருமப விம்பமொனு
மூன்றினுமிம் முறைபூசை முடித்திடவத் திருக்காட்சி
யேன்றுலகுக் களித்தவணின் றெழுந்தருளி யெம்பெருமா
ஞன்றதிரு வீதியெலம் மன்னையொடு முலாத்தருவான். (௯௪)

பானுமதி யெனுமிருவர் பல்லுருக்கொண் டெம்பெருமாற்
கானபணி புரிந்தாய்வா னடுத்திருபால் வாலேய்ப்ப
மேனிமிர்வுற் றவிர்செம்மை வெண்மையன விரிகவிகைத்
தானகிலா நிரையாகக் கவிந்துமிழ னனிபாப்ப. (௯ரு)

ஒருபாறன் பாலாக வுமைகவர்ந்தா டவம்புரிந்தா
ளிருபாலும் பெறப்பணிமீண் டியற்றுவலென் றடுத்தனள்பல்
லுருவாகிக் கங்கைதனை தொண்டிவைவீ சுறுசெயல்போற்
றருவான மகளிர்பலர் சாமரைகள் புடையிரட்ட. (௯௬)

பின்புதமை மடிக்கிடத்திப் பெருந்தானைச் சிறுகால்செய்
தின்புதவு மம்மையப்பர்க் கீண்டிதுசெய் திடன்முறையென்
றன்புதரு தொண்டர்பல வருஞ்செயல்வீ சனங்கொண்டு
முன்புதனித் தனிவிசிறு முழுமணக்கான் முகமடுப்ப. (௯௭)

தொடர்பிருபா லால்வட்டஞ் சுருட்டிகிரை யாதிசெல
மிடைபுநெருக் கொதுக்குமுடி விடையொளிர்பொற் சோதுலவ
விடியகல்வான் பறந்தோடு மியலிருபுள் ளிவைமுதல
கொடிகடமக் கோரமசாய்க் குலவுவிடைக் கொடிமுனுற. (௯௮)

யாமிதுகா றந்தோநம் மிருநடனத் திறனோரா
வூமர்முன நடித்தனுத்தோ மோதுநட விகற்பமெலா
மேமுறவோர்த் திடுமெம்மா னிதுவன்றோ பெரும்பேறென்
றுமகல்வா னரமகளி ராங்கனெதிர் நடித்துவர. (௯௯)

நாதமெலா மொடுங்குறுமுன் னெண்ணியவா பின்புபல
பேதமுற விறைவன்முனம் பெருகவிரிந் தெழுவவென
வேதவொலி தமிழ்வேத மிக்கவொலி தொக்கபல
கீதவொலி பல்லியத்தின் கிளவொலிகள் வளர்ந்துவர. (௧00)

இருபாலு மெசுர்வேத மெடுத்தோது மிசைபெருக
மருவாகின் றேனையமா மறையொலிபின் மல்கிவரத்
தருவாய்மைத் தமிழ்வேதஞ் சந்நிதியின் மன்னிவர
வொருவாத சிவநாம கீர்த்தனத்தி ரோசையெழ. (௧0௧)

வீணைமுதற் றந்திரிகண் மேயபல கருவியிசை
காணமர்வேய்ங் குழலாதி துளைவகைய கருவியிசை
யேணமர்தோற் கருவியிசை யியைதருதா ளத்தினிசை
கோணமிதாய் மிடற்றெழுந்து குலவுமிசைக் குலம்பெருக. (௧0௨)

வந்தியர்மா கதர்சூதர் மலிதருமங் கலம்வீசம்
பந்தியமா புகழ்முறையே பண்புறநின் றெதிர்பாட
முந்தியசீர்ப் பாவாணர் முதிர்சுவைநாற் கவிசூட
விந்தியகீத் தவர்போற்று மிருந்துதிபற் பலகூட. (௧0௩)

வேறு.

பின்னர் வழிநாட் காலையிலெம் பிராட்டி யோடு மாந்தோளி
தன்னி விறைவ னுலாக்காட்சி தந்தந் நாளின் மாலையினிற்
பன்னவரிய சித்திரைப்பூம் பந்தர் நிழற்கீ ழமுதேசன்
மன்னு காழி மணியெழுச்சி மாண்பு நினைப்பித் துலாப்போந்தான். (௧௧௨)

மூன்றா நாளிற் காலையுலா முன்னை முறைபோந் தன்றிரவிற்
றூன்றூழ்ந் தல்குற் குடைந்தபணி தன்னைச் சுமப்ப வுமைபோதக்
கோன்றூ னிவண்சார் பிரிவாற்றூக் குணத்தி னடைந்து தரித்ததெனச்
சான்றோர் பரவு கயிலாயத் தனிவா கனமெம் பிரானூர்ந்தான். (௧௧௩)

வருநான் கெனுநாட் காலையுலா மயிற் போந்தவ் விரவினடை
தெருளோ திமமூர்ந் துமைபோதத் திகழ்சே வடிமூன் முடிசூட்டும்
பெருவாழ் விதுமீ ததிகமெனப் பேணு நந்தி மிசையவற்குப்
பொருவா முன்னூற் சிவஞான போத மளித்தோ னுலாப்போந்தான். (௧௧௪)

ஐந்தென் றிடுநாட் காலையுலா வடைவிற் போந்தத் திசிகரத்து
கந்தின் சொல்லா ரமுதருத்து கருணைக் கிதுகைம் மாறெனல்போன்
முந்தூங் கிளியூர் தாவுமைமெய் முதல்வன் கணேச னெனற்கிசைய
வந்தூம் பூதந் தனைவசந்த விழாக்கொண் டூர்ந்தா னும்பர்பிரான். (௧௧௫)

இருமூன் றெனுநாட் காலையுலா வெழிலார் தரப்போந் தந்நிசியெம்
பெருமான் றனையூ டலின்வெல் லும்பெற்றி புறத்துந் தெரிப்பதென
வரியூர்ந் துமைபோ தரவெம்மா னயிரா வணமூர்ந் தநுகயிலைக்
கிரியூர் பட்ட வர்த்தனமாங் கிறைமை தெரித்தாங் குலாப்போந்தான். (௧௧௬)

அறமே வேழா நாட்காலை யருமை யுலாப்போந் தன்றிரவி
லறமே யுருவா மென்றும்வள ரறமே புரிவா ளதுதெரித்தாங்
கறமே யுருவாம் விடையூர வண்ணா லுருவிற் கலந்திடர்முற்
றறமே வியதோர் தொடர்புணர்த்தாங் கருமால் விடையூர்ந் தருள்புரிந்தான்.

இருநான் கெனுநாட் காலையுலா விணங்கப் போந்தெவ் வுயிர்க்கு முறை
யொருவா தாட்டி வளர்க்குமுயிர்த் தாய்தானென்ப துணர்த்தாங்குத்
திருவார் காம தேனுவுமை செலுத்த மால்பின் னவதாரத்
தருவா யருள்வேட் டிவண்மேற்கொண் டேற்று னெனப்பாய் மாலூர்ந்தான்.

ஒன்பா னாளி லுமையொருகோட் டும்பன் மயிற்சேய் சண்டேச
னொன்பா ரொல்வோர் மாமணித்தே ரிவர்ந்து திருமா மணிமறுகி
லன்பா லுடன்போ தரவெம்மா னமுத நாத னணிமணித்தே
ரின்பா லூர்ந்தாங் கருட்கோலத் தெழிலார் காட்சி யினிதளித்தான். (௧௧௯)

ஒருபா னுளிற் சிறுகாலே யுடையா னுடையா னுடன்காட்சி
தருவாழ் வருளி யுவந்துதனித் தனிவெள் விடைமே னிருமலைமாந்
தெருண்மா தீர்த்தந் தனிற்போந்து தீர்த்தங் கொடுத்தாங் குலகமெலாம்
பெருவாழ்வளித்தாங்கருள்வெள்ளப்பெருநீர்தோய்ந்தின்புறப் புரிந்தான். ()

பின்னர் யாக விசர்ச்சன நுல் பிறங்க வாற்றி யாகேச
சொன்ன கடநீ ரமுதேச சுயம்பு மூர்த்திக் கபிடேக
நன்ன ரியற்றி விசேடார்ச்ச னைமுன் புரிந்தவ் வமுதேசன்
முன்னர் விடைமான் கொடியிறக்கி முதரீக் கூர்ந்தார் சிவத்துவிசர். (கஉக)

ஈற்றிற் புரிசண் டேசவிழா விலங்கப் புரிந்து மெண்டிசையும்
போற்றுபால ரங்கு ரங்கள் புனைந்த விரட்சை விசர்ச்சனங்க
ளாற்றிற் புரிந்தா ரமுதேச னன்னை பெரிய நாயகிதன்
சாற்று கலியா ணைற்சவமுந் தயங்க மரபின் முறைபுரிந்தார். (கஉஉ)

வருநா டோறுந் தனிவசந்த மணிமண் டபத்தில் வீற்றிருந்து
திருவார் விழாக்கொண் டருளியவச் சிறப்பி னனந்த மடங்கின்றுட்
பெருகா நிற்பப் புதுநீர்சூழ் பிறங்க யாத்து நறுமலர்பெய்
தொருவா நாப்பண் மணிபீடத் துமையோ டுமையா ளமுதேசன். (கஉங)

தனக்கு நபன கும்பாதி தாபித் தருச்சித் தாயமரபின்
மனக்கொண் டினிய வபிடேக வகைகள் பெருக நனிபுரிந்தோ
தனக்கு வாஸ்வர்க் காதிவே தனமா பூசைச் சிறப்பியற்றி
மனக்கு மகிழ்கூர் விடாயாற்று மாண்பின் விழாச்சீர் வயக்கினார். (கஉச)

உடனுங் கெழுந்துட் சூழ்ன்முத லோரைந் தாவ ரணங்களினும்
புடைமா மறைதே வாரசிவ புரா ண திருத்த வாத்தியங்க
ளிடனீ ளோதை யோவொன்று யிலங்கி முறையே தொடர்ந்துவர
நடநா யகன்சூழ் போந்திருக்கை நணிவீற் றிருக்கு நலம்புரிந்தார். (கஉரு)

சாற்று மிவ்வா றமுதேசன் சைத்தி ரோற்ச வஞ்சிறப்ப
வாற்றின் முடித்த சிவத்துவிச ரவிர்வெண் பூதி பிரசாதம்
போற்று வலாரிக் களித்தாசி புகன்றிவ் வரிய பெரும்பயனி
யேற்று வாழ்கென் றுபசரித்தா ரிறைஞ்சியேற்றாங் குடல்பொடித்தான்.

பின்ன ரனைய சிவத்துவிசப் பெரியர்க் கரிய வணியாதி
மன்ன வணிந்து மாபூசை வயக்கிச் சிவிகை களி னிவர்ந்தாங்
கன்னர் வீதி வலம்போந்தாங் கமரா சிரியோற் சவமுறையே
நன்ன ரியற்றி யடியுறைக ணயப்ப நனிதந் துளமகிழ்ந்தான். (கஉஎ)

அடைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்துருகு மன்பு பெருக வருள்வெள்ளங்
குடைந்து பணிந்தாங் கமுதேசன் குளிர்தா மரைச்சே வடிநிழற்கீழ்
மிடைந்து தனிவீற் றிருக்குமனை மீட்க லாற்றான் புறவிடைபெற்
றடைந்து வினைநீங் கியமகவா னும்பரோடு மும்ப ருற்றான். (கஉஅ)

என்னை யுரைத்தாஞ் சூதவனத் தெய்தி யுய்ந்தார் பெருந்தொகையோ
ரன்னை யிதனுட் பேருருளுடையா னமுத நாத னடைந்தனவே
முன்னை வினைதீர்த் தருள்வகைகண் முற்று முகம்பற் பலகோடி
தன்னை விலைசெய் துரைப்பினுமச் சேடன் றனக்குஞ் சாற்றரிதே. ()

மலர்மெய்ஞ் ஞான சனற்குமா ரமைந்த விண்ணிநாம் விரிப்பதையென்
னலகி லுயிர்க டிருவருள்பெற் றுயமெய்ந் நூல்சொல் சாதனம்பற்
பலவின் னவையா வருக்குமுறை பயிற்ற வொருமையவைக்கெல்லாந்
திலக மியற்றற் றிலகுமிது சிவபு ராண சிரவணமே. (கங.0)

சிவபு ராண சிரவணமே தெளிநூல் பலசொல் லறங்க ளொன்றுஞ்
சிவபு ராண சிரவணமே சேர்க்குஞ் செல்வத் திறங்களொன்றுஞ்
சிவபு ராண சிரவணமே சேர்க்கு மனைகண் மக்களொன்றுஞ்
சிவபு ராண சிரவணமே சேர்க்கும் பலவா மின்பமெலாம். (கங.க)

சிவபு ராண சிரவணமே சித்த சுத்தி முதலளிப்ப
சிவபு ராண சிரவணமே செறிமும் மலத்தைத் தெறுவதுவே
சிவபு ராண சிரவணமே சீவ குணநீத் தளிப்பதுவே
சிவபு ராண சிரவணமே திகழ்பே ரின்ப மருள்வதுவே. (கங.உ.)

ஆன முறையா லைற்றிடையிக் கருமை திகழுஞ் சூதவன
மேன புராண முழுதேனு மேவு சருக்க மொன்றேனு
மான கவிகள் பலசிலவு மற்றொன் றேனு நியதிபெற
ஞான முறவோ துதல்கேட்ட னயக்கு மவரே பிறந்தவராம். (கங.ங.)

இன்ன சூத வனக்கதையை யெழுது மவரோ டுந்தவர்மேற்
பன்னு முதலி புரிந்தவர்சீர் பாவு மவர்பூ சித்திடுவார்
சொன்ன முறையிற் பதிட்டைபுரி தூயர் முதலோ ரமுதேசன்
றன்ன தருளா லினைத்தவெலாஞ் சார்ந்து வாழ்வார் சாதமிதே. (கங.ச)

என்றுந் தொகையா னந்திமுடித் திசைத்த முறையா லெழுவேட்கை
குன்று தெளிவுந் திருவிரையாக் கலியைக் கடந்து மேற்கூற
னன்று காதென் றமைந்திருந்தா ரென்று முகன்சே யெனச்சூத
னன்று தரித்த முனிகுலத்துக் கறைந்தா னினைக் கமைந்தாரால். ()

வேதம் வாழி முகில் வாழி விளைகூழ் வாழி யுயிர்க்கின்ப
சீதம் வாழி திருத்தொண்டச் செல்வர் வாழி பூதிமுதற்
சாதம் வாழி சித்தாந்த சைவம் வாழி யருளமுத
நாதன் வாழி யனைபெரிய நங்கை வாழி வாழியவே. (௧௩௫)

இந்திரன்றிருவிழாச்சருக்கமுற்றிற்று.

சூதவனபுராணம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-௩௫௨௦.

---

சிவமயம்.

# சூதவனபுராணவசனம்.

## பாயிரம்.

சத்தசாட்குண்ணிய பரிபூரண பரமபதியாகிய சிவபெருமான், உலகர் யாவரும் வேதார்த்தங்களை ஒன்றொன்றாக ஆராய்ந்து *நேதிகளைந்து அவற்றுள்ளே இது உபசாரம் இது உண்மையென்றுள்ளபடி தெளிந்து, அத்தெளிவினால் மலைவில்லாத பதிப்பொருள் ஒன்றே; அது இலைமறைகாய்போல் வேதத்துள்ளே விளங்குவதாம்; அப்பதி உமாபதியேயாம். இதுவே எவ்வாற்றானும் நிச்சயமென்று தேர்ந்துகொள்ளுதல் மிகவும் அரிதாதலால், அந்தவேதத்தினுட்பொருளை அவ்வுலகர்யாவரும் எளிதினுணர்ந்துய்க வென்னுந்திருவுளப்பெருங்கருணையினாலே வெளியிட்டருளிய புராணங்கள் பதினெட்டாகும்; அவற்றுள்ளே அக்கினிபுராணம் ஒன்று, சூரியபுராணம் ஒன்று, பிரமபுராணம் இரண்டு, விஷ்ணுபுராணம் நான்கு, சிவபுராணம் பத்தாகும். அச்சிவபுராணங்களுளொன்றாகிய பௌஷ்யோத்தரபுராணத்திலே க்ஷேத்திரகண்டத்திலே ஸ்ரீபிரகந்நாயகிசமேதஸ்ரீமந்திரேஸ்வரஸ்வாமி அநவரத சாந்நித்தியராய் வீற்றிருந்தருளுகின்ற திருவசாத்தானமாகிய சூதவனஸ்தல மான்மியம் விளங்குகின்றது.

இதைச், சிவபிரானுமாதேவியார்க்குபதேசிக்கும்போது, அவர்மடிமீது வீற்றிருந்துகேட்டருளியஸ்ரீசுப்பிரமணியப்பெருமான் நந்திதேவர்க்குபதேசித்தருள, அவர் சனற்குமாரருக்கு, அவர் வியாசமுனிவருக்கு, அவர் எனக்குபதேசித்தருளினரென்று சூதமுனிவர் சொல்லிய இச்சூதவனமான்மியமாகிய வடமொழியைத் தமிழ்நிலத்தாருணர்ந்துய்யும்பொருட்டுத், தமிழ்மொழிபெயர்த்துத்தருகவென்று அச்சூதவனத்தின் கீழ்பால் ஒருகுரோசத்திலுள்ள அலங்காட்டிலே, பூவைசியர்குலத்திலே, கொடை நடையாதியுத்தமகுணங்களானிறைந்த † இராமநாதச் செட்டியார் செய்த அருந்தவப்பயனுதித்து,

* நேதி - ந - இதி எனப்பிரிபட்டு, "அல்ல என்று" எனப் பொருள்படும் வடமொழி. எனவே வேதப்பொருள்களை ஆராயுங்கால் பதியிலக்கணங்கள் அமையப்பெறுதனவற்றை இது பதிப்பொருளல்லவென்று நீக்கி என்பதாம். பதியிலக்கணங்கள் அநாதிபோதாதி அஷ்டமங்கள குணங்களாம்.

† இவரை ராமசாமிச்செட்டியாரென்றும் வழங்குப, நாதனெனினும் சாமியெனினும் பொருளொன்றே.

தருளுஞ் சிவபிரான் அன்பர்களுக்கு அருளிய திவ்யசரித்திர மகிமைகள் அளவில்லாதனவாகுமென்று சொல்லியருளினீர்கள். அம்மகிமாவிஸ்தாரங் கேட்பதில் மிகுந்த ஆசையுடையேம், அநுக்கிரகித்தருளுக என்று வேண்டிக்கொண்டார்கள்.

சூதமுனிவர், மிக்க விருப்போடு ஸ்ரீபிரகந்நாயகி சமேதஸ்ரீமந்திரேஸ்வரஸ்வாமி பாதபங்கயங்களைச்சிரமேற்கொண்டு தியானித்திருந்தபின் முனிவர்களே ? உங்கள் கேள்வி உலகெலாம் உய்தற்கு ஒரு முக்கியகாரணமுமாகும். என்மனமும் அதனையே விரும்பியது. இச்சிவபுராணசிரவணமே யாவர்க்கும் சர்வாபீஷ்டங்களுங்கொடுப்பது. நீங்கள் கேட்ட இச்சூதவனமான்மியம் அபக்குவர்களுக்குச் சொல்லக்கூடாத அதிக ரகசியசரித்திரமாகும். இதனை ஸ்ரீ நந்திதேவர் சனற்குமார முனிவர்க்கு உபதேசித்தருளினரென்று அம்முறையே சொல்லத்தொடங்கினர்.

ஸ்ரீகைலாசத்திலே, செம்பொற்றிருக்கோயிலிலே, ஸ்ரீகண்ட பரமேஸ்வர சந்நிதானத்திலே, திருவருள்வெள்ளமென்றே யாவருந் துதிக்கின்ற அமுதமே நிறைந்துள்ள சிவதீர்த்தமொன்றுள்ளது. அதன் கரையிலே, ஆயிரக்கால் மண்டபமொன்றுண்டு, சுத்தவித்தியாமயமென்றே யாவராலுந் துதிக்கப்பெறும். அதனிடத்து உத்தமமுனிவர்கூட்டமும் வேதசிவாகமாதி சாஸ்திர முழக்கமும் எப்பொழுதும் நிறைந்து கொண்டேயிருக்கும். அம்மண்டபமத்தியிலே, வியாக்கிராசனத்திலே வீற்றிருந்தருளுகின்ற ஸ்ரீநந்திதேவரைச் சனற்குமாரமுனிவர் வணங்கிப் பூசித்துத் துதித்து அஞ்சலியஸ்தராய் நின்று, எம்பெருமானே ? தாங்கள் முன் உபதேசித்தருளியசூதவனமான்மியத்தை இன்னும் விஸ்தாரமாகக்கேட்பதில் விருப்பம் மேலிடுகின்றது; திருவருள் புரிகவென்று வேண்டிக்கொள்ளத், திருநந்திதேவர், அத்தலத்தையும் விநாயக சுப்பிரமணிய சாம்பசிவ பாதங்களையும் வணங்கித் துதித்து, மகது அருள்வழிப்புத்திர சிகாமணியாகிய சனற்குமாரனே ? அவ்வியாஜகிருபாமூர்த்தியாகிய பரமசிவன் உலகெலாம் உய்யும்பொருட்டு அனவரதசாந்நித்தியமாய் வீற்றிருந்தருளுகின்ற சூதவனமாகிய உத்தம சிவஸ்தலமானது, அத்தியந்தநிர்மல ஸ்தானமாய்த் தென்சமுத்திரத்திலுள்ள ராமசேதுவின் ஈசானதிசைவிளங்கவீற்றிருப்பது. இந்த உத்தம சிவஸ்தலமே இப்பூமிக்கு திருவருட்டிலகமாய் விளங்குவது. தன்னையடைந்தார்க்கு மகாபாதகாதி சமஸ்த பாவங்களும் நீக்கிச் சர்வாபீஷ்டங்களுங் கொடுத்து மோக்ஷத்தையுங்கைப்பொருளாக்குவது. இத்தலத்தின் பெருமை எத்துணைச் சிறந்தோராலும் எத்தனை கற்பகாலம் இருந்து சொல்லினுமுடியாது. அங்ஙனமாகவும் நீ அதனைக் கேட்பதிற் கொண்ட பேராசையை மறுக்க முடியாமையால் ஒரு சிறிது சொல்லத் துணிந்தோம். இத்தலமான்மியம் பதினொன்று பகுதியாய் உள்

த்திருந்து சிவதிருத்தொண்டு செய்பவர்கள் திருவருட்புவனராஜாங்கபதிகளாய்த்தேவரெல்லாந்தமக்குத்தொண்டுசெய்யவீற்றிருப்பார்கள். அமிர்தருத்தவனமென்னுந்திருநாமத்தை ஒருமுறை ஜெபித்தவர்கள் மிர்தம் நீங்கப்பெறுதலால்அமிர்தராகின்றார்கள். திருவுசாத்தானமென்னும்நாமம் ஜெபிக்கிறவர்கள் கீர்த்திலெக்ஷ்மி அன்றாதி அஷ்ட லெக்ஷ்மி சிவஞான லெக்ஷ்மி முதலிய லெக்ஷ்மிகளெல்லாம் உசாவுகின்றதானமாகப் பெறுதலால் அவர்களும் திருவுசாத்தானமாவார்கள். இத்தலத்திற்செய்கின்ற செபதபயாகாதிகர்மங்கள் ஒன்று அநந்தமாகும். அந்நியதலங்களில் அநேககற்பகாலம் பஞ்சேந்திரிய நிக்கிரகத்தோடு செய்யப்படும் பரிசுத்த தவப்பிரயோசனம் இத்தலத்தின் எல்லையை அடைந்தமாத்திரத்திற் கிட்டுவதாகும். இப்படியானால் இத்தலத்தை யடைந்து சிவதீர்த்த ஸ்நானஞ் செய்து ருத்தவனேசர் சந்நிதிவந்து தரிசித்தல் தியானித்தலாதி செய்கின்றவர்களுக்கு இத்தலம் கொடுக்கின்றபலன் என் சொல்லவொட்டப்படுமோ. கணிதநூல் வல்லார் கிளந்தெடுத்துக்கூறும் பெருந்தொகையுள் அப்பலனின் பெருந்தொகைச் *சிகையும் உட்படா. இனிப்பலவாறு விரித்துக் கூறுவதென்னை. இத்தலத்தில் இடையறாது வசித்துப் பெரியநாயகியையும் ருத்தவனேசரையும் தினமும் வழிபடு நியமமுடையோர் பெறும் பிரயோசனம் †கைம்முதிக நியாயத்தால் எண்பெருக்கித் தெரிந்துகொள்வதும் அசாத்தியமே. இதனை மெய்யன்போடுபடிப்பவர்களுங் கேட்பவர்களும் சமஸ்த தீமைகளு நீங்கித் திருவருள்பெற்றுவாழ்வார்கள்.

தலவிசேடமுற்றிற்று.

---

## தீர்த்த விசேடம்.

—(:o:)—

சனற்குமாரனே! மார்க்கண்டாதிமுனிவர்களாலே சகல புவனங்களிலுமுள்ள சிவதீர்த்தங்களெல்லாம் இத்தலத்திலுள்ளே வந்து கூபதடாகாதிரூபங்களாய் என்றும் வசிக்கின்றன. இவற்றின் நாமவரிசையே அளவில்லையாதலால் அவற்றுட் சில தீர்த்தமாத்திரம் விளக்குகின்றேமென்று திருநந்திதேவர் கூறுகின்றார்.

திருக்கோயிலினுள்ளே, அக்கினிதிசையிலே ஒரு சிவதீர்த்தம் உள்ளது. அது, நிர்மல தீர்த்தமென்றும் மணிகர்ணிகாதீர்த்தமென்றும் பெயர்பெறும்.

---

* ஈண்டுச் சிகையென்றது ஆயிரத்திருநூற் றைம்பத்துமூன்று என்பதில் மூன்று என்னும் இலக்கம் போல் வருவனவற்றை யென்க.

† கைம்முதிகம்—இதற்கு இப்படியானால் இனிச்சொல்வதெப்படி யென்னுந்தாற்பரியத்தை விளக்குவது.

## மூர்த்திவிசேடம்.

சனற்குமாரனே? இனி மூர்த்திமகிமை கேட்பாயாகவென்று திருநந்திதேவர் கூறுகின்றார். நிஷ்களமாகிய பரமசிவன் ஜனனமரணப்பட்டுப்பற்பல சரீரமெடுத்துழல்கின்ற சீவகோடிகள் எளிதிற்றிருவருள்பெற்றுய்கவென்று திருவுளங்கொண்டருளிய பெருங்கருணையினாலே, ஒளிப்பிழம்பாய் அமிர்தமய சுயம்புலிங்க ரூபமாய் இச்சூதவனத்தில் ஓர் மாவிருக்ஷ நீழலிலேதோன்றி, வில்வம் கொன்றை மல்லிகை முல்லை முதலிய மரங்களுங் கொடிகளும் மலிந்து சூழ்ந்து மிக நெருங்க மத்தியிலேவீற்றிருந்தருளும். இங்குவந்து இச்சுயம்பு மூர்த்தியை ஆதிசேடன் வருணன் மார்க்கண்டன் பிரமன் முதல் அநேகர் வழிபட்டுத் தங்கள் தங்கள் இஷ்டசித்திகளெல்லாம் பெற்றார்கள். இந்த அமிர்த சுயம்பு மூர்த்திக்கு மார்க்கண்டேசன், வருணேசன், அநந்தேசன், மந்திரேசன், அமிர்தசூதவனேசன், திருவுசாத்தானேசன், அமிர்தலிங்கேசன் முதலிய அநேகந்திருநாமங்களுண்டு. முற்றும் விதந்துகூறுதல் எவர்க்கும் அசாத்தியமே. இத்திருநாமங்கள் சப்தகோடி மகாமந்திரங்களினும் மேன்மையுள்ளன. இவற்றுள்ளே, மார்க்கண்டேச நாமஞ்செபித்தவர்கள் யமனையும் வெல்லும் பெருவலிபெற்று வாழ்வார்கள். வருணேச நாமஞ்செபித்தோர் சர்வரோகமுநீங்கிச் சுகமுற்றுவாழ்வார்கள். அநந்தேச நாமஞ் செபித்தோர் சகலகலாவல்லவர்களாய் உண்மைஞானம் பெற்றுவாழ்வார்கள். மந்திரேசநாமஞ் செபித்தோர் பூதவேதாள பிரமராக்ஷதாதிகளால் வருங்கஷ்டங்கள் முழுதும் நீங்கப்பெறுவார்கள். சூதவனேச நாமஞ்செபித்தோர் திருவருள் விலாசமாகிய குளிர்நிழலிலிருந்து வாழ்வார்கள். திருவுசாத்தானேச நாமஞ்செபித்தோர் முத்தி முதலான சகலதிருக்களுந் தம்மைச்சேர்ந்திருக்கப் பெறுவார்கள். அமிர்தலிங்கேசநாமஞ் செபித்தோர் மிர்தம் நீங்கி நித்தியானந்த வாழ்வுபெறுவார்கள்.

இத்தலத்திற் சமஷ்டிரூபமாய் விளங்கும் இச்சுயம்புலிங்கமொன்றே, எல்லாத்தலங்களிலும் வேறுவேறு சுயம்புலிங்கங்களான வியஷ்டிரூபங்களாய்விளங்குகின்றது. வழிபடுகின்றமெய்யன்பர்க்கு அமிர்தத்துவத்தைக்கொடுக்குஞ்செயலையன்றியும் வெண்ணிறத்தாலும் அமிர்தலிங்கமென்பதை விளக்குகின்றது. பலவாக்கூறுவதென், இந்த அமிர்தசுயம்புமூர்த்தியைப்போற்சிறந்த மூர்த்தி எவ்விடத்துமில்லையென்று அக்கினியைக்கையிலேந்திச் சத்தியஞ்செய்வோம். இச்சிவபிரானை உதயகாலத்திலே மெய்யன்போடுதரிசிக்கப்பெற்றோர் உண்மைஞானிகளிற்கூறுகின்றசமஸ்ததர்மங்களுந்தம்மிடத்தில் விளங்கப்பெறுவார்கள். உச்சிக்காலத்திலேதரிசிக்கப்பெற்றோர்சமஸ்தசித்திகளும் நிறையப்பெறுவார்கள். சாயங்காலத்திலே தரிசிக்கப்பெற்றோர் சமஸ்த இன்பங்களும்பெறுவார்கள். அர்த்தயாமகாலத்திலேதரிசிக்கப்பெற்றோர் பிறந்

